பொருளடக்கம்

# காலஞ் சென்ற தேவனுக்கு

எழுத்தாளர், அறிஞர் புகழுரை

அவரது நாவல்கள், சிறுகதைகள், கட்டுரைகளை நூல்கள் வடிவில் வெளியிடக் கோரிக்கை

"ஸ்ரீ ஆர். மகாதேவனின் ("தேவன்") அகால மறைவால் தமிழ் உலகம் ஒரு சிறந்த மேதையை, தவப் புதல்வரை, இலக்கியச் செல்வரை இழந்து விட்டது. பக்தர் குழாம் முருகனின் சிறந்த தொண்டனைப் பறிகொடுத்து விட்டது. தமிழ் எழுத்தாளர் சங்கம் ஒரு அரும் பெரும் தலைவனின் பிரிவால் பரிதவித்து நிற்கிறது" என்று நேற்று மாலை "தேவன்" மறைவுக்குத் துக்கம் தெரிவிக்க, தமிழ் எழுத்தாளர்கள் சங்கம் கூடியிருந்த கூட்டத்தில் பேசிய சிறந்த தமிழ் எழுத்தாளர்களும் மேதைகளும் பிரமுகர்களும் மனம் வெதும்பிக் கண்ணீர் மல்கக் கூறினார்கள்.

பண்பாட்டின் உறைவிடமாக விளங்கிய ஸ்ரீ தேவனின் அருமை பெருமைகளையும் மேதைமையையும் இலக்கிய வளர்ச்சித் தொண்டினையும் தமிழுலகம் என்றென்றும் உணரும் வகையில் அன்னார் எழுதியுள்ளவை அனைத்தையும் நூல்கள் வடிவாக வெளியிட வேண்டுமெனப் பலர் கோரினர்.

செயின்ட் மேரிஸ் ஹாலில் நடைபெற்ற இக்கூட்டத்திற்குப் பேராசிரியர் ஸ்ரீ ரா.பி. சேதுப் பிள்ளை தலைமை வகித்தார். மண்டபம் நிறைந்து தமிழ் அன்பர்கள் குழுமி இருந்தனர்.

துக்க தீர்மானம்

கூட்ட இறுதியில் அனைவரும் எழுந்து நின்று துக்க தீர்மானம் நிறைவேற்றி, கூட்டம் மறைந்த பெரிய தமிழ் எழுத்தாளருக்கு தன் அஞ்சலியைத் தெரிவித்தது.

நிறைவேறிய தீர்மானமாவது:

"தமிழ் எழுத்தாளர் உலகில் தலை சிறந்தவர்களில் ஒருவராகத் திகழ்ந்த ஸ்ரீ தேவனின் அகால மறைவு குறித்து இக்கூட்டம் தனது ஆழ்ந்த துக்கத்தைத் தெரிவிக்கிறது.

'உத்தமர் இலக்கணத்திற்குப் பொருந்தியவர்'

ஸ்ரீ மீ.பா. சோமசுந்தரம் பேசுகையில், அருமை நண்பர் மறைந்த துக்கம் இன்னும் பசுமையாக மனதில் இருப்பதால் அவர் இலக்கிய மேன்மை பற்றி ஆராயத் தெளிவு இல்லை என்றார். "துன்பத்தை எவன்

செய்வதில்லையோ அவனே உத்தமன் என்ற ஆங்கிலப் பேராசிரியர் இலக்கணத்திற்குப் பொருத்தமானவராகத் திகழ்ந்தார். தம் சொல், எழுத்து எதனாலும் பிறர் மனத்திற்குத் துன்பம் புரிந்தவரன்று அவர். ஹாஸ்யம் என்று பிறர் மனது நோகக் கூடாது என்று எழுதும் ஹாஸ்ய எழுத்தாளர்களுக்கு அவர் முன் மாதிரி. சொல், எழுத்து, நடத்தையில் உத்தமராக விளங்கிய மேதை அவர்" என்றார் ஸ்ரீ சோமு.

தமிழின் இரு போர் வீரர்கள்

ஸ்ரீ டி.எம். கிருஷ்ணசாமி ஐயர் பேசுகையில் தமிழும், பண்பும் தாழ்ந்த நிலைமாறி மேலோங்கி வளர்ந்து முன்னேற முதன்மையாக இருந்த பெரும் போர் வீரர்கள் - பெரிய ஜெனரல்கள் - கல்கியும், தேவனும் என்றார். "அவர்கள் போன்றோர் மறையும் துர்ப்பாக்கியத்தால் மனத்தளர்ச்சி அடையக் கூடாது. அவர்கள் எந்தப் பெரிய காரியத்திற்குப் பாடுபட்டனரோ, பெரும் போர் வீரர்கள் போல் முயன்றனரோ, அந்தத் தமிழ் நிலை உயர்வு, எழுத்தாளர் நிலை உயர்வு, பண்பாடு உயர்வு முதலியனவற்றிற்குத் தொடர்ந்து முயன்று மேல் நிலையை அடையப் பாடுபடுவதன் மூலமே அவர்களை இழந்த துக்கத்தை ஆற்றிக் கொள்ளலாம். தேவனின் எழுத்தை அழிக்க முடியாது" என்றார் திருப்புகழ் மணி.

'இலக்கிய எல்லை விரிவடையச் செய்தார்'

ஸ்ரீ என். ரகுநாத ஐயர் பேசுகையில், பண்பட்ட குணம் நிறைந்தவர் தேவன் என்று புகழ்ந்தார். "பக்தியோடு பெரியவரிடத்தில் ஈடுபாடு உள்ள பண்பாடு கொண்டவர் அவர். வினயம் படிப்பு நிறைந்தவனுக்கு முக்கியம்.

தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராகவும் நாவல், சிறுகதைகள், கட்டுரைகள் மூலம் இலக்கிய வளர்ச்சிக்கும் பண்பாடுகளின் உயர்வுக்கும் அன்னார் ஆற்றிய தொண்டினை நன்றியுடன் பாராட்டுகிறது.

தமிழ் எழுத்தாளர்களுக்குச் சிறந்த ஒரு வழிகாட்டியாக இருந்து வந்த அவரது மறைவு தமிழுலகிற்கு ஈடு செய்ய முடியாத நஷ்டமாகும்.

அவரது பிரிவாற்றாமையால் துக்கத்தில் மூழ்கி உள்ள குடும்பத்தினருக்கு இக்கூட்டம் தனது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவிக்கிறது.

'எழுத்து வன்மை பண்பாடு ஒருங்கமைந்தவர்'

'தினமணி' துணை ஆசிரியரும் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் துணைத் தலைவருமான ஸ்ரீ ஏ.ஜி. வெங்கடாச்சாரியார் "தேவனின்" மறைவு சங்கத்திற்கு ஈடு செய்ய முடியாத நஷ்டமென்றார். "தமிழ் உலகிலேயே மிகச் சிறந்த மாணிக்கங்கள் இரண்டை ஒன்றன் பின் ஒன்றாக இரண்டு ஆண்டுகளில் நாம் இழந்திருக்கிறோம். எழுத்து வன்மையால் மட்டுமன்றி சிறந்த பண்பாட்டினாலும் தமிழகத்திற்குச் சிறந்த தொண்டினை, தேவன் செய்துள்ளார். இம்மாதிரி அதிர்ச்சி தரும் நிகழ்ச்சிகள் நம்மைக் கலக்கிவிடுகின்றன. எழுத்து வன்மையும் பண்பாடும் சேர்ந்து தேவனிடம் அமைந்திருந்தது போல வேறு யாரிடமும் அமையவில்லை எனலாம். எப்பொழுதும் மலர்ந்த முகமும் இனிமையான பேச்சும், ஆழ்ந்த அனுபவமும் பிறருடன் அதைப் பகிர்ந்து கொள்வதில் இன்பமும் கொண்டவராகத் திகழ்ந்தார் என்று கூறி அன்னார் கடைசி காலத்தில் நான்கு மாத காலம் கூட இருந்து அவர் பட்ட கஷ்டங்களை ஒரு அளவுக்குத் தாம் பார்த்ததைப் பற்றிக் குறிப்பிடுகையில் வெங்கடாச்சாரியாருக்குத் துக்கம் தொண்டையை அடைக்க நாத்தழுதழுத்து சிறிது நேரம் பேச முடியாமல் போயிற்று.

## எழுத்தாளர் சங்கத்திற்குத் தொண்டு

ஸ்ரீ தேவனின் வாழ்க்கை வரலாறு - இயற்றிய பணி பற்றிய வரலாற்றினைத் 'தம்பி' ஸ்ரீநிவாஸன் தயாரித்திருந்தார்.

இதைச் சங்கக் காரியதரிசி ஸ்ரீ அழவள்ளியப்பா விரிவாக எடுத்துரைத்து தேவன் தமிழ் எழுத்தாளர் சங்கத்திற்குப் புரிந்த ஆர்வமிக்க தொண்டினைக் குறிப்பிட்டார். தேவனை நினைக்கும் போது கல்கியின் நினைவு எழுகிறது. கல்கியின் நினைவுச் சின்னம் எழுப்பவும் தமிழ் எழுத்தாளர் சங்கத்திற்குக் கட்டிடம் எழுப்பவும் தேவன் அவாக் கொண்டிருந்தார் என்றார் ஸ்ரீ வள்ளியப்பா.

## மறைவு தமிழ் நாட்டின் தீவினை

பேராசிரியர் சேதுப்பிள்ளை பேசுகையில் “தமிழ்த் தாய்” ஒரு சிறந்த மகனை இழந்து விட்டாள். தமிழ் இலக்கிய உலகம் ஒரு தொண்டனை இழந்துவிட்டது. தமிழ் எழுத்தாளர்கள் ஒரு தலைவனை இழந்து தவித்து நிற்கிறார்கள். கதாசிரியராகவும் கட்டுரையாளராகவும் மகாநாடுகளில் அறிவுரை வழங்கினார். பல தமிழ் துறைகளில் அவர் செய்த பணிகள் சிறந்தவை. பேரறிவாளியான அவரை இழந்து விட்டோம். கல்கியையும் பின்னர் தேவனையும் இம்மாதிரி அகாலத்தில் நாம் இழந்தது தமிழ் நாட்டின் தீவினை என்றே தோன்றுகிறது. சிறந்த ஆற்றல் மிக்க எழுத்தாளர்கள் முதுமைப் பருவம் எய்து முன்னரே மறைந்து விடுவது

தமிழ்த் தாய்க்கு ஈடுசெய்ய முடியாத நஷ்டமாகும். ஸ்ரீ தேவன் நல்லார்க்கு ஓர் உதாரணம். உரக்கப் பேசும் பழக்கம் கிடையாது. மெதுவாக அன்பு கலந்து தமிழ் ஆர்வம் மிகுந்து பேசுவார். ஆனந்த விகடனுக்குத் தம்மை அர்ப்பணம் செய்த அறிஞர். அவர் புலமைப் பண்பாடு என்றும் தமிழ்நாட்டில் நிலைக்கும். அன்னார் எழுதியவை அண்மையில் நூல்களாக வெளிவர வேண்டும். "தேவன் வடிவம் எழுத்து வடிவம்" என்றார். அது தேவனிடமிருந்தது ஆங்கிலப் படிப்பால் அதனிடம் மட்டும் மோகம் கொண்டு விடவில்லை. இத்துடன் நம் அனாதி பண்பாட்டிலும் ஊறியவராகத் திகழ்ந்தார். படிப்பும் இந்தப் பண்பாடும் ஒன்றுக்கொன்று முரணானதல்ல. கங்கையும், யமுனையும் கலந்தது போலக் கலந்ததே. ஸ்ரீ தேவன் பல துறைகளில் ஈடுபட்டு இலக்கிய எல்லையை விரிவடையச் செய்தார். இலக்கியத்தினுள் அடங்கிய ஒரு உறுப்பே அரசியல் என்று கருத்துக் கொண்டு விளங்கினார். பல துறைகளில் அவர் தமிழ் நடை பிரத்யேக அழகு வாய்ந்து, காவேரிப் பிரவாகம் போல் வெளிவந்தது. அவர் சுத்த நடையில், யார் மனமும் கெட்ட வழியில் போகாமல் உதவும் வகையில் எழுதினார். அவர் எழுத்துக்கள் புத்தக வடிவமாக வரவேண்டுமென்றார்.

## பெரும் நஷ்டம்

பெண்கள் சார்பில் துக்கம் தெரிவித்து உருக்கமாக ஸ்ரீமதி குகப்ரியை பேசினார். “தமிழ்த்தாய் தவப்புதல்வனை இழந்து விட்டார். தமிழ் உலகம் சிறந்த மேதையை இழந்து விட்டது. தமிழ் இலக்கியச் செல்வரை இழந்து விட்டது. பக்தர் குழாம் ஒரு சிறந்த முருக தொண்டனை பறிகொடுத்து விட்டது. தமிழ் எழுத்தாளர்கள் சிறந்த தலைவனை இழந்து விட்டார்கள். மீட்க இயலாத நஷ்டம், தமிழின் துர்ப்பாக்கியம்" என்றார்.

ஸ்ரீ பெ.ந. அப்புசாமி பேசுகையில், மாரே கம்பெனி ஸ்ரீ ராஜமும், இதர நண்பர்களும், ஸ்ரீநிவாசனும், குடும்பத்தினரும் ஏதாவது அற்புதம் நிகழ்ந்து ஸ்ரீதேவன் பிழைத்து எழுந்து தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குத் தம் மீதத் தொண்டினைச் செய்து மனக் குறையைப் போக்கிக் கொள்ள மாட்டாரா என்று பாடுபட்டதையும், அது பலனற்றுப் போய் விட்டது பெரும் துரதிர்ஷ்டமென்றும் சொன்னார். பண்பாடு நிறைந்த மனநிலை, முருக பக்தி, வட மொழி அறிவு முதலியன ஸ்ரீ தேவனிடம் இருந்ததை எடுத்துரைத்தார்.

- நன்றி: தினமணி 9-5-1957

*****

# 1. சின்னஞ்சிறு கதை

மாம்பலத்தில் பங்களா கட்டிக் கொண்டு சந்திரசூடய்யர் சென்ற மாதம் தான் குடி வந்தார். பங்களா காம்பவுண்டுக்குள் தாமே அழகான தோட்டம் போட வேண்டுமென்ற அவா அவருக்கு வெகு தீவிரமாக உண்டு. ஆகவே ஒழிந்த நேரங்களிலெல்லாம் அங்குள்ள பூண்டுகளைப் பிடுங்கி, சுவருக்கு வெளியே தெருவில் போட்டு வந்தார். அப்படி ஒரு நாள் அவர் எறிந்த ஒரு செடி தான், வேரும் கிழங்குமாய்ப் போய்த் தெருவில் சூட்கேஸுடன் போய்க் கொண்டிருந்த ஒரு இளைஞன்மீது விழுந்தது.

சந்திரசூட அய்யர் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். அந்த இளைஞன் புன்சிரிப்பும் முகமுமாய் அதை அதிகமாய்ப் பொருட்படுத்தாமல், "இங்கே கர்த்தபவராகன் தெரு எங்கே ஸார் இருக்கிறது? நான் புதிது இந்த ஊருக்கு!" என்றான்.

அய்யர், "புதிதாயில்லா விட்டால்தான் என்ன? மாம்பலத்தில் தினம் ஒரு புதுத் தெரு ஏற்படுகிறதே! நீர் இருப்பதே அந்தத் தெருதான்!" என்றார்.

"அட! எனக்கு முருகேசம் பிள்ளை வீட்டுக்குப் போக வேண்டும். நான் அவர் மருமான். லாகூரிலிருந்து லீவுக்கு வந்திருக்கிறேன்."

"அதுவும் அடுத்த வீடுதான். அவர்கள் எல்லாரும் இப்பதான் சினிமாவுக்குப் போனார்கள். பூட்டிக் கொண்டு போயிருப்பார்களே!" என்றார் அய்யர்.

"அடாடா! நான் வாசலில் அல்லவா நிற்க வேண்டியிருக்கும்! நீங்கள் எனக்கு ஓர் உதவி செய்கிறீர்களா? ஒரு கை கொடுத்து, காம்பவுண்டுச் சுவரின் மேல் என்னை ஏற்றி விடுங்கள். நான் வராந்தாவிலேயாவது அவர்கள் வரும் வரையில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன்" என்றான் இளைஞன்.

சந்திர சூடய்யர் இளைஞனைப் பார்த்தார். கலாசாலையிலிருந்து வரும் மாணாக்கனைப் போலவே இருந்தான். அவன் கேட்டுக் கொண்டபடியே காம்பவுண்டுச் சுவரில் அவனை மெள்ள ஏற்றி விட்டார். அவன் உள்ளே இறங்கிக் கண்ணுக்கு மறைந்தான். சந்திர சூடய்யர் வீட்டுக்குத் திரும்பினார்.

மறுநாள் காலை காப்பி சாப்பிடும் போது, சந்திரசூட ஐயர் மனைவி, "கேட்டயளோ நேற்று நடந்த சமாசாரத்தை!" என்றாள்.

"என்ன! உம் தமக்கைக்குப் பத்தாவது பிரசவம் ஆகி விட்டதா?"

“அதெல்லாம் இல்லை. அடுத்த வீட்டில் அவாள் சினிமாவுக்குப் போனாளோல்லியோ? திரும்பி வந்து பார்த்தால், வீடு கொள்ளை போயிருந்ததாம். ஒரு வெள்ளி பாத்திரம் பாக்கியில்லையாம்! எவனோ படுபாவி, ஏறிக் குதித்துக் கொண்டு போயிருக்கிறான்!”

"உம்...”

“அவனுக்கு யாரோ இந்தக் பக்கத்திலேயே கூட்டாளி இருக்கணும், அவன் ஒத்தாசையோடுதான் இவ்வளவு துணிச்சலாக இந்தக் காரியம் நடந்திருக்கணும்னு எல்லாரும் சொல்றாளாம். காம்பவுண்டுக்கு வெளியிலே இரண்டு பேர் காலடி கூட இருக்கிறதாம்! அது யாராக இருக்கும்?”

சந்திர சூடய்யர் பதில் பேசாமல் தலையைச் சொறிந்தார்.

*****

## 2. சின்னஞ்சிறு கதைகள்

சதாசிவத்திடமிருந்த பழைய மோட்டாரை விற்பனை செய்வதற்கு அவர் பிரமப் பிரயத்தினம் செய்து பார்த்தார். ஒரு பயனுமில்லை.

அந்த மோட்டாரின் குணம் சில மனிதர்களுடையதைப் போலவே இருந்தது. சில சமயம் அதற்குக் குஷி பிறக்கும்; அப்போது மணிக்கு 30, 40 மைல் வேகத்தில் துள்ளிக் குதித்துக் கொண்டு போகும். சதாசிவம் ஒரு நாள் டாக்டர் சிம்மத்தைப் பார்க்கப் போன போது, அதே நிலையில்தான் அவர் மோட்டார் இருந்தது. நிறுத்தப் பார்த்த போலீஸ்காரனையும் லட்சியம் செய்யாமல் சென்றது.

டாக்டர் சிம்மத்துடன் பேசிக் கொண்டிருந்த போது தற்செயலாக ஜன்னல் வழியாகப் பார்த்தவர் திடுக்கிட்டார். ஒரு போலீஸ்காரன் காரைச் சுற்றி வந்து கொண்டிருந்தான்! வேகமாக ஓட்டியதற்காகத் தம்மைப் போலீஸ் கோர்ட்டுக்கு இட்டுச் செல்லவே வந்து விட்டான் என்று நிச்சயித்துக் கொண்டார். ஆகவே, அவன் ஒரு வெற்றிலை பாக்குக் கடைப்பக்கம் போகும் சமயமாக மோட்டாரை வீட்டுக்குக் கொண்டு வந்து விட்டார். மோட்டார் கிளம்புவதைக் கவனித்து ஓடி வந்த போலீஸ்காரனைக்கூட அவர் கவனித்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை

ஆனால் அன்று மாலை அவர் வீட்டுக்கே அவன் போய் விட்டான்.

“ஸார்! இன்னிக்குக் காலை உங்க வண்டிதானே...”

“ஆமாம்?”

“டாக்டர் வீட்டண்டை மறுபடி பார்த்தேன். திரும்பறதுக்குள்ளே நீங்க புறப்பட்டுட்டீங்க...”

“சரி?”

“வண்டி 40, 45 போயிட்டிருந்ததே! பார்த்தேன்!”

ஊஹூம், நாற்பதாவது! உயர்ந்தால் இருபத்தெட்டு மைல் போகும். வெறும் சத்தம், தடபுடல் அதோடு சரி! மிகப் பழைய வண்டி...”

“பார்த்தால் தோணல்லையே!”

“வெறும் பகட்டோடு சரி! பொழுது விடிந்தால் ரிப்பேர் செய்கிற எனக்கல்லவா அதன் யோக்யதை தெரியும்? மகாமோசம்.”

“சரிதானுங்க! நீங்க உண்மையைச் சொன்னதில் ரொம்ப சந்தோஷம்! எங்க இன்ஸ்பெக்டர் ஐயா ஒரு பழைய வண்டி விலைக்குப் பார்க்கச்

சொன்னாரு! உங்க வண்டியைச் சொல்லலாமின்னு நினைச்சேன். நீங்க இப்படிச் சொல்லச்சே, நான் நான் வேறே வண்டி பார்க்கிறேன்!" என்றான்.

*****

## 3. சின்னஞ்சிறு கதைகள்

அவசரமாக ஒரு குண்டூசி வேண்டியிருந்தது. ராஜத்தின் பீரோவைத் திறந்தேன். உடனே நாலு ஜாக்கெட்டுகள், ஒரு புடவை, இரண்டு 'கர்ச்சிப்'கள், ஓர் ஒட்டியாணம், ஜட பில்லை இவ்வளவும் கீழே உருண்டன. அசாத்தியமாகக் கோபம் வந்தது எனக்கு.

"என்ன ராஜம்! பீரோவை இவ்வளவு கேவலமாகவா வைத்துக் கொள்ள வேண்டும்! வேண்டிய சாமான்களை மட்டும் வைத்துக் கொண்டு மற்றவைகளைப் பெட்டியில் வைக்கக் கூடாதா?" என்றேன்.

"சொல்லுவியள்! எல்லாம்தான் ஒரு சமயம் வேண்டியிருக்கிறது!"

"வேண்டியிருக்கட்டுமே! அதற்காகக் குப்பைத் தொட்டி மாதிரி..."

“நீங்கள் கை வைத்தவுடன் அது குப்பைத் தொட்டியாகி விடுகிறது!"

“என் மேஜையில் நான் கை வைக்கிறேன். அது..."

“பின் எப்படி இருக்கிறதாம்?"

வாஸ்தவமாகவே என் மேஜை கொஞ்சம் அப்படித் தான் இருந்தது. வேண்டாத கடிதங்களைக் கிழித்து எறியலாமென்ற தீர்மானத்துடன் போனேன். மேஜையைத் திறந்தவுடன் ஒரு பழங் கடுதாசிக் கட்டு அகப்பட்டது. முதல் கடுதாசியைப் பாராமலேயே கிழித்துக் கூடையில் போட்டேன். பிறகு ஒவ்வொரு கடிதமாகப் படிக்கத் தொடங்கினேன்.

அடுத்த கடிதம், என்னுடன் காலேஜில் படித்த கமலா எழுதியது; காலேஜ் ஞாபகத்துக்கு அதை வைத்துக் கொள்ள வேண்டும். மூன்றாவது, கல்கத்தாவில் எனக்குக் கல்யாணம் செய்ய உத்தேசித்திருந்த லட்சுமிபாய் எழுதியது; அது எழுதியிருந்த அழகுக்காக அதைக் கிழிக்க முடியவில்லை. இப்படியாக, ஒவ்வொரு கடிதமும் முக்கியமாகத்தான் இருந்தது, கிழிக்க முடியவில்லை. அப்போது ராஜம் அங்கே வந்து சேர்ந்தாள்.

"ஏன்னா! ஒரு கடுதாசிதான் கிழிக்க முடிந்ததா?' என்று கூறி, நான் கிழித்துப் போட்டிருந்த ஒரு காகிதத்தை எடுத்தாள்! உடனே, “ஐயையோ! நம் கல்யாணம் ஆனவுடன் முதல் நாள் முதல் நான் எழுதிய கடிதம் அல்லவா இது! இதைக் கிழித்து..." என்று விசிக்க ஆரம்பித்தாள்.

*****

## 4. சின்னஞ்சிறு கதைகள்

விச்ராந்தியாக மாலைப் பொழுதில் சிறிது நேரம் பேசிக் கொண்டு காலங் கழிக்கலாம் என்று நினைத்தேன். வீட்டு வேலைகளையெல்லாம் ஒரு வழியாக முடித்துக் கொண்டு ராஜமும் பேச்சுக் கொடுப்பதற்குத் தயாராகத்தான் வந்து நின்றாள். ஆகா, ஒரு கிருஹஸ்தனுக்கு இதை விட மனோசாந்திக்கும் ஆனந்தத்துக்கும் எடுத்ததாக நிசப்தமான சமயம்...

உஸ்ஸ்... பூம்... உஸ்ஸ்ஸ்க்!

திடீரென்று கிளம்பிய இது என்ன சத்தம் என்ற தோரணையில் நான் ராஜத்தைப் பார்த்தேன்.

“அடுத்த வீட்டில் கோபாலய்யர் அவர் மருமானுக்கு வாணங்கள் விட்டுக் காண்பிக்கிறார்!” என்றாள் அவள்.

“தீபாவளி போய் அடுத்த தீபாவளிக்கு நாளாயிற்று! இப்போதா...”

புஸ்ஸ்ஸ்ஸ்... ஸ்க்வீ... ஸ்டப்!

“ஏன், அவரும் குழந்தை மாதிரி நடந்து கொள்கிறார் என்று நீங்கள் அடிக்கடி சொல்வீர்களே! அதற்குச் சரியாய்த் தான் நடந்து கொள்கிறார்.”

ஸ்ஸ்ஸ்... க்வீக்... ஸ்ஸ்ஸ்ஸ்ஷ்ப்ட்

எனக்குச் சகிக்கவில்லை. எழுந்து சென்று ஜன்னல் வழியாகப் பார்த்தேன். கோபாலன் கையிலிருந்து ஒரு "சீறு முதல் வாணம்" அப்போதுதான் கிளம்பிக் கொண்டிருந்தது. திரும்ப வந்து, "சீச்சீ! சுத்த அற்பத்தனம்! என்ன இது, ஒரு மனிதனுக்கு முப்பது வயதாகிறது. பச்சைக் குழந்தை மாதிரியாகப் பட்டாசையும் வாணத்தையும்...” என்று தொடங்கினேன்.

படார்...

“உங்களுக்கென்ன? பேசாமல் உங்கள் பாட்டுக்கு வீட்டில் சும்மா இருங்களேன்!” என்றாள் ராஜம்.

ஸ்ஸ்ஸ்ஸ்... க்வீக்... இஇஇ... ஷ்ஷ்ஷ்ஷ்

“சும்மா இருப்பதா! இதோ அவனை என்ன பண்ணி விட்டு வருகிறேன், பார்!” என்று ராஜத்திடம் கூறிவிட்டு, சவுக்கத்தை உதறி மேலே போட்டுக் கொண்டு கிளம்பினேன்.

நான் திரும்பி வரும் போது சரியாக ஏழு மணி. வாசல் திண்ணையில் நின்று கொண்டு ராஜம் என் வரவுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள்.

“ஏன் இத்தனை நாழி? அங்கே போய் என்ன பண்ணிக் கொண்டிருந்தீர்களாம்?” என்று கேட்டாள்.

“அதுவா? அந்த வீட்டுக்குப் போனேனல்லவா? அவனுக்கு எந்த வாணங்களை எப்படி விடுவது என்று கூடத் தெரியவில்லை. விழித்துக் கொண்டு நின்றான். நான் போய் அதை எல்லாம் விட்டுக் காண்பித்தேன். அதனால்தான் நேரமாகி விட்டது!”

*****

## 5. சின்னஞ்சிறு கதைகள்

ஹோட்டலில் டேபிள் முன் உட்கார்ந்திருந்தவர் டாம்பீகமாக உடை தரித்து, வைர மோதிரமும் அணிந்திருந்தார். கொதிக்கக் கொதிக்க சாம்பாரை அவர் சட்டைக்குள்ளாகக் கவிழ்த்து விட்டு, அவர் பின்னால் நின்ற செர்வர் அங்கேயே மூர்ச்சையானான்.

டாம்பீகப் பேர்வழி குதியாய்க் குதித்தார். செர்வரை உள்ளே நாலு பேராகத் தூக்கிக் கொண்டு சென்று ஒரு கட்டிலில் போட்டு, ஆசுவாசப்படுத்தப் பார்த்தார்கள். அவன் கண் திறக்கவே இல்லை. அரை மணி கழித்து, ஒருவர், “இனி டாக்டரைக் கூப்பிட வேண்டியதுதான்!” என்றவுடன் அவன் துள்ளி எழுந்தான்.

"வேண்டாம் டாக்டர்!” என்று கூறிவிட்டு, செர்வர் தன் கதையைச் சொன்னான்:

“சுமார் பதினைந்து வருஷத்துக்கு முன் ஒரு கம்பெனியில் நான் காஷியராக இருந்தேன். அப்போது மாதம் பத்து ரூபாய் கையாடிக் கொண்டே வந்தேன். இப்படியாகப் பல வருஷங்கள் சேர்ந்து, என் பேரில் பாங்கியில் ஐந்நூறு ரூபாய் இருந்தது.

“ஒரு நாள் மார்பு வலியால் நான் சிரமப்பட்டு, ஒரு வைத்தியரைப் பார்த்தேன். அவர் என் மார்பைத் தட்டிப் பார்த்து விட்டு, 'பெரிய டாக்டரிடம் காண்பியும்' என்று ஐந்து ரூபாய் பீஸ் வாங்கிக் கொண்டார். பெரிய டாக்டர் பதினைந்து ரூபாய் பீஸ் பெற்றுக் கொண்டு, 'இருதய ஸ்பெஷலிஸ்டிடம் போய்ப் பாரும்' என்றார்.

"இருதய ஸ்பெஷலிஸ்ட் நூறு ரூபாய் பீஸை முன்னதாக வாங்கிக் கொண்டு, 'நீர் ஒரு வாரத்துக்குள் இறந்து போவீர்' என்றார்.

"என் மனதில் ஏக்கம் பற்றிக் கொண்டது. இருக்கும் ஒரு வாரத்துக்குள் ஏதாவது நல்ல காரியம் செய்து விட்டுச் சாகலாமென்று தீர்மானித்து, கம்பெனி முதலாளியிடம் சென்றேன். என் அயோக்யத்தனத்தை ஒப்புக் கொண்டு, அன்று வரை திருடிய பணத்தைக் கொடுத்தேன். அவர் அதை வாய் திறக்காமல் பெற்றுக் கொண்டு 'இன்று முதல் உன் வேலை தேவையில்லை' என்று துரத்தினார்.

“அதற்குப் பிறகு, பத்து வருஷம் அல்லாடினேன் நான் பார்க்காத வேலையில்லை, படாத கஷ்டம் இல்லை இன்று நீங்கள் 'டாக்டர்' என்றதைக் கேட்டதும் பயந்து எழுந்திருந்தேன்.”

இப்படிக் கதை முடிந்தவுடன் சுற்றியிருந்தவர்கள் “ஏன் ஐயா! உம்மைப் பற்றி டாக்டர்கள் சொன்னது பொய் என்றால், இன்று ஏன் மூர்ச்சையடைந்தீர்?” என்றார்கள்.

“நான் உண்மையில் மூர்ச்சை அடையவில்லையே. அந்த டம்பப் பேர்வழியின் தலையில் சாம்பாரைச் சூடாகக் கொட்ட வேண்டுமென்று எனக்கு வெகு நாளைய ஆசை இன்று அதை தீர்த்துக் கொண்டேன்.”

"யார் அந்தப் பேர்வழி?”

“அவர்தான் நான் முன்பு வேலை செய்த கம்பெனியின் முதலாளி.”

*****

## 6. சின்னஞ்சிறு கதைகள்

இளைஞன் கதவைத் தட்டிக் கொண்டு உள்ளே நுழைந்தான். ராவ்பகதூர் ராஜாராமய்யர் தம் அறைக்குள் அவனை அன்புடன் அழைத்து, “வா, அப்பா!” என்றார் கனிந்த குரலில்.

இளைஞன் புன்னகையுடன் உட்கார்ந்து கொண்டு “உங்களுடன் பேசலாமென்று வந்தேன்” என்றான்.

“ஏதாவது முக்கியமான விஷயமா?”

“ஆமாம்; கொஞ்ச நாளைக்கு முன்பு நீங்கள் உங்கள் பெண்ணின் விருப்பப்படிதான் அவளுக்குக் கல்யாணம் செய்து வைக்கப் போவதாக என்னிடம் சொன்னீர்கள் அல்லவா?”

“அதற்கென்ன இப்போது?”

“உங்கள் பெண் சகுந்தலாவை நான் கேட்டுப் பார்த்து விட்டேன். என்னை நிராகரித்து விட்டாள்.”

ராவ்பகதூர் திடுக்கிட்டு, "என்ன! வாஸ்தவமாகவா?” என்றார்.

“ஆமாம், வாஸ்தவமாக, உண்மையாக, சத்தியமாக அவள் 'முடியாது' என்று சொல்லி விட்டாள்!”

“உம்... அப்படிச் சொன்னாளா அவள்...! அப்பா, அதற்காக நீ வருத்தப்படாதே! பெண்களுக்கே ஸ்திர புத்தி கிடையாதென்று பெரியவர்கள் அறியாமலா சொன்னார்கள்?”

“நான் அதைத் துளிக்கூட லட்சியம் செய்யவில்லை ஸார்!”

“அப்படியென்றால் என்னை இப்போது என்ன விஷயமாகப் பார்க்க வந்திருக்கிறாய்?” என்றார் ராவ்பகதூர்.

சற்று நேரம் மௌனமாகவே இளைஞன் அவரை உற்று நோக்கினான். பிறகு, "ஸார்! இந்த வீட்டுக்கு உங்களுடைய பெண்ணை உத்தேசித்தே இன்று வரை மூன்று மாதங்களாக வந்திருக்கிறேன். அப்போது ஒவ்வொரு முறையும் குறைந்தது ஒரு மணி அவகாசமாவது உங்கள் வெட்டிப் பேச்சைக் கேட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தேன். நீங்கள் பெரிய வீடு கட்டிய கதை, உத்யோகம் பார்த்த அமுல், பாம்பை அடித்த விருத்தாந்தம், கறிகாய்கள் மலிவாக வாங்கிய பெருமை, திருடனைக் கண்டு பிடித்த பிரதாபம் ஆகிய பல விஷயங்களைப் பொறுமையுடன், என் எரிச்சலைச் சகித்துக் கொண்டு கேட்டிருக்கிறேன்.”

இளைஞன் இப்போது எழுந்து சென்று அறைக் கதவைத் தாளிட்டுக் கொண்டு திரும்பி வந்தான்.

"என்ன? இதெல்லாம் என்னத்திற்கு?" என்று கேட்டார் ராவ்பகதூர்.

"என்னத்திற்கா? உங்கள் பெண் இப்போது என்னை மணக்க மறுத்து விட்டாள். பதிலுக்குப் பதில் பழிவாங்கப் போகிறேன். உங்களைப் போல் எனக்கும் பல கதைகள் சொல்லத் தெரியும். அந்தக் கதைகளையெல்லாம் இப்போது உங்களுக்கு நான் சொல்லப் போகிறேன். நீங்கள் வாயைத் திறக்காமல் கேட்டாக வேண்டும்; நான் சொல்லித்தான் தீருவேன், உம்!" என்றான்.

*****

## 7. சின்னஞ்சிறு கதைகள்

வேலாயுதம் ஒரு பெரிய மிட்டாய்க் கடையில் வேலைக்கு அமர்ந்தான். தனது கவலை யெல்லாம் தீர்ந்தது என்று சந்தோஷப்பட்டுக் கொண்டான். ஆனால் மறுநாளே அவனுக்குக் கிடைத்த வேலை போய் விட்டது. எப்படியென்று கேளுங்கள்

கடை முதலாளி சற்று வெளியே போய் வந்தார். அப்போது வேலாயுதம் கடையைப் பார்த்துக் கொண்டிருந்தான் அந்தச் சமயம் முதலாளியைப் பார்க்க ஒருவர் வந்து விட்டுப் போனார். அந்தத் தகவலைச் சொல்ல அவன் மறந்து போய் விட்டான்.

மறுநாள் எஜமானன் அவனைக் கூப்பிட்டு, “நேற்று ஒருவர் என்னைத் தேடினாரா?” என்று கேட்டார்.

"ஆமாம்.”

“நான் வந்தவுடன் அதை ஏன் என்னிடம் சொல்லவில்லை? உடனே அதை ஒரு காகிதத்தில் குறித்துக் கொள்வதுதானே?”

“எனக்கு எழுத வராது, சுவாமி!”

"ஓஹோ! அப்படியா? அது சமாசாரம் எனக்குத் தெரியாதே! எழுத்து வாசனை இல்லாத பசங்கள் நம்ம கடைக்கு வேண்டாம்!” என்று கூறி அவனை வெளியே விரட்டி விட்டார்.

இருபது வருஷங்கள் சென்றன. கடைத் தெருவில் பிரம்மாண்டமான கட்டடம் கட்டிக் கொண்டு வியாபாரம் நடத்துகிறார் வேலாயுதம் பிள்ளை என்பவர். அவருக்கு டவுன் எக்ஸ்டென்ஷனில் அழகான பங்களா இருக்கிறது; அவருக்கு இப்போது லட்ச ரூபாய்க்கு மேல் ஆஸ்தி இருக்குமென்று சொல்கிறார்கள்.

அவருடன் இன்று ஒரு பெரிய வியாபார ஒப்பந்தம் பேசி முடித்திருந்த சில வியாபாரிகள் கையொப்பமிடப் பத்திரங்களைக் கொண்டு போனார்கள். வேலாயுதம் பிள்ளை அவற்றைப் பார்த்து விட்டு, "போங்கள்! நம்ம மானேஜர் கையொப்பமிடுவார்!” என்றார்.

வியாபாரிகளுக்கு உடனே "இவர் தற்குறி ஆயிற்றே!” என்ற ஞாபகம் வந்தது.

"ஆஹா! சொந்த சாமர்த்தியத்தால் லட்சாதிபதி பிரபுவாகியிருக்கும் தாங்கள் படித்துமிருந்தால் இப்போது எப்படி இருப்பீர்களோ!” என்றார் ஒரு வியாபாரி.

வேலாயுதம், “எப்படி இருப்பேனா? இப்போதும் பழைய மிட்டாய்க் கடையில் வேலை பார்த்துக் கொண்டிருப்பேன்!” என்றார் ஒரு புன்னகையுடன்.

*****

## 8. சின்னஞ்சிறு கதைகள்

பெரிய பொம்மைக் கடை. வியாபாரம் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. சூட் தரித்த ஒருவன் வெகு அலட்சியமாக நுழைந்தான். கடை முதலாளி அவனைக் கவனிக்கவில்லை.

ஒரு முறை அவன் கடை முழுதும் கண்ணை ஒரு ஓட்டம் ஓட்டினான். பொம்மைக் கடையில், ஒரு ஸ்டூலில், மேல் உட்கார்ந்த நிலையில் இருந்த ஒரு நாய் அவன் கண்ணில் பட்டது.

"இது நாயா?" என்று சொல்லி அவன் ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

முதலாளி அவன் பக்கம் கூடத் திரும்பவில்லை.

தானாப் அவன் தொடர்ந்து, "ரொம்ப அழகாகச் செய்து விட்டால் ஒரு மடையன், இதையும் ஒரு நாய் என்று! கண்ணைக் கட்டி விட்டால்கூட நான் இதைவிட நன்றாகச் செய்து விடுவேன். நாயின் காது இப்படியா தொங்கும்? அல்லது அதன் கால்கள் இப்படியா மடிந்திருக்கும்? யாராவது பார்த்ததுண்டா?" என்றான்.

கடைக்காரர் பதில் பேசாமல் வியாபாரம் நடத்திக் கொண்டிருந்தார். வந்தவன் மேலும் சொன்னான்:-

"நாயாம், நாய்! இதைச் செய்தவன் உயிருள்ள நாயைப் பார்த்திருக்கிறானோ என்று எனக்குச் சந்தேகமாக இருக்கிறது! நாயின் நகம் இப்படியா வளைந்திருக்கும்! அல்லது அதன் பற்கள்தான் இப்படி இருக்குமா? நாயின் வாலைப் பாருங்கள்? இது நாயின் வாலா, சார்? அல்லது நரியின் வாலா?"

கடைக்காரர் வாயே திறக்கவில்லை. அவருடைய பிள்ளை எட்டு வயது பாலன், உள்ளே நுழைந்து கொண்டிருந்தான். அவனைக் கண்டதும் அவர் அவன் பக்கம் திரும்பினார். அதே சமயம் ஸ்டூலின் மீது இதுவரை ஆடாமல் அசங்காமல் சிலை போல் உட்கார்ந்து கொண்டு இருந்த நாய் அவனிடம் பாய்ந்து சென்றது.

சூட் போட்டு வந்த இளைஞன் பேசாமல் வெளியே சென்றான். கடைக்காரர் புன்னகை செய்தார்.

*****

## 9. சின்னஞ்சிறு கதைகள்

“ஆஹா! ஒரு ஆரணிப் புடவை வந்திருக்கு; பாருங்கள்! இருபத்தி நாலு ரூபாய் தானாம்! என்னமாயிருக்கிறது என்கிறீர்கள்!” என்றாள் ராஜம்.

“சொரேர் என்று இருக்கிறது!”

“ஆமாம்! உங்களுக்கு வேடிக்கைதான் எப்போதும்! எங்கப்பா வாங்கிக் கொடுத்தாரே சில்க் ரவிக்கை, அதற்கு இது பொருத்தமாயிருக்கும்!”

நாங்கள் ஜவுளிக் கடைக்குப் போனவுடன், புடவைகளை எடுத்துக் கொடுக்கும் செட்டியார் ஒரு மந்தகாசம் செய்தார். “நீங்கள் நேற்று பார்த்தீர்களே அம்மா, ஆரணிச் சேலை, அது செலவாகி விட்டது... அதைவிடத் தரமான ரகங்கள் இருக்கின்றன. பாருங்கள்!” என்றார். பிறகு எங்கள் பதிலை எதிர்பார்க்காமலேயே, புடவைகளை ஒன்றின் மேல் ஒன்றாக வீசினார்.

மாந்துளிர் நிறத்தில் ஒரு புடவையின் மேல் ராஜத்தின் பார்வை விழுந்தது. "பிரபாத் பாட்டர்ன்! உங்களுக்கு ரொம்ப எடுப்பான புடவை. நாற்பத்தி ஐந்துதான்” என்று செட்டியார் பிரித்து வீசினார்.

இந்தச் சந்தர்ப்பத்தில், ஒரு பீரோவில் ராஜம் சொன்ன ஆரணிப் புடவையைப் பார்த்து, “ராஜம்! ராஜம்! இதோ இருக்கிறதே, நீ நேற்றுப் பார்த்ததாகச் சொன்ன புடவை” என்றேன்.

“அது மட்ட ரகம், அம்மா! அதெல்லாம் நீங்கள் உடுத்தலாமா?” என்றார் செட்டியார்.

"அது எனக்கு இப்போது பிடிக்கவில்லை" என்றாள் ராஜம் என்னிடம்.

“அதை வாங்க வேண்டுமென்றுதானே என்னை அழைத்து வந்தாய்?”

"அது சரி, மஞ்சளிலே கறுப்புக் கட்டம் இவ்வளவு நெருக்கமாக இருப்பதை அப்போ கவனிக்கவில்லை.”

“என்ன நீ பேத்தறே! இந்த இருபத்தி நாலு ரூபாய்ப் புடவை உங்கப்பா வாங்கிக் கொடுத்த சில்க்குக்குப் பொருத்தமாயிருக்கிறது என்றாயே!”

ராஜம் ஒரு பெருமூச்சு விட்டு, "நான் சொல்கிறபடி இந்த 45/- ரூபாய்ப் புடவையை இப்போது வாங்குங்கள், இதற்குப் பொருத்தமாக ஒரு ரவிக்கை அப்பாவிடம் கேட்டு வாங்கிக் கொள்கிறேன்” என்றாள்.

*****

# 10. சின்னஞ்சிறு கதைகள்

ரயில் நின்றதும் சளசளவென்று பேசிக் கொண்டிருந்த ஆசாமி இறங்கிப் போனான். ரயில் உடனே கிளம்பிற்று. அந்தக் கம்பார்ட்மெண்டில் இப்போது எதிரும் புதிருமாக இரண்டே பேர் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். ஒருவர் பேப்பர் வாசித்துக் கொண்டிருந்தார்; மற்றவர் அவரைப் பேச்சுக்கு இழுத்தார்:-

“பார்த்தீர்களா, ஸார்? எனக்கு இத்தனை நாழியாக அந்த ஆசாமி மீது என்ன கோபம் பொங்கிக் கொண்டு வந்தது! என்ன பேச்சு! ஓய்ச்சல் ஒழிவு இல்லாத பேச்சு! இவர்களை யெல்லாம் கட்டி வைத்து உதைக்க வேண்டும், ஸார்!”

பேப்பர் படித்துக் கொண்டிருந்த ஆசாமி பதிலே சொல்லவில்லை. மற்றவர் மீண்டும் சொன்னார்:-

“இப்படித்தான், பாருங்கள், ஒரு சமயம் ஓர் ஆசாமி என்னிடம் பேசினான். சற்றுத் தூங்கலாம் என்று பார்த்தால், அவன் விடமாட்டான் போலிருந்தது. நான் கொட்டாவி விட்டேன்; கண்ணை மூடிக் கொண்டேன். முகத்தைச் சுளித்தேன். அவன் நிறுத்தவில்லை! சண்டையைப் பற்றிப் பேசினான்; வெய்யிலைப் பற்றிச் சொன்னான்; அவன் சம்சாரத்தை வர்ணித்தான்; கடைசியில் நாய்க்குட்டியின் அழகைப் பற்றி ஆரம்பித்த போது என் கோபம் கட்டுக்கடங்காமல் போயிற்று. எழுந்தேன்; விட்டேன் ஓர் அறை, வந்தது வரட்டும் என்று!

“அதற்காகப் போலீஸ் கோர்ட்டில் 15 ரூபாய் அபராதம் செலுத்தினேன். கேளுங்கள், ஸார்! நம்மை மீறி இப்படி நாம் செய்து நஷ்டமும் அடைய வேண்டி இருக்கிறது.”

இப்படிக் கூறி சட்டையில் கைவிட்டு, சீசாவின் கார்க் போன்ற இரண்டு சிறு பொருட்களை எடுத்தார். "இதைப் பாருங்கள், இம்மாதிரி சந்தர்ப்பங்களில் நீங்கள் இதைக் காதில் சொருகிக் கொண்டால், ஒரு சப்தம் கேட்காது; நிம்மதியாகத் தூங்கலாம், ஜோடி அரை ரூபாய். நான் இதற்கு ஏஜெண்ட்...”

அந்த ஆசாமி பதில் சொல்லாமலே ஒரு துண்டுக் காகிதத்தை எடுத்தார். அதில் ஏதோ எழுதி வியாபாரியிடம் கொடுத்தார். “நான் செவிடு. ஊமையும் கூட மன்னிக்கவும்” என்று தான் அதில் எழுதியிருந்தது!

அடுத்த ஸ்டேஷனில் ஏறிய புது மனிதர் ஒருவர், பேப்பரும் கையுமாக உட்கார்ந்திருந்த மனிதரைப் பார்த்ததும், “என்னடா சாம்பு?” என்று கேட்டார். உடனே மற்றவர் ஒரு சிரிப்புச் சிரித்து விட்டு,

“சௌக்கியத்துக்கென்னடா...? உன் பெண்டாட்டிக்கு உடம்பு இப்போ எப்படி இருக்கு?” என்று கணீரென்ற குரலில் கேட்டார்.

வியாபாரி அதைக் கேட்டுக் கொண்டே அவசரமாக இறங்கி வேறு வண்டியில் போய் ஏறிக் கொண்டார்.

*****

## 11. சின்னஞ்சிறு கதைகள்

மளிகை கதிரேசன் செட்டியார் கடைக்குப் புத்தக வியாபாரி ஒருவர் வந்தார். தமது மூட்டையை அவிழ்த்து, “மாகாளிபுரியின் மர்மம்” என்னும் நவீனத்தை எடுத்தார். செட்டியாருக்கு நவீனம் வேண்டாம்; ஆனால் இந்த வியாபாரி தொல்லை தீர்ந்தால் போதும். அதற்காக அரை ரூபாயைக் கொடுத்து ஒரு புத்தகத்தை வாங்கிக் கொண்டு, வியாபாரியை வெளியில் அனுப்பினார்.

அன்று மத்தியானச் சாப்பாட்டிற்கு வீட்டிற்குப் போனவுடன் தமது மனைவியைக் கூப்பிட்டு, "இந்தாங்கறேன், இந்த நாவல் வாங்கியாந்திருக்கிறேன், படித்துப் பார்!” என்றார்.

அவர் மனைவி புத்தகத்தை வாங்கிப் பார்த்து விட்டு உடனே திருப்பிக் கொடுத்தாள். 'இது எனக்கு வேண்டாம். நான் படித்தாகி விட்டது!” என்றாள்.

“எப்போது? எங்கே?” என்று கேட்டார் செட்டியார் பரபரப்புடன்.

“எல்லாம் இன்றைக்குத்தான். காலையிலே புத்தகக் கட்டோடு ஒரு வியாபாரி வந்தார். அரை ரூபாய்க்கு ஒரு புத்தகத்தை விற்று விட்டுப் போனார்.”

“ஐயோ, படுபாவிப் பயல் மோசம் பண்ணி விட்டானே! என்னிடம் கூட மறுபடி அதே புத்தகத்தை விற்று விட்டுப் போயிருக்கிறானே!” என்று செட்டியார் அலறினார்.

இந்தச் சமயத்திலே, தற்செயலாக ஜன்னல் வழியாக அவள் எட்டிப் பார்க்கவே அதே புத்தக வியாபாரி தெருவோடு வேகமாகப் போவது தெரிந்தது. இருவரும் வாசற் படிக்கு ஓடி வந்து பார்த்த போது வியாபாரி ஒரு பஸ்ஸைப் பின் தொடர்ந்து வேகமாக ஓடிக் கொண்டிருந்தார்.

அப்போது செட்டியாருக்குத் தெரிந்தவர் ஒருவர் சைக்கிளில் அவ்வழியே போகவும் செட்டியார் அவரிடம், “நீர் வேகமாகப் போய் அந்த வியாபாரியை நிறுத்தும்!” என்றார். சைக்கிள்காரர் போய்ச் சேரும் போது, புத்தக வியாபாரி பஸ்ஸை நிறுத்தச் சொல்லி ஏறி விட்டார்.

"ஓய் வியாபாரி! நில்லும்! கதிரேசன் செட்டியார் உம்மை அவசரமாகக் கூப்பிடுகிறார்!” என்று சத்தம் போட்டார் சைக்கிள்காரர்.

"செட்டியாரா! புத்தகம் வேண்டுமென்று கேட்டார். இன்னொரு சமயம் கொடுக்கிறேன். எனக்கு இப்போது நிற்க அவகாசம் இல்லையே!” என்றார் வியாபாரி. பஸ் கிளம்பத் தயாராகி விட்டது.

“நான் பணம் கொடுத்து எடுத்துக் கொள்கிறேன். பிறகு செட்டியாரிடம் வாங்கிக் கொண்டால் போயிற்று; புத்தகத்தை எடும்” என்றார் சைக்கிள்காரர்.

“எட்டணா எடுங்கள்!” என்று கூறி, அவரிடம் "மாகாளிபுரி மர்மம்” என்னும் நவீனத்தைக் கொடுத்து விட்டுச் சில்லறையையும் வாங்கிக் கொண்டு வியாபாரி சென்றார்!

*****

## 12. சின்னஞ்சிறு கதைகள்

காஷியர் கந்தசாமி எவ்வளவோ ஜாக்கிரதையாக நடந்து கொண்டு வந்தார். சிறுகச் சிறுக அவர் தமது கம்பெனிப் பணத்தைக் களவாடி வந்தது ஆபீசில் யாருக்கும் தெரியாது. ஆபீஸ் ஆடிட்டர் அந்தோணிசாமியோ அவரிடம் அசாத்திய நம்பிக்கை வைத்திருந்தார். காஷியர் கையெழுத்தைப் பார்த்ததும், படிக்காமலேயே அவரும் கையொப்பமிட்டு வந்தார். இப்படி இருபத்தைந்து வருஷ காலம் நடந்து வந்தது.

“இம்மாதிரியே மெள்ள இன்னும் ஒரு வருஷம் ஓட்டி விட்டால், பதினையாயிரம் ரொக்கப் பணத்துடன் கம்பி நீட்டி விடலாம்” என்று கந்தசாமி 'பிளான்' போட்டிருந்தார்.

ஒரு நாள் கந்தசாமி ஆபீஸில் நுழைந்ததும் "அந்தோணி சாமி மாரடைப்பால் திடீரென்று இறந்து போய் விட்டார்” என்ற செய்தியைக் கேட்டுத் திடுக்கிட்டார். அன்று பூராவும் கந்தசாமி சமைந்து போய்த் தம் இடத்தில் உட்கார்ந்திருந்தார். அவர் கவலையெல்லாம் புதிதாக வரப் போகும் ஆடிட்டரைப் பற்றியேயென்று சொல்ல வேண்டியதில்லை. புதிய பேர்வழி வந்தால், இரண்டே தினங்களில் இவர் பித்தலாட்டங்கள் வெளியாகி விடுமே என்ற ஏக்கம் பிடித்துக் கொண்டது.

மற்ற உத்தியோகஸ்தர்கள் அவர் முகத்தைப் பார்த்து, “என்ன உடம்பு?” என்று கேட்கலானார்கள். கந்தசாமி, புதிய உத்தியோகஸ்தர் வருவதற்குள்ளாகத் தேக அசௌக்கியமென்று காரணம் சொல்லி, லீவு எடுத்துக் கொண்டு ஓடி விடத் தீர்மானித்தார். அதிலும் தாம் கொழும்பிற்குப் போவதாகச் சொல்லி ஏமாற்றி விட்டுப் பம்பாய்க்கு ஓடிவிடுவதென்று முடிவு செய்தார். இந்த யோசனையுடன் முதலாளியைப் போய்ப் பார்த்தார்.

முதலாளி அவர் கோலத்தைக் கண்டு உண்மையில் மனம் இளகிப் போனார். “அடடா! இப்போதுதான் அந்தோணி சாமி மறைந்தார். உம்மையும் என்னால் இழக்க முடியாது. உம்மைப் பார்த்துக் கொள்ளும். எந்த ஊரில் போய்த் தங்கப் போகிறீர்?” என்று கவலையுடன் அவர் கேட்டார்.

"கொழும்புக்குப் போகத் தீர்மானித்து ஏற்பாடுகள் செய்து விட்டேன்.”

"ரொம்ப சௌகரியமாய்ப் போயிற்று. என் மைத்துனன் கூட இன்று கிளம்புகிறான். அங்கே அவனுக்கு முதல் தரமான பங்களா இருக்கிறது. போய் நிம்மதியாக அவனுடன் இருந்து விட்டு வாரும். அவனை

வரவழைக்கிறேன். உம்முடன் கூடவே அவன் வரட்டும். இப்போதே ஏற்பாடு செய்கிறேன்...” என்று உற்சாகமாகப் பேசிய போதே, கந்தசாமியின் முகம் விகாரமாக மாறியதைக் கவனித்து முதலாளி பேச்சை நிறுத்தினார்.

கந்தசாமி பொத்தென்று விழுந்தார். பதினைந்து நிமிஷத்திற்குப் பிறகு வந்து பார்த்த டாக்டர், “மாரடைப்பினால் திடீரென்று ஏற்பட்ட மரணம்” என்றார்.

*****

## 13. சின்னஞ்சிறு கதைகள்

வீராசாமிக்கு அதிர்ஷ்ட எண் ஏழு இல்லை என்பதை அவன் எளிதில் கண்டு கொண்டான். அவன் இதுவரை துணிகரமான திருட்டுக்கள் ஆறு நடத்திய பிறகு ஏழாவது திருட்டில், இவனை ஏழு போலீஸ்காரர்கள் வளைத்துக் கொண்டார்கள். அவனைத் தண்டித்த நீதிபதி, அவனுக்கு ஏழு வருஷ சிறை விதித்தார்!

அவன் சிறைச்சாலையின் கம்பிகளைக் கையில் பற்றி ஆத்திரத்துடன் குலுக்கினான். எப்படியாவது அதிலிருந்து தப்பித்துக் கொண்டு விடுவது என்கிற எண்ணம் அவன் மனத்தைப் பிடித்து உந்திற்று. சுரங்கம் செய்து கொண்டு தப்பித்துக் கொள்ளும் யோசனை பலமாய்ப் பிடித்துக் கொண்டது.

அவன் கணக்குப் போட்டுப் பார்த்ததில் மொத்தம் இருபத்தைந்தடி நீளம் சுரங்கம் செய்தால், ஜெயில் சுவரைத் தாண்டி, வெளியில் போய்ச் சேரலாம் என்று ஏற்பட்டது.

வீராசாமி அவசரப்படவில்லை. மெள்ள மெள்ள வேலை செய்தான். அவனுடைய வார்டருக்குச் சந்தேகமில்லாதபடி பார்த்துக் கொண்டு, அன்றன்று தோண்டிய மண்ணையும் வெகு ஜாக்கிரதையாகப் பங்கீடு செய்தான். இப்படி ஆறு மாதங்கள் ஓடி மறைந்தன. இதற்குள் இருபத்து நாலரை அடிகள் தோண்டியவன், இப்போது அமாவாசைக்காகக் காத்திருந்தான்.

அமாவாசையும் வந்தது. நடு இரவில் உற்சாகமாகக் கிளம்பினான் வீராசாமி. ஜாக்கிரதையாகச் சுரங்கத்தினுட் சென்று, மிகுதியிருந்த அரை அடியையும் தோண்டினான். அவன் கணக்கு ரொம்ப சரியாயிருந்தது. இன்னொரு பக்கம் தரையின் மட்டத்துக்கு வந்து விட்டான். வெளிப்புறம் வீராசாமி எழும்பிக் குதித்தான்.

காரிருள். சுற்றிலும் காரிருள். “அமாவாசை அல்லவா?” என்று நினைத்துக் கொண்டு, நாலடி நகர்ந்தான். சுவரில் மோதிக் கொண்டான். சுற்றிச் சுற்றித் தடவினான்; நாலாபுறமும் கையில் சுவர்தான் தென்பட்டது! அவன் வெறி அதிகமாயிற்று. மேலும் மேலும் ஓடினான். சுவர், சுவர்தான்!

மறுநாள் காலை அதிகாரிகள் அவன் அடுத்த அறையில் சுற்றிச் சுற்றி ஓடிக் கொண்டிருந்ததைக் கண்டார்கள். ஓர் அறையிலிருந்து அடுத்த அறைக்கே அவன் ஏன் சுரங்கம் வைத்துக் கொண்டு சென்றான் என்பது அவர்களுக்கு விளங்கவில்லை.

## 14. சின்னஞ்சிறு கதைகள்

சந்தானம் அய்யருக்குக் கோபம் கோபமாக வந்தது. நம் நாட்டில் பெண்களைப் புருஷர்கள் அடக்கி ஆளுவதை நினைத்துத்தான் அவர் கோபம் எல்லாம். கோபம் வரும் போதெல்லாம் அவர் கட்டுரை எழுதுவது வழக்கம். பேப்பரையும் பேனாவையும் எடுத்துக் கொண்டு சுடச்சுட ஒரு கட்டுரை எழுதி விடுவது என்று தீர்மானித்தார். அந்த வாரத்திலேயே அதைப் பிரசுரிக்கச் செய்து விடுவதென்று முடிவு செய்தார்.

கட்டுரையில், பெண் சுதந்திரத்தைப் பற்றிச் சரமாரியாகப் பொழிந்தார். “மேல் நாடுகளைப் பாருங்கள்; அங்கே புருஷனுக்கு எவ்வளவு சுதந்திரம் உண்டோ அவ்வளவு பெண்ணுக்கும் இருக்கிறது. அவாள் எங்கும் போகலாம்; யாருடனும் பேசலாம்; நிபந்தனை எதுவும் கிடையாது. நாம், நம் நாட்டில் நம் பெண்களைக் கேவலம் சமையற்காரிகளைப் போல் உபயோகிக்கிறோம். அவர்களுக்குப் பேச இடம் இல்லை. வெளியில் தலை நீட்டினால் அபவாதம்! இந்த மாதிரி நிலைமையில் அவர்களுக்கு மூளை மந்தமாகப் போவதில் ஆச்சரியம் என்ன? கேவலம் அடிமை போல் அவர்கள் நாளை எண்ணிக் கொண்டு சீக்கிரம் வயோதிகத்தை வரவழைத்துக் கொள்வதில் வியப்பென்ன? பாருங்கள், இந்தப் புருஷர்களின் அடக்கு முறைகளினால் அவர்கள் அழகு எல்லாம் பாழாகிறது. எதற்காக பெண்ணானவள் புருஷனுக்கு அடங்கி நடக்க வேண்டும்? இருவரையும் ஒரே கடவுள் தானே சிருஷ்டி செய்தார்? அவன்தான் அவள் சொன்னபடி நடக்கட்டுமே! புருஷனும் பெண்ணுயும் சம அந்தஸ்து உள்ளவர்கள் என்று எந்த நாளில் நம் நாட்டில் ஏற்படுகிறதோ, அன்றைக்குத்தான் நமது நாடும் நாமும் உருப்படுவோம். இது சத்தியம்” என்று எழுதினார். புருஷர்களிடம் கஷ்டப்படும் சில பெண்களின் கதைகளையும் எடுத்து எழுதினார். அப்புறம்தான் அவர் மனம் நிம்மதி பெற்றது; நாட்டுக்குச் செய்ய வேண்டிய பெருத்த நன்மை ஒன்றைச் செய்து விட்டதாக எண்ணினார்; மனம் குளிர்ந்தார்.

சுமார் அரைமணிக்குப் பிறகு அவர் மனைவி பங்கஜம் வந்து நின்றாள்.

“என்னது?” என்று ஓர் அதட்டல் போட்டார் சந்தானம்.

பங்கஜத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது. மென்று விழுங்கிக் கொண்டு, “ஒன்றுமில்லை; அடுத்த தெருவில் விராட பர்வம் வாசிக்கிறார்களாம். அடுத்தாத்து அம்மாமி கூடப் போகிறாளாம், நானும் போய் விட்டு வரட்டுமா?” என்று கேட்டாள்.

சந்தானம் அய்யர் அவளை வியப்புடன் சிறிது நேரம் பார்த்தார். "ஹும்! உன் லட்சணத்துக்குப் புராணம் வேறு கேட்க வேணுமோ! அவசியந்தான்... சீ போ உள்ளே! என்னைக் கேட்காமல் வாசற்படி தாண்டக் கூடாது. ஆமாம்! என்னைக் கேட்டாலும் நான் இந்த விஷயங்களுக்கெல்லாம் அனுமதிக்க மாட்டேன்" என்று கூறி விட்டு, அங்கவஸ்திரத்தை மேலே வீசிக் கொண்டு வெளியே கிளம்பினார்.

*****

## 15. சின்னஞ்சிறு கதைகள்

அந்த இளைஞனுடைய முகம் கவலையால் வாடியிருந்தது. அவன் அங்கங்கள் ஒவ்வொன்றும் துடிதுடித்தது. அவனை நிறுத்திப் பேசிய பெரியவர், அவனுடைய முக வாட்டம் காதலினால் ஏற்பட்டது என்று கண்டு கொண்டார்.

"ஐயோ! அவளை எப்போது காண்பேன்? எப்படி அடைவேன்? அவளின்றி உடலை விட்டு உயிர் நீங்கி விடும் போல் இருக்கிறதே!" என்று தவித்தான்.

“அது யாரப்பா, சொல்! அந்த மங்கை நான் பார்த்தவளாக இருக்கலாமோ என்று சொல்கிறேன்!” என்று கேட்டார் பெரியவர்.

இளைஞன் சொன்னான்: “சுவாமி! ஒரே விநாடியில் அவளை நீங்கள் கண்டு கொள்ளலாம். கன்னங்கரிய கண்கள் அவளது. ஐயோ, அவற்றின் கூர்மைதான் என்ன! அதன் கூர்மையில் அடிபட்டுத்தான் நான் தத்தளிக்கிறேன்.”

பெரியவர்: அப்பா! அவளை இன்னும் கொஞ்சம் வர்ணி, பார்க்கலாம்!

இளைஞன்: பூர்ண சந்திரனைப் போன்ற அவள் முக மண்டலத்தில் கோவைப் பழம் போன்ற அதரங்கள், மாம்பழம் போன்ற கன்னங்கள்...

பெரியவர்: ஏது! அப்புறம்?

இளைஞன்: எலுமிச்சம் பழம் போன்ற மேனி, நீண்ட கரிய கூந்தல், இன்னும் அந்த உருவத்தின் அழகையும், கைகளின் உருட்சியையும் வர்ணிக்க முடியாது. போங்கள்!

பெரியவர்: அப்பா! நீ சொன்ன பெண் ரத்னத்தை நான் எங்கும் பார்த்ததில்லை. ஆனால் எனக்குத் தெரிந்த நாரீமணி வேறொருத்தி. அவளை வர்ணிக்கப் புகுந்தால் இன்று பூராவும் பிடிக்கும். குழந்தாய்! கடலினும் பெரிய அந்த நீலக் கண்களின் சுழலில் அகப்பட்டுக் கொண்ட பேர் மீளுவது அசாத்தியம்! முத்துக்களைப் பழிக்கிற பல் வரிசை ஒரே புன்னகையில் வீழ்த்தி விடும். இன்னும் கேள்! அவள் கேசம் சுருள் சுருளாக, தந்தம் போன்ற அவளது கன்னங்களில் புரண்டு ஊசலாடுவதை என்னவென்று வர்ணிப்பது! அவள் நடையைக் கண்ட அன்னப் பறவைகள் ஊரை விட்டு ஓடி விடுவதில் ஆச்சரியம் இருக்க முடியுமா? அவள் குரலைக் கேட்ட குயில்கள் வெட்கித் தங்கள் குரலை அடக்கிக் கொள்ளுமென்றால், வேறு என்ன சொல்ல வேண்டும்? அப்பா! அப்புறம், அவளுடைய விம்மும் மார்பிலே...

இளைஞன்: சுவாமி! சுவாமி! இப்போது நீங்கள் குறிப்பிட்ட மங்கை இருக்கும் இடம் எது, சொல்ல முடியுமா?

*****

## 16. சின்னஞ்சிறு கதைகள்

வெண்ணெய் விலை ஏறிக் கொண்டே வந்தது. அதோடு கூடப் பல சரக்கு பஞ்சாபகேசய்யர் கடையில் தினம் ஒரு பவுண்டு வெண்ணெய் காணாமல் போய்க் கொண்டும் வந்தது. இந்த மர்மம் ஒரு நாள் பஞ்சாபகேசய்யருக்கு விளங்கி விட்டது. குமாஸ்தா குப்புசாமி சட்டென்று தன் தலைக் குல்லாவுக்குள் ஒரு சிறு பொட்டணத்தை வைத்துக் கொண்டு டிபனுக்கு வீட்டுக்குக் கிளம்புவதைக் கண்டு விட்டார்.

“குப்புசாமி!” என்று கூப்பிட்டார்.

குப்புசாமி பயந்து போய் வந்தான். ஆனால் பஞ்சாப் கேசய்யர் அவன் திருட்டைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவே இல்லை. “இங்கேயும் கொஞ்சம் காப்பி சாப்பிட்டு விட்டுப் போயேன்!” என்றார்.

குப்புசாமி தயங்கினான். வெளியே வெயில் தகித்துக் கொண்டிருந்தது.

பஞ்சாபகேசய்யர் ஸ்டவ் அடுப்பைக் கொண்டு வந்தார். "குப்புசாமி! இன்று நாமே காப்பி போடலாம். பெரிய வித்தையா, என்ன இது? 'ஸ்டவ்'வை மூட்டு!” என்றார்.

இதற்குள் குப்புசாமிக்குத் தலைக்குள் வெண்ணெய் உருகுவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டு விட்டது. அவன் துள்ளி எழுந்து "இல்லை, ஸார்! இன்னொரு நாள் சாப்பிடுகிறேன். இன்று வீட்டில்...” என்று ஆரம்பித்தான்.

"உட்காரப்பா! உனக்கு வேண்டாமென்றால், எனக்குப் போட்டுக் கொடேன், சாப்பிடுகிறேன்.”

“அதற்கென்ன, அப்படியே செய்கிறேன்!” என்று குனிந்தான். வெண்ணெய் உருகிக் காதுகளுக்குச் சமீபமாக வந்து விட்டது.

ஸ்டவ் அடுப்பின் அனல் அவன் முகத்தில் பட்டது. தலை பூராவுமே வெண்ணெய் உருகி ஓட ஆரம்பித்தது. கைக் குட்டையை எடுத்துக் கொண்டு முகத்தையும், காதுப் பக்கத்தையும் துடைத்துக் கொண்டான்.

"என்ன, குப்பு! கொஞ்சம் 'ரொட்டி ரோஸ்ட்' செய்யேன்! வெண்ணெய் கொண்டு வருகிறாயா?” என்றார் பஞ்சாப் கேசய்யர் 'ஸ்டவ்'வை அதிகம் அனலிட விட்டுக் கொண்டு.

குப்புவுக்கு உடம்பெல்லாம் கொதித்தது. இதற்குள் வெண்ணெய் நெற்றியில் வழியத் தொடங்கி விட்டது. அவன் முதலாளியோ ஒன்றும்

கவனியாதவர் போல் ஸ்டவ்வுக்குக் காற்றடித்துக் கொண்டே இருந்தார்.

“எனக்கு உடம்பு சௌகரியமில்லை; நான் நிற்க முடியாது... போக வேண்டும்” என்று கூவிக் கொண்டே குப்புசாமி முகமெல்லாம் உருகிய வெண்ணெய் பொழிய ஓட்டம் பிடித்தான்.

"வெண்ணெய் நஷ்டமானால் போகிறது. இந்த வேடிக்கை சாதாரணமாய்க் காணக் கூடியதா?” என்றார் பஞ்சாபகேசய்யர் தம் மனைவியைக் கூப்பிட்டு.

*****

## 17. சின்னஞ்சிறு கதைகள்

என் காப்பி ஆறிப் போயிருந்தது. அதைச் சாப்பிட்டது முதலே எனக்குக் கோபம் கோபமாக வந்து கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் தான் குருசாமி வந்து சேர்ந்தான். "எனக்கு ஒரு யோசனை சொல்லிக் கொடு. நல்ல கதையென்று எல்லாரும் புகழ வேண்டும். அதை எப்படி எழுதுவது?" என்று கேட்டான்.

எனக்கு வந்த ஆத்திரத்தில் மடமடவென்று சொன்னேன்: "யாருக்கும் புரியாதபடி எழுத வேண்டும். அது திருட்டுப் போய் விட்டதாகப் பத்திரிகையில் வெளியாக வேண்டும். அதோடுகூட ஆசிரியரும் மறைந்து போவது விசேஷம்."

"இதெல்லாம் மக்களை ஏமாற்றுவதாகாதா?"

"ரொம்ப சரி, அதுதான் நானும் சொல்வது!" என்றேன்.

குருசாமி போய் விட்டான்.

மறுநாள் பத்திரிகையில் ஒரு செய்தியைக் கண்டு திடுக்கிட்டேன். "துணிகரமான திருட்டு" என்னும் தலைப்பின் கீழ், "காணாமற் போன காந்தாமணி" என்னும் அற்புத நவீனத்தின் கையெழுத்துப் பிரதி களவாடப்பட்ட செய்தி வெளியாகியிருந்தது. அந்தக் கதை பிரசுரமானால், மக்களைப் பிரமிக்கச் செய்திருக்குமென்றும், பதினாயிரக்கணக்கில் பிரதிகள் அச்சிட அதன் ஆசிரியர் தீர்மானித்திருந்தாரென்றும் குறிப்பிட்டிருந்தது. அதைக் கண்டுபிடிக்கப் பெருமுயற்சி செய்யப்படுவதாகவும் கண்டிருந்தது, இதைப் படித்த எனது ஆச்சரியத்தைச் சொல்லி முடியாது.

மறுநாள் வெளியான செய்தி இன்னும் என்னைத் துணுக்குறச் செய்தது. "கதாசிரியர் காணப்படவில்லை" என்னும் மகுடத்தின் அடியில், "குருசாமி என்னும் நாவலாசிரியர் திடீரென்று காணப்படவில்லை. அவருடைய கையெழுத்துப் பிரதிதான் நேற்றுக் களவாடப்பட்ட 'காணாமற் போன காந்தாமணி'" என்று செய்தி வெளியாகியிருந்தது.

"அடபாவி! நான் விளையாட்டுக்குச் சொன்னதை நம் குருசாமி நிஜமென்று நினைத்துக் கொண்டு, அது போலவே செய்து விட்டானே" என்று எண்ணிப் பரிதாபப்பட்டேன்.

அன்று தபாலில் எனக்குக் குருசாமியிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அவன் அதைத் தன் கிராமத்திலிருந்து எழுதி இருந்தான்:

"சிறந்த கதை எழுதுவதற்கு நீ சொன்ன மூன்று வழிகளில் பின்

இரண்டையும் செய்து விட்டேன். நான் இங்கேயே கொஞ்ச நாள் தங்கியிருக்கலாமென்று தீர்மானித்திருக்கிறேன். மூன்றாவது, யாருக்கும் புரியாத கதையாக நீதான் எனக்கு எழுதிக் கொடுக்க வேண்டும். அதற்கு உன்னைவிட ஏற்ற நண்பன் எனக்கு இல்லை. இந்தச் சமயம் என்னைக் கைவிட மாட்டாயென்று நம்புகிறேன்.”

*****

## 18. சின்னஞ்சிறு கதைகள்

என்னுடைய கவலையெல்லாம், எங்கள் பாலுவை எதற்குப் படிக்க வைப்பது, எங்கே கல்யாணம் செய்து வைப்பது என்பதைப் பற்றித் தான். நானும் ராஜமும் இது சம்பந்தமாக எங்களுக்குள் எவ்வளவோ விவாதங்கள் நடத்தி விட்டோம்.

"இல்லாத விஷயத்தை வைத்துக் கொண்டு பேசாதங்கோ! பங்களூர்ப் புடவை மூன்று மாதத்துக்கு ஒன்று கேட்டால் உங்களுக்கு மூர்ச்சை போடுகிறது; நீங்கள் பாலுவை ஐ.ஸி. எஸ்ஸுக்குத்தான் அனுப்புவீர்கள்!" என்றாள் ராஜம்.

"நான் அனுப்பாவிட்டால், அவனைப் பெரிய இடத்தில் கல்யாணம் செய்து வைக்கிறேன். அவன் பெண்டாட்டி வீட்டில் சீமைக்கு அனுப்புகிறார்கள் என்னைப் போல் இல்லாமல்..."

"எனக்கு என்ன குறைத்துச் செய்து விட்டார்களாம்! கல்யாணமாகிக் கல்ப கோடி காலமாகியும் எங்க அப்பா நேற்று பேஸரி பண்ணிப் போடவில்லையா? உங்கள் காதைத் தொட்டுப் பார்த்துக் கொள்ளுங்கள் - அவர் போட்ட வைரக் கடுக்கன் தானே ஜம்பமாய் ஆடுகிறது! வாயை வீசிப் பேசி விட வேண்டாம்!"

நான் சொன்னது பிசகு, அதற்காக என்னைச் சிரச் சேதம் பண்ணி விடலாம் என்று ஒப்புக் கொண்டு வேறு விஷயங்களைப் பற்றிப் பேசி அவளை அடுப்பங்கரைக்கு அனுப்பினேன், இதெல்லாம் நடந்தது போன வருஷம்.

நான் இன்று மன நிம்மதியின்றிக் கூடத்தில் மேலும் கீழுமாக உலாத்தினேன். ஒரு காரியத்திலும் மனம் ஓடவில்லை. என் அருமைப் புத்திரன், பாலு, எப்படி இருக்கப் போகிறான் என்று எண்ணி எண்ணிப் பார்த்துக் கொண்டேன். அப்போதே அறையின் கதவைத் திறந்து கொண்டு அத்தை வந்தாள். "அம்பி உள்ளே போய்ப் பாரு!" என்றாள்.

"பாலு பிறந்தானா?" என்று கேட்டேன் பரபரப்புடன்.

"பாலுவா? பாலம்மாள் என்று சொல்லு! தலைச்சன் பெண் பிறந்திருக்கிறதுடா! உன்னையே உரித்து வைத்திருக்கிறது" என்றாள் அத்தை.

என் இரு பெரிய கவலைகளும் மறைந்து விட்டன. மன்னித்துக் கொள்ளுங்கள் நான் பார்த்து விட்டு வரேன், ஸார்.

## 19. சின்னஞ்சிறு கதைகள்

என் மனைவிக்கு இங்கிலீஷ் படிக்கத் தெரியாது. அதற்காக இங்கிலீஷ் தினசரி பத்திரிகைகளைப் புரட்டுவது மட்டும் நிற்பதில்லை, அதிலிருக்கும் போட்டோப் படங்களைப் பார்த்து, “அது யாரைப் போல் இருக்கிறது” என்று சொல்லுவாள். “இந்து வந்து. நம்ம பல்பொடி நடேசய்யர் மாதிரி இல்லை?” என்று கேட்டாள்.

நான் அலட்சியமாகப் பார்த்து விட்டு, "இருக்கலாம்” என்பேன், இது சகஜமாகப் பேப்பர் வந்தவுடன் தினசரி நடக்கும் சம்பாஷணை, பத்திரிகையில் ஒரு போட்டோவைப் பார்த்தவுடனேயே அவள், "இவரை எங்கேயோ பார்த்தாப் போல் இருக்கிறதே” என்று யோசனை செய்து, அந்தச் சாயலுள்ள மனிதர் ஒருவரைக் கண்டு சொன்னாலொழிய அவளுக்குத் திருப்தி ஏற்படுவதில்லை.

சமீப காலத்தில், (1) பிரிட்டிஷ் மந்திரி ஒருவருக்கும் எங்கள் வீட்டுக்கு வாடிக்கையாகக் கறிகாய் கொண்டு வருபவனுக்கும், (2) ஒரு பிரபல சினிமா நடிகைக்கும் எங்கள் வீட்டுத் தயிர்க்காரிக்கும், (3) லண்டன் மிருகக்காட்சிச் சாலையில் இருக்கும் மனிதக் குரங்குக்கும் கணேச கனபாடிகளுக்கும் சாயல் பொருத்தம் இருப்பதை அவள் கண்டுபிடித்துச் சொல்லியிருக்கிறாள். அவள் காண்பிக்கும் போட்டோப் படம், அவள் குறிப்பிடும் மனிதராக இல்லையென்றாலும், ஏதோ ஒருவித முக ஒற்றுமை காண்பது வாஸ்தவமே. அதே மூக்கு, அல்லது கன்னங்கள் அல்லது நெற்றி அல்லது ஏதாவது ஒரு முகபாவத்தில் அவள் சரியான சாயலைக் கண்டு பிடித்திருப்பாள்.

ஒரு நாள் காலை நான் காப்பி டம்ளருடன் உறவு கொண்டாடிக் கொண்டிருந்த போது, அவள் பத்திரிகையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். திடீரென்று, "இதைப் பார்த்தேளா, உங்கள் படம்? அப்படியே தத்ரூபம்! நீங்களேதான்!” என்று இளித்துக் கொண்டே பத்திரிகையைப் பரபரப்புடன் நீட்டினாள். என் சட்டையில் ஒரு பொட்டுக் காப்பியைக் கொட்டிக் கொண்டு, அவசரமாக அதை வாங்கிப் பார்த்தேன்.

அவள் சொன்னது நூற்றுக்கு நூறு பங்கு சரிதான். அதில் என் படம் தான் இருந்தது! சந்தேகமில்லை!

“அடியிலே இங்கிலீஷிலே என்ன எழுதியிருக்கு? சொல்லுங்கோ!” என்று குதித்துக் கொண்டு கேட்டாள்.

நான் மனதுக்குள் படித்துப் பார்த்தேன்: “நகரத்தில் முனிசிபாலிடியார்

தெருக்கள் சுத்தம் தீவிரமாகச் செய்து வருகிறார்கள். அதையொரு சோம்பேறி நின்று பார்க்கும் காட்சி."

நான் அவளுக்கு அதன் அர்த்தத்தைச் சொல்லவில்லை!

*****

## 20. சின்னஞ்சிறு கதைகள்

அபூர்வமான ஒரு நவீனத்தை எழுதுவதென்று உட்கார்ந்தேன். யாரும் உபத்திரவப் படுத்தாமல் இருந்தால், முதல் அத்தியாயத்தை ஒரே மூச்சில் முடித்து விடலாமென்று நினைத்துக் கொண்டிருந்த சமயம், சிரித்துக் கொண்டே ராஜி வந்தாள். “எதற்காக வந்திருக்கிறேன், சொல்லுங்கள், பார்க்கலாம்!” என்றாள்.

“பணம் கேட்க வந்திருப்பாய்.”

“சரியாகச் சொல்லி விட்டீர்களே! ஒரு நல்ல பீங்கான் ஜாடி வந்திருக்கிறது. ஒரு ரூபாய் கொடுங்கள்.”

ஒரு ரூபாயை அவள் வாங்கிக் கொண்டு போன ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம் என் மச்சான் வெளியே போய் ஏதோ வாங்கிக் கொண்டு திரும்பி வந்தான். நான் என் அறையில் உட்கார்ந்து வேகமாக எழுதிக் கொண்டிருந்தேன். சுமார் அரை மணி நேரம் சென்றிருக்கும். சீட்டியடித்துக் கொண்டே என் மச்சான் உள்ளே நுழைந்தான். “என்ன அத்திம்பேர், கதை எழுகிறாப் போல் இருக்கிறது. யாராவது உங்கள் கதையைப் பிரசுரித்துப் பணம் தருகிறார்களா?” என்றான்.

நான் ஆத்திரத்துடன் என் மணி பாக்ஸைத் தட்டிக் காண்பித்தேன். உடனே அப்படிச் செய்தது பிசகு என்று தெரிந்து கொண்டேன். ஏனெனில் என் மச்சான், “அத்திம் பேரே! ஒரு ரூபாய் அவசியமாக வேண்டியிருக்கிறது?” என்றான். அதோடு அவன் நம்மை விட்டதே பெரிது என்று கொடுத்து அனுப்பினேன். அவன் உடனே வெளியில் எங்கேயோ போய் விட்டுத் திரும்பி வந்ததைக் கவனித்தேன்.

இதற்குப் பிறகு இரண்டு மணி நேரம் நிம்மதியாக எழுதினேன். காப்பி டம்ளருடன் வந்த ராஜி, "இந்தாருங்கள், அவசரமாக ஒரு ரூபாய் வேண்டும்!” என்றாள். “இதென்னடா! ரூபாய் ரூபாயாகக் கொள்ளை போகிறதே!” என்று நினைத்த நான், அவளுடன் வாதம் செய்வதில் உபயோகமில்லை என்று ரூபாயைக் கொடுத்தேன்.

அன்று மாலை என் மச்சான் ஒரு ரூபாயைத் தட்டிப் பார்த்து விட்டு சினிமாவுக்குக் கிளம்புவதைக் கவனித்த நான். ராஜியைக் கூப்பிட்டு, “இன்று என்னவெல்லாம் செலவு?” என்று கேட்டேன்.

"ஒன்றுமே இல்லை. பீங்கான் ஜாடியை என் தம்பி வாங்கிக் கொண்டு வந்தான் அல்லவா? அதைக் கீழே போட்டு அவனே உடைத்து விட்டான். அதற்குப் பதிலாகத் தானே ஒன்று எப்படியாவது வாங்கித்

தந்து விடுவதாக வெளியே போனான். என்ன பண்ணினானோ, அரை மணிக்குள் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்து விட்டான். பாவம், குழந்தை, கை தவறுதலாக உடைத்ததற்காக அவனுக்கு நாம் செலவு வைக்கலாமா என்றுதான் மறுபடி உங்களிடம் ஒரு ரூபாய் வாங்கி அவனுக்குக் கொடுத்தேன்” என்றாள்!

*****

## 21. சின்னஞ்சிறு கதைகள்

பெரிய பங்களா. அதன் வாசற்படி சலவைக் கல்லால் இழைக்கப்பட்டிருந்தது. காற்று வாங்க அதன் சொந்தக்காரர் அங்கு வந்து உட்கார்ந்தார். அந்தச் சமயம் பார்த்து, ஒரே கந்தலாக ஆடை அணிந்து, தாடியும் மீசையுமாக ஓர் ஆசாமி வந்து கும்பிட்டு, "சுவாமி! நான் என்றைக்கும் இப்படிப் பிச்சைக்காரனாக இருந்ததில்லை. இருபத்தைந்து வருஷத்துக்கு முந்தி, என் தகப்பனார் இறந்து போகும் போது, லட்ச ரூபாய் சொத்து வைத்து விட்டுப் போனார். அப்போது நான் சிறு பிள்ளை. அந்த அழியாத சொத்தை அழித்தேன்; நான் விளையாடாத விளையாட்டு இல்லை. ஒரே மாதத்தில் பதினாயிரத்தை வீசினேன். கடைசியில் ஏழ்மைத்தனம் வந்தது. கையில் நூறு ரூபாய்தான் மிகுதி இருந்தது.

"அதை வைத்துக் கொண்டு, இன்னொருவருடன் சேர்த்து வியாபாரம் செய்யலாம் என்று யோசனை செய்து கொண்டு பட்டணம் வந்தேன். வழியில் அந்தப் பணமும் கெட்டுப் போயிற்று. அன்று முதல் பிச்சைக்காரனாக இருக்கிறேன். எதானும் உபகாரம் செய்தால் புண்யமாக இருக்கும்..."

வீட்டு எஜமான் யோசனையில் ஆழ்ந்து சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு ஏதோ முடிவுக்கு வந்தவர் போல, "ஓய்! நான் ஒரு விஷயம் சொல்கிறேன். அதைச் சொல்ல என் மனச்சாட்சி என்னை வற்புறுத்துகிறது. இருபத்தைந்து வருஷத்துக்கு முந்தி, இன்று நீர் இருப்பது போல நான் பிச்சைக்காரனாய் இருந்தேன். படுக்க இடமின்றி ஒரு நாள் இரவு சாலையோரமாக வரும் போது கீழே ஒரு நூறு ரூபாய் நோட்டு அகப்பட்டது. அதை வைத்துக் கொண்டு வியாபாரம் தொடங்கினேன். இன்று இருநூறு பேர் வேலை செய்யும் பெரிய ஆலைக்குச் சொந்தக்காரனாய் இருக்கிறேன்...

"அன்று எனக்குக் கிடைத்த நூறு ரூபாய் நோட்டு உம்முடையதே. அது கிடைத்திராவிட்டால், இன்று நானும் பிச்சைக்காரனாகத்தான் இருப்பேன். அந்தப் பணம் போனதால் நீர் இத்தனை நாள் கஷ்டப்பட்டு விட்டீர். அதற்கு ஈடாக நான் உமக்கு முன்னூறு ரூபாய் கொடுக்கப் போகிறேன். அப்போதுதான் எனக்கு மன நிம்மதி ஏற்படும்" என்று கூறினார்.

அந்தப் பிச்சைக்காரன் அன்றிரவு மடியைத் திறந்து, மற்றுமொரு முறை பணத்தை எண்ணினான்: "எத்தனையோ கதைகள் சொல்லிப் பிச்சை எடுத்திருக்கிறேன். இன்று போல் ஆசாமிக்குத் தகுந்த பொருத்தமான

கதை நான் கற்பனை செய்ததே இல்லை" என்று சொல்லிக் கொண்டான்.

*****

## 22. சின்னஞ்சிறு கதைகள்

"என்ன கொத்தனாரே! வேலை ரொம்ப தூங்குகிறதே! சுறுசுறுப்பாக நடக்கட்டுமே!" என்றேன்.

"சுவாமி! என்னையா தூங்கு மூஞ்சி என்கிறீங்க...? உங்களுக்குச் சித்தாள் சதாசிவத்தைப் பத்தித் தெரியுமா? நான் சொல்றேன். நீங்க பத்திரிகைகளுக்கு எழுதுங்க. அவன் பேரு சதாசிவம்; மேஸ்திரி ஐயா அவனைச் 'சதா நித்ரை'ன்னு கூப்பிடுவாரு. அவன் எங்கே வேணுமானாலும், நின்ன படியும் உக்கார்ந்தபடியும் சாய்ந்தபடியும் வேலை செய்த படியும் தூங்கிப் போயிடுவான்.

"தூக்கமென்றால், சாமான்யத் தூக்கம் இல்லை. அவன் விடும் குறட்டையில் பதினைந்தடி தள்ளித் தூங்கிக் கொண்டிருந்தாலும் நான் எழுந்திடுவேன். அதற்காக நான் கண்ட இடத்திலே தூங்குவேன் என்று நீங்க நினைத்து விடக் கூடாது! வேலை செய்ற போது எப்போவானும் கண்ணை மூடிக் கொண்டிருந்தால், அது தூக்கம் இல்லை; யோசனை பண்றேன். அதுவும் நம்ம வீட்டுக் கொத்து வேலைக்கு ரொம்ப யோசனை பண்ண வேண்டியிருக்கிறது.

"இந்தச் சதாசிவம் இருக்கானே, இவன் எதில் வேணுமானாலும் படுத்துக் குறட்டை விடுவான். தெருத் திண்ணையாயிருந்தாலும், கல்லு முட்டு, சுண்ணாம்பு முட்டாயிருந்தாலும், அவனுக்கு எல்லாம் ஒன்றுதான்.

"ஒரு நாளைக்கு மேஸ்திரி ஒரு வேடிக்கை பண்ணினார். அப்போ தீபாவளி சமயம், ஒரு கட்டு யானை வெடி, ஒத்தை வெடி, எலெக்டரிக் வெடி எல்லாம் சேர்த்து ஒரு பெரிய கட்டாகக் கொண்டு போய் வழக்கமாகச் சதாசிவம் படுத்துத் தூங்கும் பெட்டியின் பக்கத்தில் வைத்தார். நாங்கள் தூரத்தில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தோம். சதாசிவம் ஒன்றும் அறியாமல் படுத்துக் கொண்டிருந்தான். மேஸ்திரி வெடிகளுக்கு நெருப்பு வைத்து விட்டு வந்தார். அடே அப்பா; எவ்வளவு பெரிய சப்தம்! பக்கத்திலிருந்த கல்லு முட்டு சிதறிப் போச்சு அந்த அதிர்ச்சியில். ஒரு பர்லாங்கு தூரத்தில் இருந்த வீட்டு ஜன்னல் கண்ணாடி கூட உடைந்தது. கொட்டகையிலிருந்து கீற்றெல்லாம் நாலுபுறமும் பறந்தது.

"சதாசிவம் பெட்டி மீது எழுந்து உட்கார்ந்து கொண்டு கண்ணைத் துடைத்துக் கொண்டான். 'என்னங்க இது! பக்கத்திலே இப்படி ஒரு செங்கல்லைக் கொண்டு வந்து போட்டு வேடிக்கை பன்றது!' என்று சொல்லி விட்டுத் திரும்பிப் படுத்துக் கொண்டு குறட்டை விட

ஆரம்பித்தான்.

“ஆகையாலே, சாமி! என்னை நீங்க தூங்கு மூஞ்சின்னு மட்டும் சொல்லாதீங்க!” என்று முடித்தார் கொத்தனார்.

*****

## 23. சின்னஞ்சிறு கதைகள்

டாக்டர் சிம்மத்தின் வீட்டுக்குள் வெகு பரபரப்புடன் ஓடி வந்தார் ராமபத்திர அய்யங்கார்.

“ஸார்! என் சம்சாரத்துக்கு உடம்பு சௌக்யமில்லை!” என்றான்.

“சற்று நிதானமாக உட்கார்ந்து சொல்லும். உமக்கு உடம்பு ஒன்றும் இல்லையே?” என்று கேட்டார் சிம்மம்.

“அப்படி இருந்தால் தேவவையே; அவள் ரொம்ப கஷ்டப்படுகிறாள். இருமல் குறைக்கிறது. அவள் தூங்கிப் பதினைந்து நாளாகிறது...”

“தொண்டைக்கு மருந்து போட்டுப் பார்த்தீரா?”

'ஐயோ! அதெல்லாம் பார்த்தாச்சு! ஒன்றும் உபயோகமில்லை. உடம்பு துரும்பாய்ப் போயிட்டாள்...!”

“அப்படியானால் 'ஆபரேஷன்' செய்து டான்ஸிலை எடுத்துவிட வேண்டியதுதான்” என்றார் டாக்டர்.

டாக்டர் சிம்மம் ராமபத்திர அய்யங்கார் வீட்டுக்குப் போய், ஆபரேஷன் செய்தார். நாலுநாள் தினமும் போய் வந்தார். அந்த அம்மாளுக்கு இருமல் நின்று, சௌக்யம் ஏற்பட்டது.

சுமார் ஒரு மாதம் கழித்து ராமபத்திர அய்யங்கார் டாக்டர் சிம்மத்தின் வீட்டுக்கு மறுபடி அலறிப் புடைத்துக் கொண்டு ஓடி வந்தார்.

“ஐயோ டாக்டர்!”

“உமக்கு என்ன உடம்பு?”

“எனக்கு ஒன்றுமில்லை. என் சம்சாரத்துக்கு...”

“உம் சம்சாரத்துக்கு என்ன உடம்பு?”

“டாக்டர் ஸார்! சீக்கிரம் வந்து ஆபரேஷன் செய்யுங்கள்; 'டான்ஸில்' எடுங்கள். இருமல் குறைக்கிறது!”

"அடாடா! அப்படியா? அதற்கு இப்போது ஆபரேஷன். செய்யக் கூடாது - வேறு ஏதாவது மருந்து கொடுத்துப் பார்க்கலாம்.”

“இல்லை; ஆபரேஷன்தான் செய்ய வேண்டும். புறப்படுங்கள்.”

“அதெல்லாம் இல்லை. ஒரு மனிதருக்கு ஒரு தடவை 'டான்ஸில்' ஆபரேஷன் செய்தால், மறுபடி செய்ய வேண்டாம். அதுவும் ஒரே மாதத்துக்குள் வேண்டவே வேண்டாம்.”

ராமபத்திர அய்யங்கார் கோபமாக, "டாக்டர் ஸார்! டான்ஸிலுக்கு ஒரு ஆபரேஷன் போதும் என்று நீர் சொல்கிறீரே? அது வாஸ்தவமாயிருக்கலாம். ஆனால் ஒரு மனிதருக்கு ஒரு மனைவிதான் என்று நிபந்தனை இருக்கிறதா? அப்போது என் மூத்த சம்சாரத்துக்கு நீர் ஆபரேஷன் செய்தீர்; இப்போது வந்து என் இளைய சம்சாரத்துக்குச் செய்து விட்டுப் போம்!” என்றார்.

*****

## 24. சின்னஞ்சிறு கதைகள்

அன்று ரயில்வே ஸ்டேஷனில் ஏகப்பட்ட கூட்டம். டிக்கட் கொடுக்கும் இடத்திலோ எள்ளு போட்டால் எள்ளு விழாது. டிக்கட் கொடுத்துக் கொண்டிருந்த பொன்னுசாமிப் பிள்ளை திக்கு முக்காடிப் போய் விட்டார்.

இந்தச் சமயத்தில் டிக்கட் வாங்கிக் கொண்டு போன ஒரு பிரயாணி பொன்னுசாமிப் பிள்ளை கொடுத்த சில்லறைப் பணத்தை எண்ணிப் பார்த்தார். ஒரு தடவைக்கு இரண்டு தடவை எண்ணிப் பார்த்தார்.

கூட்டத்தை விலக்கிக் கொண்டு ஜன்னலண்டை நெருங்கினார்.

“ஸார்! நீங்கள் இப்பொழுது கொடுத்த சில்லறை வந்து-” என்று ஆரம்பித்தார்.

இவர் பேசி முடிப்பதற்குள் பொன்னுசாமிப் பிள்ளை முகத்தில் எள்ளும், கொள்ளும் வெடிக்க, “அதெல்லாம் இப்பொழுது ஒன்றும் கவனிக்க முடியாது. முதலிலேயே சொல்வதற்கென்ன?” என்றார்.

“இங்கே கூட்டம் அதிகமாயிருந்ததால் எண்ணிப் பார்க்க முடியவில்லை. வெளியே போனதும்தான் எண்ணிப் பார்த்தேன்”

“அதெல்லாம் எனக்குத் தெரியாது. வழியில் நிற்காதேயும்; நான் என்ன உம்மோடு வாதாடுவதா? வேலையைப் பார்ப்பதா? இன்னும் எத்தனையோ பேருக்கு டிக்கட் கொடுத்தாக வேண்டும்.”

"இல்லே, வந்து-”

“இல்லையாவது, நொள்ளையாவது! அதெல்லாம் முடியாது. போ அப்பாலே!”

இதற்குள் முன்னும் பின்னும் கூட்டம் நெருக்கித் தள்ள ஆரம்பித்தது. "யாரய்யா! நகரு! நகரு!” என்று சத்தம் போட ஆரம்பித்து விட்டார்கள்.

“என்ன இது? நான் சொல்வதற்குள் கோபித்துக் கொள்ளுகிறீர்களே! நான் வந்து கும்பகோணத்துக்கு ஒரு டிக்கட் வாங்கினேனா?-” என்றார் பிரயாணி.

“இது என்ன ஐயா, பெரிய கழுத்தறுப்பாகப் போய் விட்டது! கூடவோ, குறைச்சலோ, அதெல்லாம் உடனுக்குடன் அப்பவே சொன்னால்தான் ஒப்புக் கொள்ள முடியும். இப்ப வந்து 'சில்லறை அதிகமாகக் கொடுத்து விட்டேன்' என்று நான் சொன்னால் ஒப்புக் கொள்ளுவீரா?”

“அதைத்தான் நான் சொல்ல வந்தேன். நீங்கள் தவறிப் போய் ஐந்து ரூபாய் நோட்டு கொடுத்திருக்கப் பத்து ரூபாய் நோட்டு என்று நினைத்து விட்டீர்கள் போலிருக்கிறது!” என்றார்.

*****

## 25. சின்னஞ்சிறு கதைகள்

எனக்கு முன் சென்ற மனிதன் ஒரு காகிதத் துண்டைத் தவறிக் கீழே போட்டு விட்டுச் சென்றான். அதை எடுத்துப் படித்துப் பார்த்தேன்.

“பொன்னுசாமி கொலை - டிரங்குப் பெட்டி விஷயம் - பாங்கில் நானூறு - போலீஸுக்கு டிமிக்கி - இரகசிய மூட்டை - ஒரே ஓட்டம்!”

எனக்கு முன்னால் சென்ற பேர்வழி கொலையாளி, கொள்ளைக்காரன் என்பதில் எனக்குச் சந்தேகமே தோன்றவில்லை. ஆகவே, அவனை விடாமல் பின்தொடர்ந்தேன்...

அந்த மனிதன் ஒரு ஹோட்டலுக்குள் நுழைந்தான். நானும் பின் தொடர்ந்தேன். சமயம் பார்த்துக் கொண்டிருந்து, நான் சட்டென்று பாய்ந்து அந்த மனிதனைப் பிடித்தேன். “இப்போது ஒப்புக் கொண்டு விடு! அந்தப் பெட்டியில் என்ன இருக்கிறது?” என்று அதட்டிக் கேட்டேன்.

“முடியாது,” என்று எதிர்த்தான் அந்த மனிதன். உடனே நான் அங்கு சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒரு போலீஸ்காரன் பக்கம் திரும்பி, "ஐயா! இதற்குள் ஒரு பிரேதம் இருக்கிறது! திறந்து பார்த்துக் கொள்ளும்” என்றேன்.

எங்களைச் சுற்றி உடனே கூட்டம் கூடிற்று. டிரங்குப் பெட்டியைத் திறந்து பார்த்தால், அதிலே வாழைச் சரகுக் கட்டுகள் இரண்டு இருந்தன. நான் விழித்தேன்.

நான் கண்டெடுத்த கடிதத்தைக் காண்பிக்கவும், அந்த மனிதன் பதில் சொன்னான்:- "பயித்தியக்கார மனுஷரே! நான் ஊருக்குக் கிளம்புவதென்றால், செய்ய வேண்டிய காரியங்கள், எடுத்துக் கொள்ள வேண்டிய பண்டங்கள் எல்லாவற்றுக்கும் ஒரு ஜாபிதா போட்டுக் கொள்வேன்... 'பொன்னுசாமியின் கொலை' என்பது நான் கொண்டு போக வேண்டிய ஒரு நாவலின் பெயர். புதிதாக வாங்க வேண்டியது ஒரு டிரங்குப் பெட்டி. பாங்கியில் என் கணக்கில் கடைசியாக இருப்பது நானூறு ரூபாய்; அதைத்தான் 'பாங்கியில் நானூறு' என்று குறித்துக் கொண்டேன். என் வீட்டுக்காரர் போலீஸில் உத்தியோகம் பார்ப்பவர். அவருக்கு வாடகை பின்னால் கொடுக்கலாமென்பதைத்தான் 'போலீஸுக்கு டிமிக்கி' என்று குறிப்பிட்டிருந்தேன். என் தாயார் சரகு கொண்டு வரச் சொல்லியிருந்தாள். அதை வெளியில் தூக்கிக் கொண்டு போவது அநாகரிகமாக இருந்தபடியால், டிரங்கில் போட்டிருக்கிறேன். அதுதான் 'இரகசிய மூட்டை.' இதெல்லாம் ஆன பிறகு ஊருக்கு

## 26. சின்னஞ்சிறு கதைகள்

பிரபல நடிகர் சோமநாத்தினுடைய பெயரும் புகழும் பட்டணத்தில் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வந்தது. அவருடைய செல்வமும் கூடவே விருத்தியாகிக் கொண்டு வந்தது.

அந்தப் பட்டணத்திற்கு ஒரு நாள் கோபால்தாஸ் என்று ஒருவர் வந்தார். அவருக்கு லேவாதேவி தான் தொழில் என்றார். பலப்பல பித்தலாட்டங்கள் செய்தார். அவர் செயல் சோமநாத்துக்குக் கவலை அளித்தது. ஏனென்றால், சோம்நாத்தைப் பார்த்த பேர் கோபால்தாஸைப் பார்க்க வேண்டியதில்லை; கோபால்தாஸைப் பார்த்த பேர் சோமநாத்தைப் பார்க்க வேண்டியதில்லை. ஒருவரை ஒருவர் உரித்து வைத்தாற் போலிருந்தது. அதோடு மட்டும் இல்லை. கோபால் தாஸை மக்கள் வெறுத்தார்கள்; திட்டினார்கள். இந்த வசைப் புராணங்களைச் சோம்நாத் வாங்கிக் கொள்ள வேண்டியிருந்தது. ஆள் மாறாட்டம்தான் காரணம்.

இதை இப்படியே விட்டால் மோசமாகப் போய் விடுமென்று நினைத்தார் நடிகர். ஆகவே ஒரு நாள் இரவு அவர் கோபால்தாஸை அவர் வீட்டில் தனிமையாகப் போய் பார்த்தார்.

"ஓய் கோபால் தாஸ்! உம்மை ஒரு விஷயம் கேட்டுக் கொள்கிறேன். நம் இருவருக்கும் உருவத்தில் இப்போது கொஞ்சமும் வித்தியாசம் இல்லாமல் இருக்கிறது அல்லவா?”

“சரி அதற்கென்ன?”

“அதனால்தான் என் பெயர் கெட்டு வருகிறது. நீர் மீசை வளர்த்துக் கொள்ளும்.”

“நீர்தான் வளர்த்துக் கொள்ளுமே.”

“அப்படி இல்லை; நான் ஒரு நடிகன். எனக்கு மீசை சரிப்படாது.”

“நான் மீசை வளர்த்துக் கொள்ள முடியாது. என்ன செய்வீர்?”

“என்ன செய்வேனா? என் பணமும் பலமும் உமக்குத் தெரியாதா? எதுவும் செய்து கொள்ள முடியும்.”

மறுபேச்சுப் பேசாமல், கோபால்தாஸ் ஒரு ரிவால்வரை எடுத்து சோமநாத்தைச் சுட்டு வீழ்த்தினார். பிறகு அங்கிருந்து வெளியேறினார்.

பல கிருத்திரமங்கள், மோசடிகள் செய்த 'லேவாதேவி கோபால்தாஸ்' தமது வீட்டில் தற்கொலை செய்து கொண்டு விட்டதாக மறுநாள்

பட்டணம் பூராவும் பேசிக் கொண்டார்கள்.

சுமார் ஒரு வாரத்திற்குப் பிறகு ஒரு நாடகத்தில் நடித்த சோமநாத்தைப் பார்த்த பேர், "சை, இவன் நடிப்பு என்ன நடிப்பு ஸார் தம்பிடி உபயோகமுமில்லை. தொண்டை எங்கேயோ போயிடுத்தே” என்றார்கள்.

வெறும் ஆள் மாறாட்டம் ஸார், வேறொன்றும் இல்லை.

*****

## 27. சின்னஞ்சிறு கதைகள்

சாமாவையர் பட்டணத்துக்குப் புதிசு. என்றாலும் எழும்பூர் ரயில்வே ஸ்டேஷனில் தமக்கு வந்திருந்த பார்சலை எடுத்து வரச் சென்றார்.

“டிக்கட்” என்றான் கண்டக்டர். சாமா ஒரு ரூபாயை நீட்டினார்.

“சில்லறை கிடையாது, ஸார்.”

சாமாவிடமும் சில்லறை இல்லை. கண்டக்டர் மற்றவர்களிடம் டிக்கெட் வாங்கப் போனான். திரும்பி வந்து, "டிக்கெட்டுக்குச் சில்லறை கொடுங்கள். என்னிடம் ஏழரை அணாதான் சேர்ந்திருக்கிறது” என்றான்.

இந்த நிலைமையில் சாமா அய்யர் தம் இடத்தை விட்டு எழுந்து நின்று, வண்டியில் இருந்தவர்களைப் பார்த்து, "யாராவது ஒரு ரூபாய்க்கு இரண்டு அரை ரூபாய்களாகக் கொடுத்தால்கூட போதும், புண்ணியமுண்டு” என்றார்.

பட்டை நாமம் போட்டுக் கொண்டிருந்த ஒருவர் தம்மிடம் இருந்த இரண்டு அரை ரூபாய்களை அந்த ரூபாய்க்குப் பதிலாகக் கொடுத்தார். பிறகு சாமா ஓர் அரை ரூபாயைக் கண்டக்டரிடம் கொடுத்து, அவனிடம் அரை அணாவுக்கு டிக்கெட்டும் 7 அரை அணாவும் பெற்றுக் கொண்டார்.

“அடாடா! தபாலிற்குப் போக வேணுமே!” என்று குரல் கேட்டு நிமிர்ந்து பார்த்தார் சாமா. அவருக்கு உதவி செய்த பெரியவர் கையில் ஒரு கார்டை வைத்துக் கொண்டு இப்படிச் சொல்லிக் கொண்டிருந்தார். அதில் ஒரு காலணா ஸ்டாம்பு ஒட்டியிருந்தது; வேண்டியது அரை அணா ஸ்டாம்பு தான்.

தமது மணி பாக்ஸில் இருந்த அரை அணா தபால் தலை ஒன்று சாமாவுக்கு இப்போது ஞாபகம் வந்தது.

“நான் தருகிறேன். என்னிடம் நீங்கள் கொடுத்த அரை ரூபாயும், கண்டக்டர் கொடுத்த ஏழரை அணாவும் இருக்கின்றன. அதோடு என்னிடம் உள்ள ஸ்டாம்பையும் சேர்த்து உங்களிடம் கொடுக்கிறேன். நான் தந்த ரூபாயை எனக்கு நீங்கள் திரும்பக் கொடுத்து விடுங்கள்!” என்று கூறி, அவ்வாறே செய்தார். அடுத்தபடி பஸ் நின்ற இடத்தில் நாமக்காரர் இறங்கிச் சென்று விட்டார்.

ஸென்டிரல் ஸ்டேஷனை பஸ் அடைந்ததும், கண்டக்டர் சாமாவையரிடம் வந்து இறங்கச் சொன்னான்.

சாமா, “இது பெரிய ரயில் அல்லவோ? எனக்குச் சின்ன ரயிலுக்குத்தான் போக வேண்டும்” என்றார்.

“அப்படியென்றால் இன்னும் அரை அணாவுக்கு டிக்கெட் வாங்க வேண்டும். பிராட்வேயிலிருந்து எழும்பூருக்கு ஓரணா சார்ஜ்!”

"இதோ கொடுக்கிறேன்” என்று மணிபாக்ஸைத் திறந்து, ஒரு ரூபாயை எடுத்து நீட்டினார் சாமா.

“சில்லறை கிடையாது. ஸார். என்னிடம் இருந்த சில்லறையைத்தான் வாங்கிக் கொண்டு விட்டீர்களே?” என்று சொன்னான் அவன்.

சாமா பேந்தப் பேந்த விழித்தார்.

*****

## 28. சின்னஞ்சிறு கதைகள்

அந்தப் பட்டிக்காட்டு மனிதன் கெடியாரக் கடைக்குள் நுழைந்த போது, முதலாளி வெளியே போயிருந்தான். அவனுடைய பிள்ளைதான் கடையைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

“எனக்கு மலிவான கெடியாரமாக ஒன்று வேண்டும் - காண்பிக்கிறீரா?” என்று கேட்டான் அந்த மனிதன்.

முதலாளியின் பிள்ளை அவனை அழைத்துக் கொண்டு போய், ஒரு கண்ணாடி பீரோவைத் திறந்தான். அதற்குள் மூன்று வரிசைகள் கெடியாரங்கள் இருந்தன. ஒரு வரிசையிலிருந்த கெடிகாரங்கள் ஒவ்வொன்றும் இரண்டு ரூபாய் என்றும், அடுத்த வரிசையில் ஐந்து ரூபாய் கெடியாரங்கள் என்றும், மூன்றாம் வரிசையில் பத்து ரூபாய் கெடியாரங்கள் என்றும் பையன் சொன்னான்.

அந்த மனிதன் ஒவ்வொரு ரகத்திலும் ஒவ்வொரு கெடியாரத்தைப் பார்வையிட்டான். பிறகு அவைகளில் ஒன்றும் பிடிக்காதவன் போல், சுவரில் மேலே மாட்டியிருந்த கெடியாரங்களை நோக்கினான். முதலாளியின் மகனும் திரும்பி அந்த மனிதன் பார்த்த இடத்தை நோக்கினான்.

இந்தச் சமயத்தில், அந்தப் பட்டிக்காட்டான். இரண்டு ரூபாய் கெடியாரம் ஒன்றைப் பத்து ரூபாய் கெடியாரம் இருந்த வரிசையில் வைத்து விட்டு, பத்து ரூபாய் கெடியாரம் ஒன்றை இரண்டு ரூபாய் வரிசையில் மாற்றி வைத்து விட்டான். பிறகு, வேறு எதையெல்லாமோ பார்ப்பது போல் கடை முழுதும் பார்த்தான்; கடைசியில் திரும்பவும் கெடியார பீரோவிடம் வந்து நின்றான். இரண்டு ரூபாய் கொடுத்து விட்டு, தான் மாற்றி வைத்த பத்து ரூபாய் கெடியாரத்தைப் பார்த்து எடுத்துக் கொண்டு போய்ச் சேர்ந்தான்

அவன் போய்ச் சற்று நேரத்துக்குப் பிறகுதான் முதலாளியின் பிள்ளைக்கு அவன் செய்த சூழ்ச்சி தெரிய வந்தது. மிகவும் குழப்பம் அடைந்தவனாக, தந்தை வந்தவுடன் நடந்த விஷயத்தைச் சொல்லி வருத்தப்பட்டான்.

முதலாளி சிரித்தான்: “வருத்தப்படாதே! அதனால் பரவாயில்லை. அந்த மூன்று வரிசைகளிலுள்ள கெடியாரங்களும் நான் ஒரே விலைக்குத்தான் வாங்கினேன். ஒவ்வொன்றும் ஒன்றரை ரூபாய். ஆகையால் இப்போது நமக்கு ஒன்றும் நஷ்டமில்லை?” என்றான். பிறகு ஆச்சரியத்துடன், "அது கிடக்கட்டும்! போய் விட்டுப் போகிறது. இப்படி நடுக் கடைத் தெருவில்

வந்து மோசம் செய்யும் ஆசாமி எவ்வளவு அயோக்யனாக இருக்க வேண்டும்?” என்றான்.

*****

## 29. சின்னஞ்சிறு கதைகள்

ஜ கதீசய்யருக்கு ட்யூஷனிலேயே மாதம் முப்பது ரூபாய்க்கு மேல் வரும்படி வருகிறது. எட்டுப் பையன்களை வரிசையாக உட்கார்த்தி வைத்துக் கொண்டு, புத்திமதிகள் சொல்லிக் கொடுக்கும் அழகைப் பார்த்த பேரெல்லாம் மெச்சிக் கொள்வார்கள். ஒரு நாள் அவர் மாணாக்கர்களுக்குச் செட்டும் சிக்கனமுமாக இருக்கும் முறைகளைப் பற்றி “லெக்சர்” செய்தார்.

“செட்டாக வரும்படிக்குள் செலவு செய்வதைப் போல் சிறந்த முறை வேறெதுவும் இல்லை. ஒருவன் கடனில் விழுந்து விட்டால், பிறகு மீள்வதற்கு இரட்டிப்புச் சிரமம் இருக்கிறது. கேளுங்கள்; அவன் கடனையும் திரும்பக் கொடுக்க வேண்டியிருக்கிறது; சொந்தச் செலவுகளையும் பார்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. அதற்குப் பெரு முயற்சி வேண்டும் அல்லவா?

"இரண்டாவதாக, கடன் வாங்கும் வழக்கம் சோம்பேறித் தனத்துக்கு அறிகுறியாக இருக்கிறது. தானே சம்பாதித்துக் கொள்ள வசதி இருக்கும் போதே, கடன் வாங்கும் பழக்கமுள்ளவர்கள், சம்பாதித்துக் கொள்ளாமல் லகுவாகக் கை மாற்று வாங்கப் போவார்கள். இது சோம்பலை வளர்க்குமா, வளர்க்காதா?

“கடைசியாக, கடன் வாங்குவதால், நம் கௌரவம் குறைகிறது. அதைத் திருப்பிக் கொடுக்கச் சால்ஜாப்புகள் சொல்லும் போதே, மானமே போய் விடுகிறது. சரியான காலத்தில் வாங்கின கடனைக் கொடுக்காமல் இருப்பதால் ஒருவன் வார்த்தை தவறியவனாகிறான். அப்புறம் கடனைக் கொடுத்து விட்டுச் சால்ஜாப்புக் கேட்டுக் கொள்பவன் எவ்வளவு இழிவாக நினைப்பான்!”

இந்தச் சமயம் அறைக்குள் ஒரு பையன் வந்து நின்றான். “மளிகைக்கடை முருகேசம் செட்டியார் பார்த்துவரச் சொன்னாரு. மளிகை பாக்கி நாலு மாசமா நின்னு போயிடுத்து, மேலேயும் கொடுத்துண்டு வர்ரோம். பணம் கொடுத்தாலொழிய இனிமே சாமான் கொடுக்க மாட்டேன்னு சொல்லச் சொன்னாரு” என்றான்.

“சரிதான், அப்பா! கொஞ்சம் பொறு! மாதக் கடைசியிலே எப்படியாவது பார்த்துக் கொடுக்கிறேன்!” என்றார் ஐயர்.

*****

## 30. சின்னஞ்சிறு கதைகள்

“ஜல் ஜல்” என்று ஜாலராக்களின் சப்தமும், “திடும், திடும்” என்று மிருதங்கத்தின் இடி முழக்கமும், “விட்டல! விட்டல! ஜய ஜய விட்டல!” என்ற பக்தர்களின் கோஷமும் சேர்ந்து கிளம்பின. எங்கள் வீட்டு மாடியில் குடியிருப்பவர் தம் சகாக்களுடன் அப்படி பஜனை செய்தார். அதோ அவர்கள் நர்த்தனம் செய்த போது, நேர் கீழே இருந்த அறையில் என் மனைவியின் தலைமீது ஒரு சிறு காரைக்கட்டி பெயர்ந்து விழுந்தது. அவள் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்து உயர நோக்கினாள்.

“என்னன்னா! பார்த்துண்டே இருக்கயளே! எல்லாரும் மாடியைப் பொத்துண்டு கீழேயே விழுந்து விடுவா போல் இருக்கே!” என்றாள்.

“வரட்டும். அப்புறமாவது பஜனை நிற்கிறதா, பார்க்கலாம்” என்றேன்.

"பஜனை எப்படியாவது தொலையட்டும்! இப்படிக் காரைக் கட்டிகள் விழுந்தால் என் மண்டை உடைந்து விடும் போல் இருக்கிறதே! போங்கள்! போய்ப் புருஷாளா லட்சணமாய் அதை நிறுத்தச் சொல்லுங்கள்!” என்று உத்தரவிட்டாள்.

நான் மெள்ள மாடியை நோக்கிச் சென்றேன். பக்தர்களைப் போய்ப் பஜனையை நிறுத்தச் சொல்வது எவ்வளவு அபசாரம் என்று கலங்கியவாறே உள்ளே தலையை நீட்டினேன்.

என்னைக் கண்டு கண நேரம் ஓய்ந்த பஜனை திடீரென்று மறுபடி கிளம்பிற்று. "ரகுபதி ராகவ ராஜாராம்” என்று ஒரு முகமாக முழக்கினார்கள். அந்தச் சப்தத்தில் என் குரலே எனக்குக் கேட்கவில்லை.

சுமார் ஒரு மணி நேரம் கழித்து அங்கிருந்து மெள்ள நழுவி என் அறைக்கு வந்து சேர்ந்தேன். என் மனைவி கடுங் கோபமாக விழித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

“என்ன! நீ இன்னும் தூங்கவில்லையா?” என்று கேட்டு விட்டேன்.

உடனே கடல் மடை திறந்தாப் போல் பேச்சுக்கள் குமுறிக் கொண்டு வந்தன. “நீங்கள் என்ன மனுஷாள்! ஒரு பொம்மனாட்டியின் தலையில் வீடே இடிந்து விழுந்தால் கூடக் கவனிக்காத புருஷாள்...!” என்று அவள் தொடங்கி, பஜனை செய்பவர்களைப் பொதுவாகக் கபடஸ்தர்கள் என்பதையும், என் பெற்றோருக்குக் கிராதக நெஞ்சு என்பதையும், அந்த நெஞ்சு அப்படியே எனக்கு வந்திருப்பதையும், இது போன்ற அந்தரங்கமான பல விஷயங்களையும் சரமாரியாகப் பொழிந்தாள்.

அப்பொழுது எங்கள் அறைக் கதவைத் திறந்து கொண்டு உத்திராட்சம் அணிந்த பஜனைக்காரர் ஒருவர் வந்தார். என்னைப் பார்த்து, “சார்! தயவு செய்து கொஞ்சம் மெள்ளப் பேசிக் கொள்ளுங்கள். உங்கள் சப்தத்தில், பகவானுடைய நாமாவளிகள் காதில் விழமாட்டேனென்கிறது!” என்று கூறிவிட்டுத் திரும்பினார்.

*****

## 31. சின்னஞ்சிறு கதைகள்

முருகேசன் காலையும் கையையும் நீட்டி விட்டுக் கொண்டு சோம்பல் முறித்தான். அவன் உதடுகளில் ஒரு புன்னகை தவழ்ந்தது; முகத்தில் ஒரு தெளிவு தோன்றிற்று. அவன் கிழிந்த கோட்டுப் பைக்குள் ஒரு முழத் தங்கச் சங்கிலி இருந்தது தான் அவனுடைய சந்தோஷத்துக்குக் காரணம். அதை விற்றால், அவன் பாடு ஐந்து மாதத்துக்கு யோகந்தான். ஐந்து மாதங்கள்!

“அண்ணாத்தே! என்ன சேதி?” என்று ஒரு குரல் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தான் முருகேசன். திரும்பிப் பார்த்தால் அவன் தோழன் திருட்டுத் தங்கவேலு நின்று கொண்டிருந்தான்.

"அண்ணாத்தே! ரொம்ப சந்தோஷமாயிருக்கயே! 'சரக்கு' எதினாச்சும் கிடைச்சுடுத்தோ?” என்று பக்கத்திலே வந்து உட்கார்ந்து, அவன் பைக்குள் சுவாதீனமாகக் கையை விட்டுத் துளாவி, சங்கிலியை எடுத்தான். “இதை எங்கே கிளப்பினே?” என்றான்.

"தங்கவேலு! தங்கவேலு...! அதை மாத்திரம் தொடாதே...!”

“அதை மாத்திரம் கேட்காதே!” என்று தங்கவேலு அந்தச் சங்கிலியைத் தன் பையில் போட்டுக் கொண்டான்.

"இதென்ன வேடிக்கை! பண்டத்தைத் திருப்பிக் கொடு!” என்று வாதாடினான் முருகேசன்.

“பண்டத்தையும் கொடுத்து விட்டு, போலீசிலேயும் சொல்லும்படி வேலை வைக்கிறயே” என்றான் தங்கவேலு.

"போலீஸ்” என்ற வார்த்தை முருகேசனை அடக்கிற்று. தங்கவேலு சங்கிலியுடன் போய்ச் சேர்ந்தான்.

வெகு நேரம் மனச் சஞ்சலத்துடன் முருகேசன் அங்கேயே கிடந்தான். நன்றாக அஸ்தமித்த பிறகு அவன் எழுந்து சாலை ஓரமாக மெள்ள நடந்தான். அப்போது ஒரு பெரிய மரத்தின் அடியில் அவனுக்குத் தங்கவேலுவின் உருவம் மங்கின இருளில் தென்பட்டது. உடனே முருகேசன் சுறுசுறுப்பாக வேலை செய்தான். பதுங்கிப் பதுங்கி, சமீபத்தில் நெருங்கி, மறைவில் இருந்தவாறு கவனித்தான். மரத்தின் ஒரு பொந்துக்குள் ஆழமாய்க் கை விட்டு எதையோ வைத்து விட்டு, தங்க வேலு வேகமாய் அவ்விடத்தை விட்டுச் சென்றான். அங்கே எதை ஒளித்து வைக்கிறான் அவன் என்பது முருகேசனுக்குத் தெரியாததல்ல.

விடியற் காலையில் எழுந்த முருகேசன், அதிக வேகமாகச் சாலையில்

அந்த மரத்தைத் தேடிக் கொண்டு போனான். அதன் பொந்தில் சங்கிலியும் கிடைத்தது. “அதிர்ஷ்டம்! அதிர்ஷ்டம்!” என்று மெள்ளக் கூறி ஆனந்தப்பட்டான். இவ்வளவு லகுவாகத் தங்கவேலுவிடம் சிக்கிய பொருள் திரும்பக் கிடைக்கும் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை.

சந்தடியில்லாமல் பின்னால் வந்து நின்ற சைக்கிளிலிருந்து இறங்கிய போலீஸ்காரனும், “அதிர்ஷ்டம்தான்! இப்படிக் கொடு அதை! வாய்க்காங்கரைத் தெரு வீட்டிலே எடுத்ததுதானே?” என்று கேட்டான்.

முருகேசன் எதிர்பார்த்த ஐந்து மாத 'யோக'த்தை அந்த ஊர் மாஜிஸ்ட்ரேட் அவனுக்கு அளித்தார்.

*****

## 32. சின்னஞ்சிறு கதைகள்

பிறந்த நாள் முதலாக அன்று வரையில், அதாவது கடந்த இருபத்தைந்து வருஷங்களாக, கேவலம் ஒரு தலைவலி, ஜலதோஷம், காய்ச்சல் என்பதையே இன்னதென்று அறியாத வைத்திக்கு, அன்று கடுமையான வயிற்று வலி தோன்றி வதைத்தது.

ஆபீஸில் உட்கார்ந்து வேலை செய்து கொண்டிருந்தவனுக்கு என்ன காரணத்தாலோ வயிற்றில் வலிக்க ஆரம்பித்தது. வலி பொறுக்க மாட்டாமல், அன்று லீவு வாங்கிக் கொண்டு வந்தான். வீட்டில் சிறிது நேரம் படுத்துக் கொண்டு, வலி குறையுமோ வென்று பார்த்தான். நாழிகை ஏற, ஏற வலியும் அதிகரித்துக் கொண்டே தான் சென்றது.

கடைசியில் வைத்தி, டாக்டரிடம் சென்று காண்பித்து விடுவது என்று தீர்மானித்து விட்டான். இதுவரையில் அவன் எந்த வைத்தியரிடமும் சென்று, நாக்கையோ, கையையோ நீட்டிக் காண்பித்ததில்லை. ஆகவே அவனுக்குக் கொஞ்சம் சங்கோஜமாகத்தான் இருந்தது.

எனினும் அவன், தைரியமாய்த் தெருக் கோடியில் இருந்த வைத்தியர் தர்மலிங்கம் பிள்ளையின் வீட்டை அடைந்தான். வைத்தியரின் அறைக்கு வெளியே போடப்பட்டிருந்த ஒரு பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டு, உள்ளே சென்றிருந்த நோயாளி வெளியே வரட்டுமென்று காத்துக் கொண்டிருந்தான். ஒவ்வொரு நிமிஷமும், ஒருவர் உள்ளே போவதும், இன்னொருவர் வெளியே வருவதுமாகவே இருந்தார்கள்.

“நல்ல வரும்படி கிடைக்கும் போலிருக்கிறது, இவருக்கு! ஒரு நாளைக்குக் குறைந்த பட்சம் முப்பது நாற்பது பேர்கள் தவறாமல் வருகிறார்களே...! ஹூம்... என்னை எப்பொழுது உள்ளே கூப்பிடுவாரோ?” என்று யோசித்துக் கொண்டே, வைத்தி அப்பொழுதுதான் உள்ளிருந்து வெளியே வந்த ஒருவரைப் பார்த்து, "ஏன், ஸார்? உள்ளே கூட்டமாயிருக்கிறதா? டாக்டருக்கு எப்பொழுது ஒழியும்?” என்று கேட்டான்.

அவர் வைத்தியை ஒரு முறை மேலும் கீழும் பார்த்து விட்டு, "ஏன் சார் உங்களுக்கு தெரியாதா...? வைத்தியருக்குப் பத்து நாளாக 'டைபாயிட்' ஜுரமாயிருக்கிறது. இன்று அவருக்கு ரொம்ப மோசமாயிருக்கிறது என்று கேள்விப்பட்டு அவரைப் பார்த்து விட்டுப் போகவல்லவா எல்லாரும் வருகிறார்கள்!” என்றார்.

*****

## 33. சின்னஞ்சிறு கதைகள்

டாக்டருடைய அறையில் நான்கு பேர் நின்று பார்த்தார்கள். மற்றவர்களான சமஸ்தான திவான், ராஜகுரு, சமஸ்தானப் போலீஸ் அதிகாரி - ஆக மூவருக்கும் டாக்டர், தமது புதிய ஆராய்ச்சியை எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தார். ஒரு கண்ணாடிப் பாத்திரத்தில் ஒரு சிறு முயல் இருந்தது. "ஓர் ஆவியை உள்ளே செலுத்திய மூன்றாவது நிமிஷம் முயல் எவ்வித உபத்திரவமும் இல்லாமல் உயிரை விட்டு விடும்" என்று டாக்டர் விவரித்தார். அந்த ஆராய்ச்சியினால் உலகத்தில் எவ்வளவோ மாறுதல்கள் ஏற்படப் போகின்றன என்றார். பேசிக் கொண்டிருந்த போதே, அந்த முயல் ஒடுங்கிப் போனதை அவர்கள் கண்டார்கள்.

அந்தச் சமயத்தில் படீரென்று ஒரு கண்ணாடி வெடித்தது. பரபரப்புடன் டாக்டர் ஓடிப் போய், தாம் இருந்த விஷ அறைக் கதவை இழுத்துப் பூட்டிக் கொண்டு வந்து பிறகு நிதானமாக, "எதிர்பாராத காரியம் நடந்து விட்டது. இதே போன்ற ஒரு கண்ணாடி ஜாடி உடைந்து விட்டது. இன்னும் மூன்றே நிமிஷத்தில் நாமும் இந்த முயலைப் போல்..."

"கதவைத் திறவும்!" என்று உத்தரவிட்டார் திவான்.

"கூடாது! திறந்தால், இந்த ஆஸ்பத்திரியில் உள்ள நூறு பேரும் இறக்க வேண்டும்!" என்றார் டாக்டர்.

ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். உலக வாழ்வு இன்னும் மூன்றே நிமிஷம் என்றவுடன் அவர்களுக்கு ஒன்றுமே தோன்றவில்லை.

டாக்டர் மட்டும் உன்னிப்பாக அவர்களைக் கவனித்தார்.

ராஜகுரு சொன்னார்: "இறக்கத்தான் போகிறேன். நான் செய்திருக்கும் பாவங்களுக்கு மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். நான் ராஜகுரு என்று பெயர் வைத்துக் கொண்டு, எவ்வளவோ அசத்யமான செயல்களைச் செய்து பொருள் சம்பாதித்திருக்கிறேன். என் மனமாரக் கடவுளிடம் மன்னிப்புக் கோருகிறேன்."

"நமக்குள் இனி என்ன ரகசியம்?" என்று தொடங்கிய திவான், "நானும்தான் எவ்வளவோ லஞ்சங்கள் வாங்கியிருக்கிறேன்" என்றார்.

போலீஸ் அதிகாரி, "நீங்களே இப்படி வாய்விட்டுச் சொல்லும் போது எனக்கு மட்டும் என்ன? நான் எவ்வளவோ முறைகளில் அநியாயமாகவும் குரூரமாகவும் நடந்து கொண்டிருக்கிறேன்!" என்று ஒப்புக் கொண்டார்.

டாக்டர் இப்போது வாய் திறந்து, “மன்னிக்க வேண்டும். இப்போது ஒரு ஜாடி உடைந்ததாகச் சொன்னேன் அல்லவா? அது விஷக்காற்று இருந்த ஜாடி அல்ல! உங்கள் உண்மைச் சொரூபத்தைக் கண்டு சொல்லும்படி மகாராஜா உத்தரவிட்டார். நான் கண்டுபிடித்து விட்டேன்!” என்றார்.

மற்ற மூவரும் ஒருவரைப் பார்த்து ஒருவர் விழித்தார்கள்.

*****

## 34. விஷயம் தெரிந்தவன்

மிஸ் லீலாவதி தீர்மானமாகச் சொல்லி விட்டாள் - விஷயம் தெரிந்தவனாகப் பார்த்துத் தான் அவள் கல்யாணம் செய்து கொள்வாள்; பணம், அந்தஸ்து என்று பார்க்கப் போகிறதில்லை!

இது சமாசாரம் காதுக்கு எட்டியவுடன் ஸ்ரீநிவாசன் ஒரு குதி குதித்து எழுந்தான். இத்தனை நாளாக அவன் மனத்தை அரித்துக் கொண்டிருந்த கவலைகள் எங்கேயோ ஓடிப் போய் விட்டன. முன்பு, அவன் முகம் அவ்வளவு வசீகரமாயில்லையே என்று விசாரப்பட்டுக் கொண்டிருந்தான்; அவனுக்கு டென்னிஸ் ஆடத் தெரியாதே, லீலாவதி எதிரில் தன் சாமர்த்தியத்தைக் காண்பிக்க முடியவில்லையே என்று குறைபட்டுக் கொண்டிருந்தான். இப்போது லீலாவதி, அவள் வாயாலேயே 'விஷயம் தெரிந்தவ'னுக்கே தான் வாழ்க்கைப் படப் போவதாகச் சொல்லி விட்டாள். "இனி எனக்கு மிஞ்சின புத்திசாலியும் இருக்க முடியுமா?" என்று எண்ணி விட்டான்.

அவன் நினைத்ததிலும் உண்மை இருந்தது. அவன் காலேஜில் வாங்கியிருந்த ஸ்காலர்ஷிப்புகள் என்ன, மெடல்கள் என்ன, புத்தகப் பரிசுகள் என்ன, இவை அதற்குச் சாட்சி சொல்லுமே!

இவன் முன்னால் அந்த அற்பப் பயல் சுந்தரராமன் நிற்க முடியுமா? ஆள் அங்கமாக, சிரித்துச் சிரித்துப் பேசி விட்டால் சரியாகப் போய் விடுமோ? - ஸ்ரீநிவாசன் தன் வெற்றியைப் பற்றி அவநம்பிக்கைப் படவேயில்லை. மேலும் ஆகாயக் கோட்டைகள் கட்டினான்.

ஒரு வாரத்திற்குப் பிறகு ஸ்ரீநிவாசன் லீலாவதியை அவள் வீட்டில் போய்ப் பார்த்தான். அவள் அப்போது ஒரு நாற்காலியை வெளிவராந்தாவில் இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

ஸ்ரீநிவாசன் எதிரில் உட்கார்ந்து கொண்டான். மனோகரமாக இருந்தது மாலை வேளை. ஆகாயத்தில் அப்போது தான் மினுக் மினுக்கென்று இரண்டொரு நட்சத்திரங்கள் தென்பட ஆரம்பித்தன.

அதுதான் லீலாவதியிடம் தன் அறிவின் விசாலத்தைத் தெரிவிக்க வேண்டிய சரியான காலம் என்று அவன் நினைத்தான். "பார்த்தாயா, லீலா? அதோ ஒரு நட்சத்திரம் தெரிகிறதே! ஆனால் அது உண்மையில் 427,392,183, 463,000 மைல் தூரத்தில் இருக்கிறது. அந்த நட்சத்திரம் இன்று அவிந்து போனாலும் நமக்குத் தெரிவதற்குப் பல வருஷங்கள் பிடிக்கும்" என்றான்.

லீலா பேசாமல் இருந்தாள். ஸ்ரீநிவாசன் மேலும் சொன்னான்: "இரண்டு

வகை வாயுக்களை ஓரிடத்தில் அடைத்தால், அவை ஒன்றுடன் ஒன்று எவ்வளவு வேகமாகக் கலக்கும் தெரியுமா? இன்று அந்தக் கணக்கைத்தான் போட்டுக் கொண்டிருந்தேன். ரொம்ப அற்புதமாக இருந்தது. முந்தா நாள் ஒருவகை மீனைப் பற்றிப் படித்தேன். அதன் அலகு ஒரு விநாடிக்கு 362 தரம் துடிக்கிறதாம்; உடனே உனக்கு சொல்ல வேண்டுமென்று நினைத்தேன்''. இதுபோன்ற பல விஷயங்களை ஸ்ரீநிவாசன் அடுக்கிக் கொண்டே போனான்.

இதுவரை லீலா திறந்த வாய் மூடாமல் ஸ்ரீநிவாசனுடைய அபூர்வ அறிவை வியந்து கேட்டுக் கொண்டிருந்தாள். நன்றாக அஸ்தமித்து, பனி பெய்ய ஆரம்பித்தவுடன், எழுந்து உள்ளே போனாள்; ஸ்ரீநிவாசனும் தான் வெற்றி பெறுவது நிச்சயமென்று வீட்டுக்குத் திரும்பினான்.

மறுநாள் மாலை அதே நேரத்துக்கு லீலாவின் வீட்டுக்குச் சுந்தரராமன் வந்தான். லீலா வழக்கம் போல் நாற்காலியில் உட்கார்ந்திருந்தாள். எதிரில் ஒரு நாற்காலியில் அவன் உட்கார்ந்து கொண்டு ஒரு புன்னகை செய்தான்.

ஜிலு ஜிலுவென்று காற்றடித்தது, சாயந்திர வெளிச்சத்தில் லீலாவின் அழகு அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. பரவசத்துடன் அவள் முகத்தைப் பார்த்தவாறு சற்று நேரம் உட்கார்ந்திருந்தான்.

"லீலா!” என்று ஆரம்பித்தான் சுந்தரராமன். நிமிர்ந்து பார்த்தாள் லீலா.

“உன்னை மணந்து கொள்ள வேண்டியவன் விஷயம் தெரிந்தவனாக இருக்க வேண்டுமென்று சொல்லி விட்டாய், எனக்குத் தெரிந்தது போதுமா என்று நீதான் சொல்ல வேண்டும். நீலோத்பலங்கள் போன்ற உனது கண்களின் அழகு எப்பேர்ப்பட்டதென்று எனக்குத் தெரியும்; உன் முகத்தைப் பார்த்த பேர் சந்திரனைப் பார்க்க வேண்டாம்; உன் பேச்சைக் கேட்ட பேர் வேறு சங்கீதத்தைக் கேட்க வேண்டாம்; பெரிய சினிமா ராணிகளின் சௌந்தர்யம் உன் லாவண்யத்துக்கு முன் விழுந்து கெஞ்ச வேண்டியதுதான். உன்னைவிட என் இருதயத்துக்குப் பிடித்த பெண்மணி இந்த உலகில் இல்லை என்று என் நெஞ்சு சொல்லுகிறது!” என்றான்.

லீலா சற்று நேரம் அவன் வார்த்தைகளைச் சுவைத்து ரசித்தாள். பிறகு, கனிவு ததும்பும் புன்னகையுடன், “உங்களைப் போல் விஷயம் தெரிந்த பேர் எனக்கு அகப் பட்டால் போதாதா?” என்றாள் மிஸ் லீலா.

*****

## 35. ராஜாவும் ராஜுவும்

"அது ராஜாவாகத்தான் இருக்கட்டும், மகாராஜாவாகத்தான் இருக்கட்டும், மனுஷன் தானே ஐயா? மனுஷனுக்குள்ள கஷ்டங்கள், சுகங்கள், அநுகூல பிரதிகூலங்கள் ஏற்படத்தானே செய்யும்? அவற்றிலிருந்து தப்பித்துக் கொள்வது சாத்தியமா?" என்றான் ரகுராமன்.

"அடேடேடே! எப்படா உனக்குப் புத்தி இந்த வழியிலே, வேதாந்த மார்க்கத்திலே போக ஆரம்பித்தது? எங்கேயாவது கதை புராணம் கேட்டயா?" என்று பரிகாசமாகக் கேட்டான் அவன் நண்பன் மீனாட்சி சுந்தரம்.

"இல்லையடா! வாஸ்தவமாகத்தான் சொல்கிறேன். நினைத்துப் பார்த்தால் ஆச்சரியமாக இருக்கிறது. நம்ம தையற்கார ராஜுவைப் பற்றி ஞாபகம் வந்தது; அப்படியே இந்த ஞாபகமும் வந்தது."

"தையற்கார ராஜுவுக்கும், ராஜாக்களுக்குப் பீடை ஏற்படுவதற்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும்?" என்று கேட்டான் மீனாட்சி சுந்தரம்.

"அது பெரிய கதையாச்சே!"

"பரவாயில்லை, சொல்லு!"

"கடுக்காய்க் கோட்டை ராஜாவைப் பற்றி நீ கேட்டிருக்கலாம். இப்போது இருக்கிற ராஜாவுக்குத் தகப்பனாரைப் பற்றிச் சொல்லுகிறேன். அவர் கியாதி பரவாத இடம் கிடையாது. அவர் நடக்கிறாப் போல் மக்கள் நடந்தார்கள். அவர் பேசுகிறாப் போல் பிரஜைகள் பேசினார்கள். அவர் போட்டுக் கொண்ட சட்டை மாதிரியே குடிகள் அணிந்து கொண்டார்கள். வீணாக விஸ்தரிப்பானேன்? அந்த சமஸ்தானத்தில் அவர் மூக்கைச் சிந்தினால் அவருடைய மக்கள் அவ்வளவு பேரும் சிந்தினார்கள். சிந்தி விட்டுப் பெருமையடித்துக் கொண்டார்கள்.

இப்பேர்ப்பட்ட கியாதியுள்ள ராஜாவுக்கு ஒரே ஒரு குறை மட்டும் இருந்தது. அதாவது, அவர் கைச் செலவுக்கு அடிக்கடி பணம் கிடைப்பது சிரமமாயிருந்தது. ஏனென்றால், பணம் கிடைத்த உடனேயே அவருக்குச் செலவாகி விடும். உன்னையும் என்னையும் போல் குறுகிய மனமா? ராஜா அல்லவா! தாராளமாகச் செலவு செய்தார்.

அந்தக் காலத்தில் தையற்கார ராஜு எப்படியோ எந்த விதமாகவோ இந்த ராஜாவின் பார்வையில் பட்டு விட்டான். அதையும் அவன்

பயன்படுத்திக் கொண்டு விட்டான்.

ஊரில் புது மோஸ்தரான காலருடன் சட்டை போட்டுக் கொள்வது என்று இரண்டொருவர் வழக்கம் வைத்துக் கொண்டிருந்தார்கள். இவர்கள் சென்னைக்குப் போய் வந்தவர்கள்; புது நாகரிகம் கற்றுக் கொண்டு வந்தவர்கள். இவர்களை மக்கள் அலட்சியமாகப் பார்த்து, இவர்கள் காலரைக் கண்டு நகைத்து வந்தார்கள்.

தையற்கார ராஜு நினைத்துப் பார்த்தான்:- 'இந்த மாதிரி புதுக் காலர் வைத்து ஒரு ஐயாயிரம் சட்டைகள் தைத்து வைத்துக் கொள்ள வேண்டியது. என்றாவது ஒரு நாள் நமது ராஜாவை இந்தச் சட்டைகளில் ஒன்றைப் போட்டுக் கொண்டு வெளியே வரும்படி செய்துவிட வேண்டியது. அப்புறம் பாக்கிச் சட்டைகளை ஒன்று ஐந்து ரூபாய் சொன்னாலும், மக்கள் வாங்காமல் போகிறார்களா?' என்று எண்ணினான். அடுத்த நாள் வீடு வாசலை விற்றான்; ஐயாயிரம் சட்டைகளைத் தயார் செய்து விட்டான்.

ராஜாவை இப்போது போய்ப் பார்த்தான், 'என்ன? உனக்கு நான் ஏதாவது சில்லறை பாக்கி கொடுக்க வேண்டுமா?' என்றார் ராஜா.

'அதெல்லாம் இல்லை; வேறொரு விஷயம்' என்றான் ராஜு.

'பின் என்ன விஷயம்?'

ராஜு சட்டையில் ஒன்றைக் கையோடு கொண்டு வந்திருந்தான். அதை அவரிடம் கொடுத்தான். 'இதை நீங்கள் நாளைக்கு நாட்டிய கச்சேரிக்கு வரும் போது போட்டுக் கொண்டு வரவேண்டும்' என்றான் ராஜு.

'ஏன்?'

'நீங்கள் போட்டுக் கொண்டு வந்தால் உங்கள் கையில்... நீங்கள் இஷ்டப்படி தர்மம் செய்ய - ஆயிரம் ரூபாய் கொடுக்கிறேன்.'

ராஜா சிந்தனை செய்தார். அப்போது திவான் அவர் காதோடு, 'ஒப்புக் கொள்ளுங்கள். அந்த நாட்டியக்காரிக்குக் கொடுக்க கஜானாவில் பணம் இல்லை' என்றார்.

'சரி, ஆயிரத்து ஐந்நூறு கொடுப்பாயா?' என்றார் ராஜா ஒரு புன்னகையுடன்.

ராஜா சொல்கிற போது ராஜு எதிர்த்துப் பேச முடியுமா? 'அப்படியே!' என்று சொல்லி விட்டு வெளியே வந்தான். பாவம், சட்டைகளெல்லாம் தைத்தது போக அவனிடம் மிகுந்திருந்ததே ரூ. 1498 தான். எங்கேயாவது

இரண்டு ரூபாய் கடன் சேர்த்து ராஜாவுக்குக் கொடுக்கலாம் என்று தான் வந்தான்.

அன்றே அவ்வாறு ஆயிரத்து ஐந்நூறு ரூபாயும் ஒரு சட்டையையும் ராஜாவிடம் கொடுத்து விட்டு வந்தான். மறுநாள் நாட்டியக் கச்சேரி நடக்கும் பந்தலுக்கு வெளியில் ஆவலுடன் காத்துக் கிடந்தான். அவன் சொத்து பூராவும் இந்த ராஜா போட்டுக் கொண்டு வரும் சட்டையில் இருந்தது. ஆனால், பரிதாபம்! அன்று அவன் முகத்தைப் பார்க்க முடியவில்லை! அவ்வளவு பரிதாபமாய்ப் போயிற்று. யாராக இருந்தாலென்ன? ராஜாவானாலும் மகாராஜாவானாலும் மனுஷன்தானே!”

மீனாட்சி சுந்தரத்துக்குக் கோபம் தாங்க முடியவில்லை. "என்ன எழவு, என்ன நடந்தது, சொல்லித் தொலையேன்! அந்த ராஜா ஏமாற்றி விட்டாரா? அதனால் ஏழை ராஜூ அழிந்து போனானா? அவர் சட்டை போட்டுக் கொள்ள மறந்து போய் விட்டாரா?” என்று படபடப்புடன் கேட்டான்.

“அதெல்லாம் இல்லை. ராஜா சொன்ன வாக்குப்படி நடந்து கொண்டார்; சட்டையைப் போட்டுக் கொண்டார்; மற்றபடி அவர் என்ன செய்வார்? அவருக்கு அன்று ஜலதோஷம் பிடித்திருந்தது. பின்னால் சால்வையால் கழுத்து, தலை உள்பட போர்த்துக் கொள்ளாமல் வெளியே கிளம்பக் கூடாதென்று சமஸ்தான டாக்டர் உத்தரவு போட்டிருந்தாரே!”

*****

## 36. மீனாட்சி எழுதிய கதை

“ஏன்னா” என்றாள் மீனாட்சி.

பரமசிவன் பேசாமல் வேலையைக் கவனித்தான்.

“ஏன்னா!” என்றாள் மறுபடியும். வெள்ளைக்காரர்கள் என்றால், புருஷன் பெயரை மனைவி சொல்லிக் கூப்பிடலாம். இங்கே உயிர் போவதாக இருந்தாலும் "ஏன்னா!” என்று தானே அழைக்க வேண்டியிருக்கிறது.

“என்ன!” என்றான் பரமசிவன்.

“இந்தப் பத்திரிகையில் 'பெண்கள் சுதந்தரமாக இருக்க வேண்டும், புருஷர்களுடன் சம உரிமை அவர்களுக்கும் உண்டு' என்று போட்டிருக்கிறதைப் பார்த்தேளா?”

"பார்த்தேன். நாம் இரண்டு பேரும் குஸ்தி போட்டுக் கொள்வோம், வரயா?”

"அதற்குச் சொல்லவில்லை, உங்களுக்கு வரும் பணத்தில் சரிபாதி எனக்குக் கொடுத்து விடுங்கள்.”

“கொடுத்து விடுகிறேன். நான் எழுதுகிற கதையில் பாதி நீ எழுதினால், தாராளமாகக் கொடுத்து விடுவேன்!”

“என்னால் முடியாதோ?”

"நீ மாத்திரம் அப்படிச் செய். உனக்கு என்ன பணம் வருகிறதோ, அவ்வளவு நான் கூடப் போட்டுத் தருகிறேன்!”

“வாஸ்தவந்தானோ இந்த வார்த்தை?”

“ஆட்சேபணை என்ன?”

இத்துடன் பேச்சு நின்றது. மீனாட்சி குழந்தை அழுவதைக் கவனிக்க உள்ளே சென்றாள். பரமசிவன் ஆபீஸ் கட்டுகளைப் பார்வையிட்டான்.

அன்று மத்தியானம் பாதி சாப்பிட்டுக் கொண்டிருந்த போது 'பிடித்து விட்டது!' என்றான் பரமசிவன், ஒரு துள்ளுத் துள்ளி.

"என்ன பயித்தியமா?” என்று கேட்டாள் மீனாட்சி.

“கதைக்கு ஒரு 'பாயிண்ட்' வகையாய்ப் பிடித்து விட்டது!”

“சரிதான்” என்று அவள் அடுப்பைக் கிளறி விட்டாள். பரமசிவன் வாய்விட்டுச் சொல்லிக் கொண்டான். “அருமையான கதையாக இருக்கும், பார் இந்தக் கதைக்குச் 'சந்தர்ப்ப அசந்தர்ப்பம்' என்று மகுடம்

சூட்டலாம் என்றிருக்கிறேன்.

“இரண்டு பேர் இருக்கிறார்கள். ஒருவன் சித்திரக்காரன்; ஒருவன் கதாசிரியன். இரண்டு பேரும் ஒரு நாள் சமுத்திரக் கரையில் சந்தித்துக் கொள்கிறார்கள். பேச்சு வளருகிறது. தங்கள் பெயரைச் சொல்லிக் கொள்ளாமல் தொழிலை மட்டும் சொல்லிக் கொள்கிறார்கள்.

“கதாசிரியன் உலகத்தையே வெறுத்துப் பேசுகிறான். 'நல்ல நல்ல கதையாக எழுதுகிறேன். கதை உள்ளத்தை அள்ளுகிறதாக இருக்கிறது. ஆனால் அதைக் கெடுப்பது அதற்காக வரும் சித்திரங்கள்தான். ஐயோ! என் கதைகளைக் கேலிக் கூத்தாக அவைகள் அடித்து விடுகின்றன. அவைகளைப் பார்த்து விட்டால், மேற்கொண்டு கதை எழுதக்கூட மனம் வரமாட்டேனென்கிறது' என்கிறான்.

“சித்திரக்காரன் தன் குறைகளைச் சொல்ல ஆரம்பிக்கிறான்: 'என் வயிற்றெரிச்சலைக் கேளுங்கள், சித்திரக் கலை மகோன்னதமானது. அதைக் கொண்டு போய் மகா மட்டமான கதைகளில் வீணாக்கும் போது எனக்கு என்னமோ செய்கிறது. கதைகளாம், கதைகள்! என் கஷ்டம் சகிக்க முடியாதது ஸார். விளக்குமாற்றுக் கட்டைக்குப் பட்டுக் குஞ்சலம் என்பது போல் உபயோகமற்ற கதைகளுக்கு நல்ல சித்திரம் போடுகிறதாம்' என்று அங்கலாய்க்கிறான்.

“அஸ்தமிக்கும் வரையில் இரண்டு பேரும் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்புறம் எழுந்து போகும் போது, ஒருவர் பெயரை மற்றொருவர் விசாரித்தார். வழக்கமாக அந்த ஆசிரியன் கதைக்கு அந்தச் சித்திரக்காரன் தான் படம் போடுகிறான் என்று ஏற்படுகிறது. கதை எப்படி?”

“ரொம்ப அழகாய்த்தான் இருக்கிறது” என்று மீனாட்சி சொல்லி முகவாய்க் கட்டையைத் திருப்பி, தோள் பட்டையில் அழகாக இடித்துக் காண்பித்தாள். பரமசிவன் அக்காட்சியை நின்று பார்த்து விட்டுப் போனான்.

இதெல்லாம் நடந்து ஒரு மாதத்துக்கு மேல் இருக்கும். அன்று பரமசிவன் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது, 'தபால்' என்ற சப்தம் கேட்டு வாசலில் போய் மீனாட்சி ஒரு கவரைக் கொண்டு வந்தாள். அதைப் பிரித்தவுடன், “வந்து விட்டது! வந்து விட்டது!” என்று குதிக்கவும், "என்ன? என்ன?” என்று பரப்புடன் பரமசிவன் கேட்டான்.

“நான் எழுதிய கதைக்குச் செக்” என்றாள் மீனாட்சி.

“என்ன நிஜமாகவா?”

“பன்னிரண்டரை ரூபாய்க்கு வந்திருக்கிறது. நீங்கள் அன்றைக்குச் சொன்னீர்களே, எனக்கு எவ்வளவு வருகிறதோ அவ்வளவு நீங்களும் போடுகிறதாக! ஞாபகம் இருக்கா! எங்கே, நீங்கள் ஒரு பன்னிரண்டரை கொடுத்தால் ஒரு லுங்கிப் புடவை ஜரிகை பேட் போட்டது வாங்கிக் கொள்கிறேன்” என்றாள்.

“ஆமாம் சொன்னேன். கட்டாயம் தருகிறேன். அந்தக் கதையைக் கொண்டு வா, பார்க்கலாம்!”

மீனாட்சி அவன் முகத்துக்கு நேரே ஒரு பத்திரிகையை நீட்டி, பின் அதைப் பக்கத்தில் போட்டு விட்டு, “நீங்கள் சாப்பிட்டு விட்டுப் பாருங்கள். நான் போய் குழாயில் ஒரு சொம்பு தீர்த்தம் பிடித்துக் கொண்டு வருகிறேன்” என்று கிளம்பி விட்டாள்.

பரமசிவன் சாப்பிட்டு எழுந்து வந்து அந்தக் கதையைச் சாவகாசமாய்ப் படித்தான், கதையின் தலைப்பு 'சந்தர்ப்ப அசந்தர்ப்பம்'. கதை ரொம்ப நன்றாக இருந்தது. சமுத்திரக் கரையில் ஒரு கதாசிரியனும் சித்திரக்காரனும் சந்தித்துப் பேசிக் கொண்டதைப் பற்றியது!

பத்திரிகையைக் கீழே போட்டு விட்டு, இடுப்பில் கையை வைத்துக் கொண்டு பரமசிவன் ஒரு பெருமூச்சு விட்டான்.

*****

## 37. விளம்பர வாழ்க்கை

சுப ஜனனம்

இன்று காலை ஏழு மணிக்கு ராவ் பகதூர் ராஜாராமின் மனைவியார் ஸ்ரீமதி மீனாட்சி பாய்க்கு ஒரு பிள்ளைக் குழந்தை பிறந்து இருக்கிறது. தாயும் சிசுவும் நலமாக இருக்கிறார்கள் என்று உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் அறிவிக்கப்படுகிறது.

நர்ஸ் தேவை

குழந்தைகளைப் பராமரிக்க அநுபவமுள்ள நடுத்தர வயதுள்ள நர்ஸ் தேவை. வேறு அலுவல்கள் எதுவும் இல்லாமல் குடும்பத்துடன் வந்து தங்கியிருக்க சம்மதப்படு பவர்கள் மட்டுமே ஏற்றுக் கொள்ளப்படுவார்கள். மாதச் சம்பளம் ரூ. 15, காலை 7 மணி முதல் 10 மணி வரையில் நேரில் வந்து பார்க்கலாம்.

ராவ்பகதூர் ராஜாராம் 'மஞ்சுளா'', மயிலை, மதராஸ்.

அறிவிப்பு

சென்ற வாரம் நடைபெற்ற எங்கள் செல்வன் கோபாலன் ஆண்டு நிறைவுக்குப் பரிசுகளும் வாழ்த்துச் செய்திகளும் ஏராளமாக அனுப்பியிருந்த நண்பர் உறவினர்கள் எல்லாருக்கும் எங்கள் மனப்பூர்வமான நன்றியைச் செலுத்துகிறோம். ஒவ்வொருவருக்கும் தனித்தனியே எழுதித் தெரிவித்துக் கொள்ள இயலாததற்கு மன்னிக்கக் கோருகிறோம்.

ராவ்பகதூர் ராஜாராம், மீனாட்சிபாய்

உடனே தேவை

ஆங்கிலத்தில் நல்ல தேர்ச்சியுள்ள ஒரு பி.ஏ. ஆசிரியர், பன்னிரண்டு வயதுப் பையனுக்கு ட்யூஷன் சொல்லிக் கொடுக்க உடனே தேவை. தெலுங்குப் பேசத் தெரிந்தவர்கள் மட்டுமே மனுச் செய்து கொள்ளலாம். காலை மாலை இருமுறை வரவேண்டியிருக்கும். மாதச் சம்பளம் ரூ. 20.

ராவ்பகதூர் ராஜாராம், மதராஸ்

வாடகைக்குப் பங்களா

கவர்ன்மெண்ட் காலேஜ் சமீபத்தில் எலெக்ட்ரிக் விசிறி முதலிய வசதிகளுடன் சிறு பங்களா ஒரு வருஷத்துக்கு வாடகைக்குத் தேவை. வாடகை முப்பது முதல் நாற்பத்தைந்துக்குள், கீழ்க்கண்ட

விலாசத்துக்குத் தெரிவிக்கவும்.

ஆர். கோபாலன், ஜூனியர் பி.ஏ. வகுப்பு, கவர்ன்மெண்ட் காலேஜ், சென்னை.

மணமகள் தேவை

பி.ஏ. வகுப்பில் படித்து வரும் சுமார் லட்ச ரூபாய்க்குப் பூஸ்திதி உள்ள 22-வயது இளைஞனுக்கு - எஸ்.எஸ். எல்.ஸி. படித்து, வீணை வாசிக்கக்கூடிய ஆந்திர, பாரத்வாஜ் கோத்ரமல்லாத பெண் தேவை. ரூ. 10,000க்குக் குறைவாக எதிர் ஜாமீன் கொடுக்க முடியாதவர்கள் எழுத வேண்டியதில்லை.

ராவ்பகதூர் ராஜாராம்

சொந்த சமாசாரம்

சரோஜா! இனித் தாமதிக்க முடியாது. நாளை இரவு ரயிலடியில் தயாராயிரு!

கோபு

சொந்த சமாசாரம்

அன்பரே! கவலை வேண்டாம். நான் தவற மாட்டேன்!

சரோஜா

இளைஞன் காணப்படவில்லை

உளவு சொல்பவருக்கு வெகுமதி ரூ. 200.

ஒற்றை நாடி சரீரம், சிவந்த மேனி, கூர்மையான மூக்கு, அகண்ட நெற்றி - காதில் வைரக் கடுக்கன், சில்க் ஷர்ட், ப்ரிக் பாட்டர்ன் போட்ட ஜரிகை வேஷ்டி, இந்த அடையாளங்களுடன் சென்ற 20 மாலை முதல் என் குமாரன் கோபாலன் காணப்படவில்லை. கடைசியாக சென்ட்ரல் ஸ்டேஷனில் கண்டதாகத் தெரிகிறது. உளவு சொல்பவருக்கு ரூ. 200 வெகுமதி அளிக்கப்படும்.

ராவ்பகதூர் ராஜாராம், “மஞ்சுளா”, மயிலாப்பூர், சென்னை.

ரிஜிஸ்தர் திருமணம்

ராவ்பகதூர் ராஜாராமின் புதல்வனான ஸ்ரீ கோபாலனுக்கும் சரோஜா பாய்க்கும் இன்று பங்களூரில் ரிஜிஸ்தர் முறைப்படி திருமணம் நடந்தது. புது தம்பதிகளுக்கு வாழ்த்துச் செய்திகளும் பரிசுகளும் அனுப்பிய

நண்பர்களுக்குத் தம்பதிகள் நன்றி செலுத்துகிறார்கள்.

கைலாச மருந்தகம்

நிச்சயமான சிகிச்சை - உத்திரவாதமான மருந்துகள்! நீரிழிவு, மது மோகம் முதலிய சகல நோய்களுக்கும் - எவ்வளவு நாள்பட்டதாக இருந்தாலும் - எங்கள் மருந்துகளினால் நிரந்தரமான குணம் ஏற்படுகிறது. பிரபல டாக்டர்கள் சிபார்சு செய்கிறார்கள். ஒருவர் ஒரே முறை சிகிச்சை செய்து கொண்டால் போதும்.

ஆனந்த வைத்தியர், மெடலிஸ்ட்.

காலமானார்

சென்னை பிரமுகரான ராவ்பகதூர் ராஜாராமின் மனைவியான ஸ்ரீமதி மீனாட்சிபாய் பல நாட்களாக நீரிழிவினால் கஷ்டப்பட்டு கைலாச மருந்தகத்தில் சிகிச்சை பெற்று வந்தவர், நேற்றிரவு பரமன் திருவடி சேர்ந்தார். அவருக்கு வயது 52. கணவரையும் ஏக புத்திரனையும் விட்டுச் செல்கிறார்.

நோட்டீஸ்

இதன் மூலம் எங்கள் கட்சிக்காரர் ராவ்பகதூர் ராஜாராம் சகலமான பேர்களுக்கும் தெரிவித்துக் கொள்வதென்ன வென்றால் இப்போது பல இடங்களில் அவருடைய குமாரன் கோபாலன் அவர் பெயரை உபயோகித்துக் கடன் வாங்கித் திரிந்து வருவதாகக் காதுக்கு எட்டியிருக்கிறது. எங்கள் கட்சிக் காரருடைய இஷ்டத்துக்கு விரோதமாக இவர் மணந்து கொண்டு குடும்பத்திலிருந்து விலகி விட்டதால் அவர் வாங்கும் கடன்கள் எங்கள் கட்சிக்காரரை எவ்வழியிலும் கட்டுப்படுத்தா. எங்கள் கட்சிக்காரர் சொத்துக்கள் யாவும் சுயார்ஜிதமாகையால், அவரது குமாரருக்கு இவைகளில் எவ்வித உரிமையும் இல்லை.

ராகவன், வரதன், கோபாலன், அட்வகேட்ஸ்.

மரணம்

திடீரென்று மாரடைப்பினால் ராவ்பகதூர் ராஜாராம் நேற்றிரவு 9 மணிக்கு மரணமடைந்தார்.

தாராள மனதுடையவரும் பிரமுகருமான ராவ்பகதூர் பல தர்மங்களில் ஈடுபட்டிருக்கிறார். இது சமாசாரம் அவருடைய குமாரன் ஸ்ரீ ஆர். கோபாலனுக்கு அறிவிக்கப்படுகிறது.

ஞாபகார்த்தம்

என் அருமைத் தாய் மாது ஸ்ரீ மீனாட்சிபாய் அம்மையும், தந்தை ராவ்பகதூர் ராஜாராம் அவர்களும் பொன்னணி உலகு சேர்ந்ததன் ஞாபகார்த்தமாக, சோகமும் அன்பும் பொங்கி வழியும் இருதயத்துடன்.

ஆர். கோபாலன்

வந்தன அறிவிப்பு

எங்கள் அருமைப் புதல்வன் சிரஞ்சீவி ராஜாராமனுடைய ஆண்டு நிறைவு வைபவத்துக்குப் பரிசுகளும் வாழ்த்துச் செய்திகளையும் அனுப்பி வைத்த உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் மனமார்ந்த வந்தனத்தை அறிவிக்கிறோம்.

ஆர். கோபாலன், ஜி. சரோஜா பாய்.

புதுவருஷப் பட்டங்கள்

ராவ் சாகிப்... ஆர். கோபாலன்...

ஷஷ்டி அப்த பூர்த்தி

அன்பர்களுக்கு ஓர் வேண்டுகோள்

ராவ்சாகிப் ஆர். கோபாலனுக்கு நாளது ஜுன் மாதம் 15ஆம் தேதி வெள்ளிக்கிழமை நடக்கவிருக்கும் ஷஷ்டி அப்த பூர்த்தி வைபவத்தின் போது, நண்பர்களும், அபிமானிகளும் சிறப்பாக ஒரு பண முடிப்பு அளிக்கத் தீர்மானித்துள்ளோம். ராவ்சாகிப் கோபாலன் நமது நகருக்குப் பாடுபட்டு உழைத்திருப்பதை அறியாதவர் யாரும் இருக்க முடியாது. அனைவரும் அவரவர்களால் ஆனதை நன்கொடையாக அளித்து வைபவத்தைச் சிறப்பாகச் செய்விக்கக் கோருகிறோம். அபிமானிகள் நன்கொடைகளைக் கீழ்க்கண்ட விலாசத்துக்கு 12ஆம் தேதிக்குள் அனுப்ப வேண்டும்.

- ட்ரெஷரர், ராவ்சாகிப் ஆர். கோபாலன், ஷஷ்டி அப்த பூர்த்தி ஸெலிப்ரேஷன் கமிட்டி, சென்னை.

உபந்யாசகர் தேவை

வேத சாஸ்திரப் பிரதிபாத்யமாயுள்ள சர்ச்சைகளைத் தெளிவாக எடுத்துக் கூறி, பரலோக பரமான ருத்ர நமக சமக மந்திராதிகள் பூஜை விதிகளை அனுஷ்டான பூர்வமாகிக் கற்றுக் கொடுக்க யோக்யதாம்சங்களுடன் பூரண அத்யயனம் செய்துள்ள ஆசிரியர்

தேவை. குடும்பத்துடன் வந்து இருக்கத் தயாராக உள்ளவரே வேண்டும். அவரது குடும்ப சம்ரட்சணையுடன் மாதம் முப்பது ரூபாயும் அளிக்கப்படும். இதர உபாத்தியாயங்கள் அலுவல்கள் எதுவும் வைத்துக் கொள்ள அனுமதிக்க முடியாது.

ராவ்சாகிப் ஆர். கோபால் சர்மா

தேக வியோகமானார்.

சமீபத்தில் ரிடையராகி, ஞான மார்க்கத்தில் சத்காலம் கழித்து வந்த ராவ்சாகிப் ஆர். கோபால சர்மா தேக வியோகமானார். இறக்கும் போது வயது 63. மனைவியையும் ஒரு குமாரனையும் எண்ணற்ற நண்பர்களையும் துக்க சாகரத்தில் ஆழ்த்தி விட்டுச் செல்கிறார்.

உறவினர்கள்

சொந்த சமாசாரம்

என் தந்தையார் ராவ்சாகிப் ஆர். கோபால சர்மா காலமானது பற்றி எங்களுக்கு வருத்தம் தெரிவித்திருக்கும் ஏராளமான நண்பர்களுக்கு நன்றியுள்ளவர்களாகியிருக்கிறோம். ஒவ்வொருவருக்கும் தனிப்பட எழுதித் தெரிவித்துக் கொள்ள இயலாததற்கு மிக வருந்துகிறோம்.

தனயன்

*****

## 38. பெண்கள் விஷயம்

மோட்டார் சட்டென்று வழியில் நின்றது. சகுந்தலா தன் அழகிய தலையைத் திருப்பி, ஒரு கம்பீரப் பார்வை பார்த்தாள். "அடேடே! மோட்டார் நின்று போயிடுத்தே!" என்றாள்.

கோபாலன் ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டே அதைப் பார்த்தான். "ஆமாம்! என்ன பண்ணலாம்?" என்று கேட்டான்.

"ஒக்கப் பண்றது! வேறென்ன பண்ணுவாளாம்!" என்று உத்தரவிட்டாள் சகுந்தலா.

மோட்டாரைத் தெருவில் கண்மூடித்தனமாய் அவள் கொண்டு வந்த விதத்தைப் பற்றி ஏதோ குறை கூற எண்ணிய கோபாலன், அவள் முகத்தைப் பார்த்து விட்டு, சட்டென்று வாயை மூடிக் கொண்டான். பெண்களுடைய சுபாவம் அவனுக்கு நன்றாய்த் தெரியும். அவர்கள் கண்ணீர் வெள்ளத்தில் உள்ள சுழல்களையும் அவன் அறிவான்; ஆகையால் நாக்கை அடக்கிச் சும்மா பேசாமல் நின்றான்.

சகுந்தலா அப்படியே - அந்த இடத்திலேயே - மோட்டாரை விட்டு விட்டு, பேசாமல் முன்னால் நடந்து பத்தடி போய் விட்டாள். "சற்று நிற்கப் படாதா எனக்காக?" என்று முணமுணத்துக் கொண்டே கோபாலன் மோட்டார் வண்டியைத் தள்ளிக் கொண்டு வந்தான். "சை! என்ன இந்தப் பெண்கள்? இவர்கள் ஏன் பிறக்கிறார்களோ!" என்று அவனுடைய எண்ணங்கள் ஓடின.

சமீபத்திலிருந்த ஒரு பங்களா வாசலை அடைந்ததும் சகுந்தலா சற்றுத் தயங்கி, கோபாலன் வருகையை எதிர் பார்த்தது போல் நின்றாள்.

கோபாலன் நெருங்கியதும், "என்ன இவ்வளவு மெல்ல வந்தாய்!" என்று அதட்டினாள்.

கோபாலன் வேகமாகச் சென்றான்.

"இப்படி வேகமாகப் போனால் இப்போ என்ன அவசரமாம்?" என்றாள், குறை கூறுகிற பாவனையில். கோபு வெறுமனே பல்லைக் கடித்துக் கொண்டான். "புருஷன் என்றால் பெண்களுக்குச் சேவகனா?" என்று வாயோடு சொல்லிக் கொண்டான்.

"என்ன பேச்சு அது! மூஞ்சியைப் பார்க்கல்லே!"

"உன் மூஞ்சிக்கு என் மூஞ்சி எப்படியும் குறைவில்லே!"

சகுந்தலா உறுமிக் கொண்டு நடந்தாள். கோபாலன் மௌனமாகப் பின்

தொடர்ந்தான்.

இரண்டு நிமிஷம் சென்றது.

சகுந்தலா நின்று, தன் நீல விழிகளை அவன் பக்கமாக உருட்டி, ஒரு மாயப் புன்னகை செய்தாள். "எனக்கு ஒன்று வேண்டும். கேட்டால் கிடைக்குமா?" என்றாள்.

"கேள்!"

"காசு, பணம், ரூபா!"

கோபுவின் முகத்தில் கலவரக் குறி தோன்றிற்று. "எப்போ பார்த்தாலும் காசா? எனக்கென்ன காசு விளையறதா? நேத்திக்குக் கொடுத்தேன்; முந்தானாள் கொடுத்தேன்; அதுக்கு முந்தி கொடுத்தேன். சும்மாச் சும்மாக் கேட்டால் வருமோ?"

இதற்குப் பதில் சொல்லாமல் சகுந்தலா கோபுவின் கழுத்தில் கைகளை வைத்துத் தொங்கலானாள். முகத்தைப் பரிதாபமாகக் கெஞ்சுகிற பாவனையில் அவன் மார்பை ஒட்டி வைத்துக் கொண்டாள்.

ஆனால் கோபு அசைந்து கொடுக்கவில்லை. "இதெல்லாம் நம்ம கிட்டப் பலிக்காது, இனிமே, இப்படிக் கேட்ட போதெல்லாம் காசு கொடுத்துக் கொண்டே இருந்தால், நான் போகிற வழி...?"

சகுந்தலா மறுபடி ஒரு மாதிரியாகப் பார்த்தாள்! அந்தக் கள்ளச் சிரிப்பில் கோபு ஓர் ஆட்டம் ஆடினான். அவளை அணைத்துக் கொண்டு விட்டான். அப்புறம் ஒரு கன்னத்தில் ஒரு முத்தமும் கொடுத்தான். இப்போது மற்றக் கன்னத்தைக் காண்பிக்கும்படி கேட்டான்.

சகுந்தலா தன்னை விடுவித்துக் கொண்டு, "இப்போ கொடுக்கலாமா நான் கேட்டது?" என்றாள்.

கோபுவின் முகத்தைப் பார்க்க வேண்டுமே! "ஓகோ! இது ஒரு சாமர்த்தியமோ! இல்லைன்னா இல்லைதான்! என்னண்டை மறு பேச்சுக் கிடையாது!" என்றான் ஒரே அடியாக!

இவ்வளவு நேரம் அடக்கி வைத்துக் கொண்டிருந்த ரோஷம் சகுந்தலாவுக்குப் பீறிக் கொண்டு வந்து விட்டது. கண்கள் பலபலவென்று கண்ணீர் உகுத்தன. அடி உதடு பயங்கரமாக வளைந்து ஒரு பெரிய அழுகையை முன் கூறிற்று.

"சீ! இதுவும் ஒரு யுக்தியா?" என்றான் கோபு. அவனுடைய வெறுப்பும் எல்லையை மீறி ஓடிவிட்டது. தெருவில் இறங்கினான். காலால்

மோட்டாரைப் பார்த்து ஓங்கி ஒரு உதை கொடுத்தான்! அது ஒரு துள்ளித் துள்ளி ஆகாயத்தில் கிளம்பி, விர்ரென்று பறந்து போய்ப் பக்கத்திலிருந்த ஒரு சிறு குட்டையில் 'தொப்'பென்று விழுந்து மிதந்தது. அது கள்ளிப் பலகையால் செய்த பொம்மை மோட்டார்; ஆகையால் அது மிதந்தது, கோபுவும் சிறு பயல்தான் என்றாலும் அதைப் பலமாகத்தான் உதைத்திருந்தான்.

சகுந்தலா அழுகையை நிறுத்தி ஒரு கணம் நடந்த விஷயத்தைக் கவனித்தாள். இப்போது அவள் பெரிய சத்தம் போட்டுக் கதற ஆரம்பித்து விட்டாள். அவளும் குழந்தை தானே? வருகிற ஆவணிக்குத்தானே ஆறு வயது நிறையப் போகிறது?

*****

## 39. டாக்டர் சொன்னபடியே!

மிஸ்டர் சுந்தரம் எல்லாவற்றிலும் மிதமாக இருந்தார். சாப்பாட்டு விஷயத்திலோ வெகு ஜாக்கிரதையாக இருந்தார்.

அவருக்கு வியாதியே வராததற்குக் காரணம், அவர் உடம்பைப் பற்றி சிரத்தை எடுத்துக் கொண்டதல்ல; உடம்பைக் கெடுத்துக் கொள்ளாமல் இருந்ததுதான் என்று சொல்ல வேண்டும்.

பஜனைகளில் சுண்டல் பிரசாதம் கொடுத்தால் சாப்பிட மாட்டார். நண்பர்கள் வீட்டில் ரவாகேசரி கொடுத்தால் நிமிர்ந்து கூடப் பார்க்க மாட்டார், பசித்தால் ஒழிய - அதுவும் வழக்கமான வேளையில் பசித்தால் ஒழிய - வாயைத் திறக்க மாட்டார். ஒன்பதாவது மணி படுப்பார். ஆறாவது மணி எழுந்திருப்பார். அவர் அபரிமிதமாக அருந்திய சுவை எதென்றால், புத்தகங்களில் கண்ட சுவை என்று சொல்லலாம். அவருக்கு எதன் மேலாவது அதிக மோகம் என்றால், அது அவருடைய ஆபீஸ் வேலையில்தான். அவர் தம் உடம்பைப் பற்றிக் கவலை எடுத்துக் கொள்ளவில்லை; ஏனெனில், அவருக்கு உடம்புக்கு வருவதே இல்லை.

இப்படியாக சுந்தரம் முப்பத்திரண்டாவது வயதை வந்தடைந்தார். உலகத்தில் அவருக்கு ஒரு கவலை கிடையாது. வீட்டில் குற்றம் குறை சொல்ல அவருக்கு ஒரு மனைவி வாய்க்கவில்லை. அவர் ஆபீஸ் வேலையிலும் அப்பு அழுக்குச் சொல்வார் இல்லை.

இந்தச் சமயத்தில்தான் ஒரு நாள் சுந்தரத்துக்கு அவருடைய நண்பர்கள் சிலர் மூலம் உடம்பைப் பற்றிய கவலை உண்டாகியது.

“என்னப்பா சுந்தரம், சோர்ந்தாப்பலே இருக்கிறாயே?” என்று கேட்டார் ஆபீஸ் நண்பர் ராஜகோபாலய்யர்.

“ஒன்றுமில்லையே! எப்போதும் போல்தானே இருக்கிறேன்?” என்று பதில் அளித்தார் சுந்தரம்.

"இப்போ கொஞ்ச நாளாகவே நீர் சற்று சுணக்கம் தான்” என்று கூறினார் கிருஷ்ணமூர்த்தி.

“முன்னாலேயே டாக்டரிடம் காண்பித்து விடுவது நல்லது, இப்படித்தான் பாருங்கள், என் மச்சினன் கோபால் சாமி இருந்தானே...” என்று லெட்ஜர் கிளார்க் அண்ணாசாமி ஒரு பழங்கதையை ஆரம்பித்து, அதை பயங்கரமாக விவரித்துக் கொண்டு போனார்.

சுந்தரம் டாக்டரைப் போய்ப் பார்ப்பதென்று முடிவு செய்தார். அவர்

இதற்கு முன்பு ஒரு டாக்டரையும் பார்த்தது கிடையாது. இப்போது பார்க்க வேண்டிய அவசியம் என்ன என்றும் புரியவில்லை; என்றாலும் மூன்று நண்பர்கள் சேர்ந்தாப் போல் ஒரே வாக்காகச் சொன்ன பிறகு கவனிக்காமல் இருப்பது தகாது என்று எண்ணினார். அவர் மனதை என்னமோ வேலை செய்தது. சட்டுப் புட்டென்று தமது உடம்பைப் பற்றித் தெரிந்து கொள்ள, அன்று மத்தியானமே பாங்கியில் தமது கணக்கில் இருந்த பதினேழு ரூபாயையும் எடுத்துக் கொண்டு, வைத்தியர்களைப் பரீட்சித்துப் பார்த்து விடுவதென்று மானேஜரை லீவ் கேட்டார்.

ஆபீஸ் மேனேஜர், “உடனே போங்கள்! உடம்பைப் பார்த்துக் கொள்ளுங்கள்... நான்கூட இப்போதுதான் உம்மைக் கவனித்தேன்” என்றார்.

முதல் முதலாக சுந்தரம் டாக்டர் கே. எம்.பி. சென்பங்களாவை நோக்கிச் சென்றார். டாக்டர் சென் பிரமாதமான பேர்வழி என்று ஊரில் புகழ் பெற்றவர். ஜெர்மனியில் ஒரு பரீட்சையும் ஸ்விட்ஜர்லாந்தில் ஒரு பரீட்சையும், தென் அமெரிக்காவில் இருக்கும் குயகொடாரில் ஒரு பரீட்சையும் கொடுத்து விட்டு டிக்ரிகள் பெற்று, சரியாகப் பதினேழு அட்சரங்களைத் தமது பெயருக்குப் பின் சேர்த்துக் கொண்டார். சுந்தரம் அங்கிருந்த சோபாக்களையும், கட்டில்களையும் கண்டு பிரமித்துப் போய் நின்ற போது ஒரு படுதாவைத் தள்ளிக் கொண்டு டாக்டர் சென் வந்தார். வந்ததும் சுந்தரத்தினுடைய சட்டையைக் கழட்டச் சொன்னார். பிறகு சோபாவில் குப்புறப் படுக்கச் சொல்லி, உடம்பின் பல பாகங்களையும் தமது ஆள்காட்டி விரலினால் அவர் குத்திப் பார்த்தார். ஹும் ஹும்! என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார். பிறகு கையைப் பிடித்து நாடியைப் பரிசோதனை செய்தார். கடைசியில் "மிஸ்டர்! உங்களிடம் இந்த விஷயத்தைச் சொல்ல எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது. நீங்கள் நான் சொல்கிறபடி கேட்க வேண்டும். உங்கள் இருதயம் பழுதாகியிருக்கிறது. இப்பேர்ப்பட்ட இருதயத்தை வைத்துக் கொண்டு நீர் இத்தனை காலம் எப்படி நடமாடி வந்தீர் என்பதே எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. உடனே ஒரு கெட்ட ரத்தக் குழாயை அப்புறப் படுத்தியாக வேண்டும். இல்லாவிட்டால், என்ன நடக்கும் என்று நான் சொல்ல மாட்டேன்... நானே இந்த ஆப்ரேஷனைச் செய்வேன். முன்னூறு ரூபாய் பீஸாகும்...”

சுந்தரம் தயங்கினார்.

“உங்களுக்கு, நான் சொல்கிற போது தெரியாது. திடீரென்று ஒரு நாள்

இந்த வியாதி படுக்க வைத்து விடும்... அப்புறம் உம் இஷ்டம்... சொல்ல வேண்டியது என் கடமை... இப்போது எனக்கு பீஸ் ஐந்து ரூபாய்... குப்புசாமி, இவரிடம் பீஸ் வாங்கிக் கொள்!"

டாக்டர் அந்தப் படுதாவைத் தள்ளிக் கொண்டு உள்ளே போய் விட்டார். மிகுதி பன்னிரண்டு ரூபாயுடன் சுந்தரம் வாசலில் வந்தார்.

சுந்தரத்துக்கு என்னமோ திருப்தி ஏற்படவில்லை. இன்னும் யாரைப் பார்க்கலாம் என்று எண்ணிய போது டாக்டர் ராமரத்தினம் ஞாபகம் வந்தது. டாக்டர் ராமரத்தினம் இங்கிலாந்தில் இருந்து விட்டு வந்தவர். நல்ல பிராக்டிஸ், கைராசி என்று சொல்லிக் கொள்கிறார்கள்.

சுந்தரம் அவர் வீட்டை அடைந்தார். "நான் இங்கே வந்ததற்குக் காரணம்..." என்று ஆரம்பித்தார்.

டாக்டர் ராமரத்தினம் கையமர்த்தி, "போதும்! நீர் எதற்கு வந்தீர் என்று எனக்குத் தெரியும்! சட்டையைக் கழட்டும்... பனியனைக் கழட்டும்... இப்படிப் படும்" என்றார்.

திடீரென்று டாக்டர் ராமரத்தினம் தமது முட்டியால் சுந்தரத்தின் வயிற்றில் ஒரு குத்துக் குத்தி, "இது வலிக்கிறதா?" என்றார்.

சுந்தரம் பல்லைக் கடித்து, வலியைப் பொறுத்துக் கொண்டு, "ஆமாம்!" என்றார்.

"நாக்கை நீட்டும்!"

சுந்தரம் நாக்கை நீட்டினார்.

"எனக்கு முன்னாலேயே தெரியும்" என்று சொல்லி, ராமரத்தினம் சுந்தரத்தின் உடம்பு பூராவும் குழாய் வைத்துப் பார்த்தார். "ஓய்! உமது வயிற்றில் பெரிய கோளாறு, ஐயா! இதை வைத்துக் கொண்டு இவ்வளவு நாள் எப்படிச் சாப்பிட்டுக் கொண்டிருந்தீர் என்று தெரியவில்லை எனக்கு! இப்போது நான் சொல்கிறபடி கேளும். ஒரு ஆபரேஷன் செய்து உமது குடலின் பாதியை அறுத்தாக வேண்டும்... அதுவும் உடனே செய்ய வேண்டும். இப்போது ஒன்றுமில்லை போல் தோன்றும்; திடீரென்று படுத்து விட்டீரானால், எழுந்திருக்க மாட்டீர்... ஆபரேஷன் ஐந்நூறு ரூபாயாகும். உம் இஷ்டம் போல் பார்த்துக் கொள்ளும். நானே இந்த ஆபரேஷனைச் செய்வேன்..."

சுந்தரம் எழுந்திருந்தார். டாக்டர் உள்ளே திரும்பினார். வழியில் சுந்தரத்தைக் கம்பவுண்டர் கோவிந்தசாமி மடக்கி, "ஐந்து ரூபாய் பீஸ்!" என்று ஞாபகப்படுத்தி, வாங்கிக் கொண்டான்.

மறுபடி வாசலில் வந்த சுந்தரத்திற்கு ஒரே ஆச்சரியமாயிருந்தது. "இதேதடா எழவு! டாக்டர் ஸென் இருதயத்தை வெட்ட வேண்டுமென்கிறார்; இவர் வயிற்றை அறுக்கச் சொல்கிறார். இன்னும் என்ன இருக்குமோ?" என்று எண்ணியவாறு நடந்தார்.

ஒரு பெரிய வீட்டு வாசலில் பித்தளைத் தகடு ஒன்று "டாக்டர் குமாரசாமி" என்ற பெயரைக் காட்டிக் கொண்டு தொங்கிற்று. "இவர் என்ன சொல்கிறார், பார்க்கலாமா!" என்று இப்போது சுந்தரத்துக்கு ஒரு ஆவல் எழுந்தது, உடனே அந்த வீட்டினுள்ளே நுழைந்தார்.

பெஞ்சிகள் நாற்காலிகள் போட்டிருந்த ஒரு பெரிய ஹால் நடுவில் ஒரு சோபாவில் பெரிய மீசையை முறுக்கி விட்டுக் கொண்டு டாக்டர் குமாரசாமி உட்கார்ந்திருந்தார். அவர் கண்களை ஒரு முறை உருட்டிப் பார்த்த பார்வையிலேயே சுந்தரத்துக்கு இருதயம் நின்று விடும் போல் இருந்தது.

"அப்படி உட்காரும்!" என்றார் டாக்டர்.

சுந்தரம் உட்கார்ந்தார்.

"ஹும்!" என்றார் குமாரசாமி. "உம்முடைய சட்டையையும் பனியனையும் கழட்டும்!"

பழைய கதைதான். குமாரசாமி முக்கியமாகச் சுந்தரத்தின் முதுகைக் கவனித்தார். 'டக் டக்'கென்று ஒரு சிறு சுத்தியால் முதுகைத் தட்டினார். பிறகு அவர் தொண்டையை அழுத்தி, "இப்போது மூச்சுவிட முடிகிறதா?" என்று கேட்டார். சுந்தரம் விழி பிதுங்க, "முடியவில்லையே" என்றார்.

"பார்த்துக் கொள்ளும்" என்றார் குமாரசாமி.

கடைசியில் ஒரு வழியாகப் பரிசோதனைகள் முடிந்தன. குமாரசாமி சொன்னார்: "உம்ம நுரையீரல் இருக்கே... அது உபயோகம் இல்லை. இந்த நுரையீரலை வைத்துக் கொண்டு நீர் எப்படி மூச்சு விடுகிறீர் என்றே எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. அதை எடுத்து விட்டால் கூடத் தேவலை. நான் சொல்கிறபடி கேளும். இப்போதைக்கு ஒரு பாட்டில் மருந்து கொடுக்கிறேன். இதைச் சாப்பாட்டுக்கு அப்புறம் சாப்பிட்டுக் கொண்டு வாரும். தவிர, உமது தொண்டையில் ஒரு ஆபரேஷன் செய்தால் நல்லது என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். ஒரு வாரம் மருந்து சாப்பிட்ட பின் அந்த ஆபரேஷன் செய்யலாம்; அதற்கு நூறு ரூபாய் தான் ஆகும். இந்த மருந்துக்கும் 'கன்ஸல்டேஷ'னுக்கும் ஐந்து ரூபாய் கொடுங்கள்!"

சுந்தரத்தின் கையில் மிகுதி ரூபாய் இரண்டுதான் இருந்தது. தொண்டை, இருதயம், வயிறு மூன்றையும் மூன்று டாக்டர்கள் வெட்ட விரும்பினார்கள். வியாதி என்னவென்று மட்டும் சுந்தரத்துக்கு இன்னும் தெரியவில்லை. யோசனையுடன் நடந்து வீட்டை நோக்கித் திரும்பிய போது, ஒரு சின்னஞ்சிறு வீட்டு வாசலில் ஒரு மரப் பலகையில் டாக்டர் சுந்தரம் என்று போட்டிருந்தது அவர் கண்ணில் பட்டது.

போர்டையும் வீட்டையும் பார்த்தபோது ரொம்ப சாமானியமான டாக்டர்தான். மலிவாக வைத்தியம் செய்பவர் என்று தோன்றியது. “இருக்கட்டும், இவரையும் பார்க்கலாம்” என்று சுந்தரம் உள்ளே நுழைந்தார்.

அறை காலியாயிருந்தது. அங்கே ஒரு சின்ன பீரோவும் ஒரு மேஜையும் ஒரு சிறு பெஞ்சியுமே இருந்தன. சுந்தரம் பெஞ்சியில் உட்கார்ந்ததும் ஒரு வேலைக்காரப் பெண் எட்டிப் பார்த்து, "இருங்க! டாக்டர் வராரு!” என்று சொல்லி விட்டுப் போனாள்.

மற்ற மூன்று இடங்களில் போலவே சுந்தரம் தமது சட்டையைக் கழட்டி வைத்தார். பிறகு பனியனையும் கழட்டப் போன போது, சுமார் இருபது வயதுள்ள ஒரு பெண், அப்போதுதான் தாமரை மலரிலிருந்து இறங்கி வந்த லஷ்மியைப் போல், அறைக்குள் நுழைந்தாள்!

சுந்தரம் திடுக்கிட்டு பனியனைக் கழட்டுவதை நிறுத்தி, “டாக்டர் இருக்கிறாரா?” என்றார்.

“நான்தான் டாக்டர்! என் பெயர்தான் சுந்தரம்” என்றாள் அந்தப் பெண்மணி.

மிஸ்டர் சுந்தரம் துள்ளி எழுந்தார். வெளியே போகும் உத்தேசத்துடன் சட்டையை எடுத்து மாட்டிக் கொள்ளத் தொடங்கினார்.

"ஏன் போகிறீர்கள்? நான் உங்களை ஒன்றும் சொல்லவில்லையே? உட்காருங்கள்! விஷயத்தைச் சொல்லுங்கள்” என்றாள் டாக்டர் சுந்தரம் இனிய குரலில்.

மிஸ்டர் சுந்தரம் தயங்கினார்; அவள் முகத்தைப் பார்த்தார்; அதில் ததும்பிய அன்பைக் கண்ட பிறகு உட்கார்ந்தார். என்ன தோன்றியதோ என்னவோ, அவர் தமது உத்தியோகம் தொடங்கி, சிநேகிதர்கள் கூறியது, டாக்டர்களைப் பார்த்தது ஆகிய விவரங்களை ஆதியோடந்தமாக விஸ்தரித்தார். டாக்டர் சுந்தரம் உட்கார்ந்து, கண் இமைக்காமல் கேட்டுக் கொண்டு வந்தாள். மிஸ்டர் சுந்தரம் தம்மைப்

பற்றிச் சொல்லிக் கொண்ட போதெல்லாம் அவளுடைய பெரிய கண்கள் இன்னும் விசாலமாயின. டாக்டர்கள் கூறியதை வெளியிட்ட போது, ஒரு சிறு புன்னகை அவளது அழகிய அதரங்களை அலங்கரித்தது. எல்லாம் சொல்லி மிஸ்டர் சுந்தரம் ஒரு பெருமூச்சு விட்டு டாக்டர் சுந்தரத்தின் அழகிய வதனத்தைக் கூர்ந்து கவனித்தார்.

“சரி மிஸ்டர் சுந்தரம்! உங்களுக்கு என்ன 'கம்ப்ளெயிண்ட், என்று தெரிந்து கொண்டேன். உம்மை சரியாகக் கவனித்துக் கொள்ள பேர்வழியில்லாதது...” என்றாள்.

"என்ன! தனியாக விடாமல் என்னைக் கட்டியா போட வேண்டும்? எனக்குப் பயித்தியம் என்கிறீர்களா?”

“இல்லவே இல்லை! உங்களுக்குப் புத்திமதி சொல்லி உங்களைக் கவனித்துக் கொள்ள யாருமில்லை. உங்களுக்கு விசால மனப்பான்மை இருக்கிறது. ஆனால் அதை நீங்கள் ஒரு பெண்ணுடன் கலந்து கொள்ள வேண்டும். உங்களுக்கு ஒரு மனைவி இருந்தால், நீங்கள் அவளைக் கவனித்துக் கொள்ளவும், அவள் உங்களைக் கவனித்துக் கொள்ளவும் முடியும். உங்களை இப்படி மூன்றாம் மனிதர் பார்த்துக் கொள்ள வேண்டிய அவசியமே ஏற்பட்டிருக்காதல்லவா!”

“என்ன! அப்படியா சொல்கிறீர்கள்? எனக்கு வியாதி ஒன்றும் இல்லையா? நான் ஆபரேஷன் செய்து கொள்ள வேண்டாமா? நான் மருந்து சாப்பிட வேண்டாமா?”

“வேண்டவே வேண்டாம்! நான் சொன்னபடி கேட்டால் பலன் இருக்கும். அதையும் உடனே செய்ய வேண்டும்” என்றாள் டாக்டர் மிஸ் சுந்தரம்.

டாக்டர் சொன்னபடியே மிஸ்டர் சுந்தரம் செய்தார். அதில் அவருக்கு அதிக சிரமமில்லை. ஏனெனில் டாக்டர் சுந்தரமே அவருக்கு மனைவியாகக் கிடைத்து விட்டாள். அதனால் என்றென்றைக்கும் டாக்டர் சொன்னபடி கேட்கும் பாக்கியம் மிஸ்டர் சுந்தரத்துக்குக் கிடைத்தது.

*****

## 40. சமய சஞ்சீவி

ஞாயிற்றுக் கிழமை இரவு ஒன்பது மணி ஆகியிருந்தது.

அன்று சாரதாவும் சஞ்சீவியும் சினிமாவுக்குப் போவதாக முதலில் திட்டம் போட்டிருந்தார்கள். ஆனால் டிபன் சாப்பிடும் போது வேடிக்கையாக ஆரம்பித்த சண்டை முற்றிற்று. சஞ்சீவி சினிமாவுக்கு அன்று போவதில்லை என்றான்; சாரதா அன்று சினிமா பார்ப்பதில்லை என்றாள். அவன் உடனே தன்னுடைய அறைக்குள் புகுந்து கதவைச் சார்த்திக் கொண்டான்; சாரதா சமையல் அறைக்குள் நுழைந்து கொண்டாள். இரண்டு பேரும் ஒருவரையொருவர் தாமாகச் சென்று பார்ப்பதில்லை என்று வைராக்யத்துடன் இருந்தார்கள்.

சாரதா சமையலை முடித்த போது மணி எட்டு. எல்லாப் பதார்த்தங்களையும் அடுப்பங்கரையில் மூடி வைத்து விட்டு, ஒரு நாவலை எடுத்து வைத்துக் கொண்டு வாசிக்கத் தொடங்கினாள். சஞ்சீவிதான் வந்து சாதம் போடுகிறாயா என்று கேட்கட்டுமே!

மணி ஒன்பது அடித்தது.

சாரதாவின் பின்னால் மனித அரவம் கேட்டது. மனத்துக்குள் சாரதா சிரித்துக் கொண்டாள். பிடிவாதமாயிருந்தால் சஞ்சீவி மசிந்து விடுவான் என்ற அவள் மனோரதம் நிறைவேறிவிடும் என்று அவள் எண்ணம்! காலடிச் சப்தம் இன்னும் அருகில் கேட்டது. திரும்பிப் பார்த்த சாரதா திடுக்கிட்டுப் போனாள்; வயிற்றில் குபீரென்று அக்னி ஜ்வாலை ஒன்று பாய்ந்தது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. கைகால்கள் வெட வெடவென்று நடுங்கின. அவள் பின்னால் - எதிர்பார்த்தபடி - அவளது கணவன் நிற்கவில்லை. ஒரு பெரும் தடியைக் கையில் பிடித்துக் கொண்டு கட்டுமஸ்தான ஆள் ஒருவன் நின்று கொண்டிருந்தான்! ஒரு முறை அவனைப் பார்த்ததுமே அவன் ஒரு திருடன் என்று சாரதா அறிந்து கொண்டாள்.

“நீ யார்?” என்று கேட்டாள் வாய் குழற

"நான் இருக்கட்டும்! நீ ஏன் இன்னிக்கு எங்கும் வெளியே போகல்லை?” என்றான் அந்த ஆள்.

சற்றுத் தைரியத்தை வருவித்துக் கொண்ட சாரதா, “அதைப் பற்றி உனக்கென்ன?” என்றாள்.

"உன் புருஷன் நேத்து பாங்கியிலே இரண்டாயிரம் ரூபாய் எடுத்து, உள்ளே வச்சிருக்கானா? அதை எடுத்திட்டுப் போகலாம்னுதான்

வந்தேன், நீங்க போயிருந்தீங்கன்னா, இப்போ வீணா உதைபட மாட்டிங்க!” என்று பதில் கொடுத்தான் அவன்.

சாரதாவுக்குப் பகீர் என்றது. இந்த ஆளுக்கு எப்படித் தெரிந்தது, பாங்கியில் பணம் எடுத்த விஷயம்? அந்தப் பணம் அவர்கள் கல்யாணத்தின் போது அவள் தந்தை சீர் வரிசைகளுக்குப் பதிலாகக் கொடுத்தது; இத்தனை நாள் பாங்கியிலே கிடந்த அந்தப் பணத்தை எடுத்து ஒரு மனைக் கட்டு வாங்கிப் போடலாமென்று எண்ணி, சஞ்சீவி ஒரு இடத்தில் பேசி வைத்திருந்தான். மறுநாள் பணத்தைக் கொடுத்து விட்டுப் பத்திரத்தில் கையெழுத்துப் போட வேண்டியதுதான். அப்படி இருக்க முதல் நாள் இரவு ஒரு கொள்ளைக்காரன் வந்து, அவ்வளவு பெரிய தொகையை அடித்துக் கொண்டு போய் விடுகிறதென்றால் எப்படியிருக்கும்?

அந்தத் திருடன் சாரதாவின் தயக்கத்தைப் பார்த்து, “என்ன யோசிக்கிறே? இப்போ நேரே உன் புருசன் அறை வரைக்கும் என் கூட வாரியா? இல்லாட்டி இந்தத் தடியாலே ஒரே அடியா போட்டுட்டு நான் மட்டும் போகட்டுமா...?” என்று கேட்டான்.

சாரதாவின் மனம் தீவிரமாக யோசனை செய்தது. ஏதோ யோசனை தோன்றியவள் போல், "என் புருஷர் தனியாக இல்லை. அவருடன் வேறொருவர் பேசிக் கொண்டிருக்கிறார். நீ மட்டும் அங்கே போனால் ஒரு நொடியில் இரண்டு பேருமாக உன்னைச் 'சட்னி' பண்ணி விடுவார்கள்” என்றாள். சற்றும் முகம் அசங்காமல் இவ்வளவு பெரிய பொய்யை எப்படிச் சொன்னோமென்று அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது. புருஷன்மீது அவள் வைத்திருந்த பிரேமையே அந்தத் தைரியத்தை அவளுக்கு அப்போது அளித்திருக்க வேண்டும்!

ஆனால் திருடன் அதற்குப் பதில் பெரிய சிரிப்புச் சிரித்தான். "எனக்குத் தெரியாதா? சாயந்திரம் ஆறு மணியிலிருந்து எதற்காக நான் உன் வீட்டை கவனிச்சிக்கிட்டுப் போதைப் போக்கியிருக்கேன்...? உம்... நட!” என்றான்.

சாரதா நடந்தாள்; திருடன் பின் தொடர்ந்தான். அவள் நெஞ்சு திக்திக்கென்று அடித்துக் கொண்டது; திருடன் பூனை போல் அடி வைத்துச் சென்றான்.

சஞ்சீவியின் அறைக் கதவு சாத்தியிருந்தது, பளீரென்று வெளிச்சம் கதவிடுக்கு வழியாகத் தெரிந்தது.

இவர்கள் இருவரும் கதவை நெருங்கியதுமே பாம்பை மிதித்தவர்கள்

போல் நின்றார்கள்! கணீரென்று இருவர் கோபமாகப் பேசிக் கொள்ளும் சப்தம் உள்ளிருந்து கேட்டது. இருவரும் நின்று உற்றுக் கேட்டார்கள்.

"அடே! அயோக்யப் பயலே! என்னையா ஏமாற்றப் பார்க்கிறாய்! யோக்யன் போல் நடித்து, அந்த ஜமீன்தாரைக் கொள்ளை அடித்தாய்; அவரைக் கொலையும் செய்தாய், நியாயமாக எனக்குச் சேர வேண்டிய பங்கை எனக்கு இப்போது கொடுக்க மறுக்கிறாய்! ஹும்!" என்றது ஒரு குரல்.

"உனக்குச் சேர வேண்டியது ஒன்றுமில்லை! பேசாமல் போகிறாயா, ஜமீன்தாருக்குச் செய்ததை உனக்கும் செய்து விடட்டுமா? நான் உன் மிரட்டலுக்கெல்லாம் தயங்க மாட்டேன்!" என்றது மற்றொரு குரல்.

("பார்த்தாயா, நான் சொன்னேனே, இன்னொருத்தர் இருக்கிறார் என்று. அப்போ சிரித்தாயே?" என்றாள் சாரதா.

"உஷ் பேசாதே! உன் புருஷன் நம்மைக் காட்டிலும் பெரிய பேர்வளி போலேன்னா இருக்கு!" என்று திருடன் கவனித்தான்.)

"என்னை அந்த ஜமீந்தார் மாதிரி மடையன்னு நினைச்சுக்கிட்டியா? வெளியே என் கூட்டாளி இரண்டு பேர் காத்திட்டிருக்கான். பதினைந்து நிமிஷத்தில் நான் திரும்பாவிட்டால் அவர்கள் உள்ளே வந்திடுவாங்க. ஆமாம்!" என்றது முதல் குரல்!

"பதினைந்து நிமிஷம் என்ன? இப்போவேதான் வரட்டுமே...! இதோ வாங்கிக்கோ!"

"ஐயோ! சுடாதே! சுடாதே!" என்று கதறியது, முன்பு திமிராகப் பேசிய குரல்.

திருடனும் சாரதாவும் வாயை பொத்திக் கொண்டு பயத்துடன் கவனித்தார்கள்.

"டுமீல்!" என்று வெடிச் சத்தம் கேட்டது. ஏதோ ஒரு உடல் கீழே சாய்ந்தது போல் கேட்டது.

சாரதா தன் பின்னால் நின்ற திருடனைப் பார்த்தாள். அவன் அங்கே இல்லை! "இந்தக் கொலையிலே நம்ம பேரு சம்பந்தப்படாது?" என்று முணுமுணுத்தவாறு வந்த வழியே அவன் வேகமாகத் திரும்பிக் கொண்டிருந்தான். அவன் மனத்தில் இப்போது திகில் பற்றிக் கொண்டது. துப்பாக்கியால் சுடப்பட்டவனின் சகாக்கள் கையில் அகப்பட்டுக் கொள்ளாமல் தப்பித்துக் கொண்டால் போதும் என்ற ஒரு எண்ணம்தான் அவன் மனதில் மேலோங்கியிருந்தது.

சாரதா பூனை போல் பின் தொடர்ந்தாள். புழக்கடைக் கதவைத் திறந்து கொண்டு அவன் வெளியேறிய பிறகு, அதை அடைத்துத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு சமையற் கட்டுக்குத் திரும்பினாள்.

சஞ்சீவியின் அறையில் சட்டென்று சப்தமெல்லாம் ஓய்ந்தது. கதவைத் திறந்து கொண்டு அவன் சமையல் அறைக்கு வேகமாக வந்தான். அவன் கோபமெல்லாம் இப்போது பறந்து போயிருந்தது.

“சாரதா! சாரதா! உள்ளே வந்து பாரேன்! இத்தனை நாளாகச் 'சண்டி' பண்ணிக் கொண்டிருந்த அந்த ரேடியோவைப் பார், திடீரென்று கேட்க ஆரம்பித்தது, ஏதோ நாடகம் நடந்து கொண்டிருந்தது. தடாம் திடாம்னு வேட்டுச் சப்தமும் அதுவுமா, நம் வீட்டிலே நாடகம் நடக்கிறாப் போலவே கேட்கிறது. கணீர் கணீர்னு பேச்சு... இவ்வளவு லகுவா அதை 'ரிப்பேர்' பண்ண முடியும்னு நினைக்கவே இல்லே... நீயும் வந்து கேளேன்...”

"நான் எல்லாம் கேட்டு விட்டேன்... முதல்லே நீங்கள் சாப்பிடுங்கோ; சமையல் ஆறி அவலாய்ப் போய் விட்டது!” என்றாள் சாரதா.

சாப்பாடு ஆன பிறகுதான் சஞ்சீவி ரிப்பேர் செய்த ரேடியோவானது எப்படி ஒரு பெரிய ஆபத்திற்குச் சமய சஞ்சீவியாக உதவியதென்று அவள் விவரமாகச் சொன்னாள்.

*****

## 41. ஐயோ! சுண்டெலி!

நான் கரூருக்குப் போன வாரம் போய் விட்டு வந்தேன். போகும் போது என்னைப் பார்த்தவர்கள் ஒரு வாரம் விச்ராந்தியாகப் போய், குடும்பத்தாருடன் இருந்து விட்டு வரப் போகிறான் என்று எண்ணியிருப்பார்கள். வருகிற போது நான் சந்தோஷமாகத்தான் திரும்பினேன். அப்போது என்னைக் கவனித்தவர்கள், குஷியாகக் காலந் தள்ளி விட்டு நிஷ் கவலையாக வருகிறான் என்று தான் எண்ணியிருக்க வேண்டும். ஆனால் இந்தப் பொல்லாத உலகத்தில் கண் முன்னால் காண்பதை நம்ப முடிகிறதா? நான் பட்ட கஷ்டம் எனக்கல்லவா தெரியும்? - நான் படப் கோற கஷ்டமும் தான்! எல்லாம் ஒரு சுண்டெலி செய்த வேலையென்றாலும் கூட நம்பப் போகிறதில்லை.

வியாழக்கிழமை சாயந்திரம் ரயில்வே ஸ்டேஷனில் ஒரு ஆசாமி தலை தெறிக்க ஓடிப் போய், ரயில் வண்டிக்குள் புகுந்ததை ஸ்டேஷன் மாஸ்டர், நாலைந்து போர்ட்டர்கள், ஒரு கார்டு, சுமார் ஐம்பது பயணிகள் இத்தனை பேரும் பார்த்திருப்பார்கள். அப்படி ஓடினவன் நான் தான் என்று அறிமுகப்படுத்திக் கொள்கிறேன். இவ்வளவு அடித்துப் பிடித்துக் கொண்டு வந்தது எல்லாம் ஒரு சுண்டெலியின் வாயில் அகப்பட்டுக் கொண்டு விழிப்பதற்குத்தானா என்று இப்போது நினைக்கும் போது என் மனது எவ்வளவு வேதனைப்படுகிறது என்கிறீர்கள்!

நான் கரூரில் வீட்டுக்கு வந்ததும், எங்கள் வீட்டு சொந்தக்காரர் எனக்குப் படுக்க ஒரு அறை ஒழித்துக் கொடுத்தார். அங்கே தான் முதல் முதலாக நான் அந்தச் சுண்டெலிக்கு அறிமுகமானேன். நான் குறட்டை விட்டுக் கொண்டு ஆழ்ந்து தூங்கியிருக்க வேண்டும். ஒரு அழகான சொப்பனம்; அதில் ஹல்வாவினாலேயே ஒரு பெரிய மலை தெரிந்தது. அதை ஒரு ரம்பத்தைப் போட்டு யாரோ விடாமல் அறுக்கிறார்கள். “கொர்ர்... கொர்ர்... கொர்ர்...” என்று கேட்கிறது. நான் திடுக்கிட்டு விழித்துக் கொண்டேன். நான் ரம்பத்தால் அறுப்பதாகக் கேட்ட சப்தம் உண்மையில் ஒரு சுண்டெலியின் பல்லிலிருந்து வந்தது என்று உடனே தெரிந்து கொண்டேன். எங்கேயோ மோட்டு வளையில் "கொர்ர்... கொர்ர்...” என்று அது ஓயாமல் ஒழியாமல் அறுத்துக் கொண்டேயிருந்தது. சட்டென்று விளக்கை ஏற்றினேன்; அந்தக் கணமே சுண்டெலி அறுக்கும் சப்தமும் நின்றது. சுத்தப் போக்கிரித் தனம், வேறொன்றுமில்லை! நான் இந்தச் சுண்டெலிக்குத் தோற்று விடுவேனா? விளக்கை இரவு பூராவும் ஏற்றிய படியே வைத்திருந்தேன், சுண்டெலி ஏமாந்து போயிருக்க வேண்டும். நான் எடுத்த எடுப்பில்

அதை ஜயித்து விட்டேன்.

இரண்டாவது நாள் நான் படுக்கும் போது என் தாயார், “விளக்கில் துளிக்கூட எண்ணெயைக் காணோமே! ராத்திரி பூராவும் விளக்கை எரித்துக் கொண்டு படித்தாயா என்ன? கிரோஸின் எண்ணெய் காசு கொடுத்தாலும் கிடைக்கவில்லையே!” என்றாள். ஆகவே அன்று விளக்கை எரிக்கக் கூடாதென்று தீர்மானித்தேன். வீட்டுக்காரரிடம் ஒரு 'டார்ச்' விளக்கை வாங்கி வைத்துக் கொண்டு படுத்தேன்.

அன்று ரம்பம் அறுப்பது கேட்கவில்லை. ஆனாலும் நான் 'டார்ச்'சை ஏற்றத் தயாராக இருந்தேன். சுமார் 12 மணி இருக்கும் - அறைக்குக் குறுக்கே திருதிருவென்று ஓடும் சப்தம் கேட்டது. சுண்டெலி கிளம்பி விட்டது திடீரென்று, 'டார்ச்'சை ஏற்றினேன்; தலைகாணியை எடுத்து எலியைப் பார்த்து ஓங்கி அடித்தேன். தலைகாணி எலிக்கு நான்கு அடி தள்ளி விழுந்தது. சுண்டெலி நின்று என்னைப் பார்த்தது. கண்ணைச் சிமிட்டி அது ஒரு சிரிப்புச் சிரித்ததாகக் கூட எனக்குச் சந்தேகம்.

என் கோபம் அதிகமாகி விட்டது. இன்னொரு தலைகாணியைப் பிடுங்கி வீசினேன், அதற்குள் சுண்டெலி வாசற் படியிலிருந்த சின்ன ஓட்டைக்குள் பதுங்கிக் கொண்டது. போகும் போது மறுபடியும் கண்ணைச் சிமிட்டி, நாக்கை நீட்டிக் காட்டி விட்டுத்தான் போயிற்று.

அப்புறம் அன்று ராத்திரி சுண்டெலி வரவில்லை. இருந்தாலும் எனக்குத் தூக்கம் என்னமோ வரவில்லை. ஒரு சுண்டெலி இருக்கிறது, அதுவும் பொல்லாத சுண்டெலி என்று தெரிந்த பிறகு எப்படித் தூக்கம் வரும்? கொட்டு கொட்டென்று விழித்துக் கொண்டிருந்தேன். கண்ணயர்ந்தால் சுண்டெலி சொப்பனம்தான். காலையில் கண் விழித்த போது - விழிக்க வேண்டிய அவசியமேயில்லை; இரவெல்லாம் விழித்துக் கொண்டிராமல் வேறென்ன செய்தேன்? - என் உடம்பெல்லாம் வலித்தது; கண் எரிந்தது; தூக்கம் தூக்கமாக வந்தது. அன்று எனக்குத் தோல்வி, எலிக்குத்தான் ஜயம்.

காலையில் வீட்டுக்காரரிடம், “உங்கள் வீட்டில் சுண்டெலி நடமாடுகிறதோ?”

"ஹும்... சொப்பனம் கண்டிருப்பீர்" என்றார் அவர்.

"இல்லை. நிஜமாக வருகிறது” என்றேன்.

"ஏங்காணும் வீணாய்? இந்த வீட்டிற்கு வருந்தி வருந்தி அழைத்தால் கூடச் சுண்டெலி வராதே! ஆயிரம் ரூபாய் தருகிறேன், ஒரு சுண்டெலி

காண்பியும்” என்றார்!

அவர் சொல்கிறதைப் பார்த்தால், நான் ஆயிர ரூபாயைக் கண்டிராதவன், அதைச் சம்பாதிக்கிறதற்காக அவரிடம் சுண்டெலி இருப்பதாகச் சொல்கிறேன் என்று தான் அவர் எண்ணுகிறார் என்று தோன்றிற்று. "ஓய்! எனக்கு ஆயிரம் ரூபாய் வேண்டாம். எலி வராமல் இருந்தால் போதும்” என்றேன்.

ஊரெல்லாம் வீடு காலி இல்லை என்று பேச்சாயிருக்கும் போது, சுண்டெலி விஷயமாக வீட்டுக்காரருடன் வாக்குவாதம் வைத்துக் கொள்ள நான் விரும்பவில்லை. அவர், “என் வீட்டிற்குச் சுண்டெலிதான் முக்கியம். உம்ம குடும்பம் முக்கியமில்லை” என்று சொல்லி விடலாமல்லவா?

மூன்றாவது நாள் இரவு வழக்கத்தை விட ஒரு பிடி கூடவே சாப்பிட்டேன், அப்போதே தூக்கம் தள்ளிக் கொண்டு வந்தது. போய் அறையில் படுத்தது தான் தெரியும். மாலையில் சிங்கம் மாதிரி துள்ளி எழுந்தேன். சுண்டெலியும் சிங்கம் மாதிரி கம்பீரமாக அறையை விட்டு அப்போது வெளியேறியது. அதோடு கூட தோல் பெட்டியில் ஒரு மூலை மாயமாக மறைந்து போயிருந்தது! மூன்றாம் நாள் எலிக்கே வெற்றி!

பெட்டியைத் தூக்கிக் கொண்டு போய் வீட்டுக்காரரிடம் காண்பித்தேன். அவர் பொடியை மூக்கில் இழுத்து விட்டுப் பெட்டியைப் பார்த்தார்.

"ஓய், ஐதர் காலத்துப் பெட்டிங்காணும் இது.”

“எலி தின்றிருக்கிறது பார்த்தீரா?”

“கதைதான்! எங்கேயாவது எலி தோலைத் தின்று கேள்விப்பட்டிருக்கிறீரா?”

“தின்று விட்டு ஓடிற்று? நான் கண்ணால் பார்த்தேன். அப்புறம்?”

“நம்மாத்தில் என் சம்சாரம் அடை தட்டித் திறந்தே வைத்திருக்கிறாள். ஒரு எலி அண்டவில்லை; உம்ம பெட்டியைத் தின்ன வந்து விட்டதாங்காணும்?”

"அது அடையின் பெருமை தான், உம்ம பெண்டாட்டி தட்டிய அடையை நீர் ஒருத்தர் தான் தின்ன முடியும்” என்று நான் சொல்லவில்லை. மனதில் தான் நினைத்துக் கொண்டேன். வாயை விட்டுச் சொன்னால், வீட்டுக்காரர் வீட்டை காலி பண்ணச் சொல்லுவார். உங்களுக்குத்தான் தெரியுமே, ஊரில் ஒரு வீடு காலியில்லை என்று!

வீட்டுக்காரரோ, நம்ப மாட்டேனென்று பிடிவாதமாக இருந்தார்; சுண்டெலியும் பிடிவாதமாகத் தினம் வந்து கொண்டிருந்தது. எலிப் பொறி வாங்கி, அதில் வெங்காய அடைகளையும் வடைகளையும் வைத்தேன். வெங்காய அடைகளும் வடைகளும் மாயமாக மறைந்தன. சுண்டெலி அவற்றைத் தின்று விட்டு, வேண்டுமென்றே கம்பியை ஆட்டி, எலிப்பொறியை மூடும். நான் பக்கத்தில் போகும் வரை பொறிக்குள்ளேயே உட்கார்ந்திருந்து விட்டு, என்னைப் பார்த்து இளித்து விட்டு கம்பிகள் வழியாகத் தப்பித்துக் கொண்டு ஓடும்.

ஒரு வார லீவ் கழிந்தது. “அப்பாடா! இந்தச் சனியன் பிடித்த சுண்டெலியின் தொல்லை தீரச் சென்னைக்குப் போகலாம்” என்று கிளம்பினேன். இந்த வீட்டுக்காரரே இந்த சுண்டெலியைக் கட்டிக் கொண்டு புரளட்டும் என்று எண்ணிய போது நான் களுக்கென்று சிரித்து விட்டேன்.

மூட்டையைக் கட்டிக் கொண்டு ராத்திரி மெயிலில் புறப்பட்டு ஊருக்கு வந்தேன். மெயில் கூட்டத்தில் ராத்திரி முழுவதும் விழிப்புதான். இருந்தாலும் சுண்டெலி தொல்லை நீங்கிய சந்தோஷத்தில் அதை நான் பொருட்படுத்தவே இல்லை.

வீட்டுக்கு வந்து என் அறையில் பெட்டியை வைத்தேன். "என்ன என்ன வாங்கிண்டு வந்தேள்?” என்று என் மனைவி பெட்டியைத் திறந்தாள். நான் வேறு பக்கம் திரும்பிச் சட்டையைக் கழட்டிக் கொண்டிருந்தேன்.

“அய்யோ!” என்று அவள் கதறியதைக் கேட்டு, அவசரமாகத் திரும்பினேன்.

என் பெட்டிக்குள்ளிருந்து அந்தச் சுண்டெலி குதித்து ஓடிக் கொண்டிருந்தது! வாசற்படி ஓட்டையண்டை. சற்று நின்று, என்னைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டி விட்டு அதன் வழியாக மறைந்தது!

இன்னும் நான் தூங்கவில்லை; சுண்டெலியும் தூங்குவதாகக் காணவில்லை.

*****

## 42. உடனே நிறுத்து!

விச்சுவைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கலாமா என்று நான் யோசனை செய்த போது தான் வைத்தியநாத 'ஸார்' என்னை வந்து பார்த்தார்.

"நான் சொல்வதைக் கேளுங்கள்! பள்ளிக்கூடத்தில் ஒரு மண்ணும் சொல்லித் தருவது கிடையாது. வெறுமனே போய் வெய்யில் வேளைக்கு உட்காருகிறதும், நாடகத்திலே வராப்பலே மணிக்கு ஒரு வாத்தியாரா வந்துட்டுப் போறதுமாயிருக்கே ஒழிய ஒரு நன்மையுமில்லே! கால விரயமாகிறது தான் மிச்சம். என்னண்டை பையன் சொல்லிக் கொள்ளட்டும். நீங்களே தெரிந்து கொள்ளப் போகிறீர்கள். பையன் எப்படி கபகபவென்று கெட்டிக்காரனாகிறான் என்று!" என்றார் அவர்.

எனக்கும் அது சரி என்று தோன்றியது. வைத்தியநாத 'ஸார்' மறுநாள் முதல் வந்து விச்சுவுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கத் தொடங்கினார்.

எனக்கு ஓய்ச்சல் ஒழிவின்றி வேலை இருந்தது. இதற்குப் பிறகு நாலு நாளைக்கு நான் விச்சுவின் படிப்பைப் பற்றி நினைக்கவே இல்லை.

நாலைந்து நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் நான் அவசர அவசரமாகச் சாப்பிட்டேன். பரிமாறிக் கொண்டிருந்த என் மனைவி ராஜி, "என்ன அவசரம் வந்திருக்கிறது? சாப்பிடக் கூடப் போதில்லாமல் ஒரு வேலையா?" என்றாள்.

உடனே என் மருமான். "சிவாஜி மகாராஜாவானவர் குதிரையில் இருந்தபடியே சாப்பிட்டு, அதன் மேலேயே தூங்கினார்! என் வாத்தியார் சொன்னார்!" என்றான்.

"ஏ விச்சு, பேசாமே சாப்பிடு. சிவாஜி குதிரை மேல் உட்கார்ந்து சாப்பிட்டார் என்றால் அதற்கு இப்போ என்ன?" என்று அதட்டினேன்.

விச்சுப் பயல் உடனே ஓய்ந்து விட்டான். சிறிது நேரத்திற்கு அவன் வாயைத் திறக்கவே இல்லை, ராஜீ, "ஆனாலும் குழந்தையை அப்படி எதற்கு அதட்டுகிறீர்கள்? அவன் வாத்தியார் சொன்னதைத் தானே சொல்லியிருப்பான்?" என்றாள்.

நான் பதில் சொல்வதற்குள் வாயில் ஒரு கல் அகப்படவே, 'கடுக்'கென்று கடித்துக் கொண்டு, கன்னத்தைக் கையால் அழுத்திக் கொண்டேன். உடனே விச்சு, "மாமா நீ ஒரு காட்டு நத்தையா இருக்கணும்!" என்றான்.

"சீ! பேத்தாமல் சாப்பிடு!" என்றாள் அவன் மாமி.

"பேத்தலே இல்லை, மாமி! வைத்தியநாத 'ஸார்' சொன்னார். நாளைக்கு வந்தால் கேட்டுப் பார்! காட்டு நத்தை ஒன்றுக்கு 14, 175 பல்

இருக்கிறதாம்!'

“சரி, அதற்கென்ன?”

“சாதத்திலே கல் இருந்து, பத்து இருபது பல் உடைஞ்சால்கூட ஒண்ணும் பிரமாதம் இல்லை!” என்றான்.

அதோடு அந்த வார்த்தையை நான் விட்டேன். மறுநாள் நான் பெரிய அகராதியை எடுத்துப் பார்த்த போது “காட்டு நத்தைகள் காடுகளில் காணலாம். இவைகள் வாயில் வரிசைக்கு 150 பற்கள் வீதம் 135 வரிசைகள் இருக்கின்றன” என்று அதில் போட்டிருந்ததைக் கவனித்தேன்! 150ஐயும் 135ஐயும் நான் பெருக்கிப் பார்க்கவில்லை. எனினும் விச்சு சரியாகத்தான் சொல்லியிருக்கிறான் என்று நிச்சயமாகி விட்டது எனக்கு.

இரண்டு மூன்று நாளைக்குப் பிறகு நான் ஆபீசுக்குக் கிளம்பும் போது, “வீட்டில் நல்லதாக ஒரு குடையைக் காணோம். மழை வரும் போல் இருக்கிறதே?” என்றேன்.

ஒரு மூலையில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்த விச்சு, "மாமா! முதல் முதல் குடையைப் பிடித்துக் கொண்டு போனது யார் தெரியுமா?” என்று கேட்டான்.

“எனக்குத் தெரியாது, வேலையைப் பார்!” என்றேன்.

“எனக்குத் தெரியும், ஜோனாஸ்ஹானவேஸ் என்று ஒருத்தன், வைத்தியநாத 'ஸார்' சொன்னார்.”

“சரி; படி இப்போ!” என்று முழித்துப் பார்த்து விட்டுப் போனேன்.

அன்றிரவு சாப்பிட உட்கார்ந்த போது விச்சுவின் அரட்டை அதிகமாயிருந்தது, “செடிகள் எல்லாம் மூச்சு விடுகின்றன” என்றான். "இடி இடிக்கும் போது வழியில் அகப்பட்டுக் கொண்டு விட்டால் என்ன செய்ய வேண்டும் தெரியுமா!” என்று கேட்டு விட்டு அவனாகவே, "மரத்தடியில் தங்கக் கூடாது. திறந்த வெளியில் தரையில் குப்புறப் படுத்துக் கொண்டு கண்ணை மூடிக் கொள்ள வேண்டும்” என்றான். “எவரெஸ்ட் சிகரம் 29,002 அடி” என்றான். “மொட்டக் கூசை வேக வைப்பதால் அதிலிருக்கும் இரும்புச் சத்து, ‘பாஸ்பரஸ்' எல்லாம் அழிந்து போய் விடுகிறது” என்று கூறி முடித்தான்.

அவன் சொன்னதில் ஒன்றுக்காவது நாங்கள் பதில் சொல்லவில்லை, அவன் சாப்பிட்டு விட்டுப் போன அப்புறம், என் மனைவி, "உங்கள் மருமானை இன்னும் கொஞ்ச நாள் போனால் கட்டிப் பிடிக்க முடியாது

போலிருக்கிறது!” என்றாள்.

“ஏன்?”

"ரொம்ப கெட்டிக்காரனாய்ப் பேசுகிறான். 'டியூஷன்' வைத்த பிறகு அவனுக்குத் தெரியாத சமாசாரம் ஒன்று கூடக் கிடையாது.”

"இந்த சமாசாரங்களை வைத்துக் கொண்டு அவன் என்ன செய்யப் போகிறான் என்றுதான் தெரியவில்லை” என்றேன்.

மேலும் பதினைந்து நாள் ஆயிற்று. விச்சு அதற்குள் இன்னும் அநேக விஷயங்களைக் கற்றுக் கொண்டு விட்டான். அவன் சொல்லும் விஷயங்களில் பல நான் கேள்விப்பட்டது கூடக் கிடையாது, அவைகளில் ஒரு சில உபயோகமானவைகளாகவும் பட்டன. ஏரோப்ளேன் எப்படிப் பறக்கிறது, ரயில் எப்படி ஓடுகிறது, மின்னலும் இடியும் ஏன் ஒன்றுக்குப் பிறகு ஒன்று வருகின்றன என்ற ரகசியங்களைச் சொல்லுவான். அநேகம் வேறு விதமாயிருந்தன. திபேத்தில் ஒரு வகை ஜாதியார் முதல் முதல் சந்தித்துக் கொள்ளும் போது மூக்குடன் மூக்கு உராய்ந்து கொள்வார்களாம்; போர்னியோ குடிகளில் புருஷர்கள் பெண்களை ஒடிப் பிடித்து விட்டுப் பின் கல்யாணம் செய்து கொள்வார்கள். ஸெலிபிஸ் தீவில் மனிதக் குரங்குகளில் ஆண் குரங்குகள் பெண்களையும் பெண் குரங்குகள் ஆடவர்களையும் தூக்கிக் கொண்டு போய் விடுமாம்...

எங்கள் காது புளித்தது. அதோடு எனக்கு வேறு ஒரு தொல்லையும் ஏற்பட்டது. விச்சு கேட்க ஆரம்பித்த சந்தேகங்களுக்கு எனக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை! ஒரு சமயம் கோபமாக, "எலே சும்மா வளவளன்னு பேசாதே!” என்று அதட்டினேன்.

"எங்க வைத்தியநாத 'ஸார்' சொல்கிறார். ஒரு நாளைக்கு ஒரு மனிதன் 17,800 வார்த்தைகள் பேசியாக வேண்டும்” என்றான்.

“உன் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தால் என் ஆபீஸ் வேலையை யார் செய்வார்கள்?” என்றேன்.

“அப்போ நம்மாத்து வாசலிலே ஆமையைத் தலை கீழாகக் கட்டித் தொங்கவிட வேண்டியதுதான்!”

"என்னத்துக்குடா ஆமை வந்தது. அபசகுனம் மாதிரி?” என்று கேட்டாள் அவன் மாமி.

“அதுவா? ரஷ்யாவிலே தொழிற்சாலையிலே சரியான படி வேலை நடக்காமல் போனால், வாசலில் ஆமையைத் தொங்க விடுவார்களாம்.

ஆமை தொங்கினால் பெரிய அவமானமாம். அப்படித் தொங்காமல் பார்த்துக் கொள்ள, தொழிலாளிகள் சுறுசுறுப்பாயிருப்பார்களாம். எங்க வைத்தியநாத 'ஸார்' சொல்கிறார்.

“நாக்கை அடக்குடா!” என்றேன்.

“பொலீவியாவில் ஒரு வகைப் பல்லிக்கு நாக்கு பதினெட்டு அங்குலமாம். வைத்தியநாத 'ஸார்' சொல்கிறார்" என்றான்.

இதையெல்லாம் சகித்துக் கொண்டு வந்தேன். கடைசியில் அவன் யுத்த சமாசாரம்கூடப் பேசத் தொடங்கி விட்டான் என்று தெரிந்ததும் திடுக்கிட்டுப் போனேன்! அன்று காலை தினசரிப் பத்திரிகையைப் பிரித்து “அடே! ஐரோப்பாவில் இரண்டாவது முனை ஏற்படுத்தப் போகிறார்களாமே!” என்றேன், என்னை அறியாமல்.

“வைத்தியநாத. 'ஸார்' ஐரோப்பாவில் இரண்டாவது முனை ஏற்பட்டாக வேண்டும் என்கிறார்” என்றான் விச்சு.

"சரிதாண்டா!”

“ஆனால், அவசரப்பட்டு இரண்டாவது முனையை ஏற்படுத்தினால் காரியம் கெட்டுத்தான் போகுமாம்!”

"சரிதாண்டா, வேலையைப் பாரு!”

இதைக் கேட்ட பிறகு, விச்சுவின் 'டியூஷன்' வாத்தியாரை உடனே நிறுத்தி விடுவதென்று முடிவு செய்து விட்டேன். மறுநாள் அவர் வந்ததும் சம்பளத்தைக் கொடுத்து அவரை நிறுத்தினேன். விச்சு கற்றுக் கொண்டதையெல்லாம் முதலில் மறந்து விட்டு வரட்டும் என்று அவனைப் பள்ளிக் கூடத்திலேயே சேர்த்து விட்டேன்.

வைத்தியநாத 'ஸார்' விச்சுவுக்கு 'டியூஷன்' சொல்லித் தரலாம், ஐயா! ஆனால் கொஞ்ச நாள் போனால் நான் அல்லவா விச்சுவிடம் 'டியூஷன்' சொல்லிக் கொள்ள வேண்டிய நிலைமை வந்து விடும் போலிருக்கிறது!

*****

## 43. அப்படியா சேதி

மாரிமுத்து விடுவிடென்று இரும்புக் குழாயைப் பற்றிக் கொண்டு அந்தப் பெரிய வீட்டில் இரண்டு மாடிகள் ஏறினான்; பிறகு கீழே எட்டிப் பார்த்தான். அப்போது மணி பன்னிரண்டு அடித்து விட்டதால் 'பிளாக் அவுட்' ஆரம்பமாகியிருந்தது. ஆகவே கும்மிருட்டாக இருந்தது. தெருவில் ஜன நடமாட்டம் ஓய்ந்து விட்டது; அவன் பிடித்திருந்த கைப் பிடிச்சுவரின் மீது தாவி உட்கார்ந்து உள்ளே எட்டிப் பார்த்தான். அங்கும் இருட்டு; நிசப்தம். எல்லாரும் தூங்கி விட்டார்கள். “ரைட்!” என்று சொல்லிக் கொண்டான். அவன் போட்டிருந்த திட்டங்கள் ஒவ்வொன்றும் இதுவரை ஒழுங்காகவே ஈடேறி வந்தன!

அடுத்த பதினைந்து நிமிஷங்களில் அவன் சுறுசுறுப்பாக நடந்து கொண்டான். கையுடன் கொண்டு வந்திருந்த சாவிக் கொத்தை உபயோகித்து, பெரிய ஹாலைத் திறந்து விட்டான். 'டார்ச்' விளக்கை அதி ஜாக்கிரதையாகப் போட்டுப் பார்த்ததில் இரண்டு விஷயங்கள் வெளியாயின. ஒன்று அந்த அறையில் யாருமே இல்லை என்பது. இரண்டாவது, அதில் ஒரு பெரிய இரும்புப் பெட்டி இருந்ததென்பது. இனி லகுவாக, பிறத்தியார் தொந்தரவு இல்லாமல் வேலையைத் துவக்கலாம்.

முதல் சாவியை இரும்புப் பெட்டியின் சாவித் துவாரத்தில் அவன் வைப்பதற்கும், 'டாண்!' என்று எங்கேயோ மணி அடித்ததற்கும் சரியாக இருந்தது. "என்ன சகுனம்!” என்று மாரிமுத்து எண்ணி, மனம் பூரித்துக் கொண்டான்.

இரும்புப் பெட்டிகளில் மாரிமுத்து எண்ணற்ற வகைகளைக் கண்டிருக்கிறான்; திறந்திருக்கிறான். அவன் கண்ட பெட்டிகள் ஒன்றாவது அவனுடைய கள்ளச் சாவிகளுக்குச் சரண் அடையாமல் இருந்ததில்லை. ஆனால் இந்தப் பெட்டி என்னவோ ஆரம்ப முதற்கொண்டே மாரிமுத்துவைக் கசக்கிப் பிழிய ஆரம்பித்து விட்டது. குனிந்து நிமிர்ந்து வேலை செய்வதில் அவன் உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்ட ஆரம்பித்தது. “உஸ்... ஸ்... ஸ்...” என்று மூச்சு வாங்கியது.

"இதைக் கைவிட்டு விடவேண்டியது தானோ?” என்று அவன் மனத்தளர்ச்சி அடையவிருந்த சமயம் 'கிளிக்' என்ற சப்தம் அவன் காதுகளுக்குக் கேட்டது. மறுகணம் அறையில் இருந்த இரண்டு மின்சார விளக்குகள் குபீரென்று எரிந்தன.

மாரிமுத்து திடுக்கிட்டான். அவன் நெஞ்சு ஒரு முறை நடுங்கியது.

அறையின் கதவண்டை ஒரு தடித்த மனிதர் நின்று கொண்டிருந்தார். அவர் கையில் ஒரு குண்டாந் தடி இருந்தது.

"அடே! அப்படி நில்!” என்றார் அந்த மனிதர் அதட்டிய குரலில்.

மாரிமுத்து சொன்னபடி கேட்டு அசையாமல் நின்றான். அவர் முன்னால் இரண்டு அடி வந்து, அறையை ஒரு நோட்டம் பார்த்தார். நிலைமையை அறிந்து, திருப்தி அடைந்தவர் போல், "சரி! நீ எப்படி இங்கே நுழைஞ்சே?” என்று கேட்டார்.

"இரும்புக் குழாய் வளியா” என்றான் மாரி.

“கதைகளிலே வராப்லே நம்ம வீட்டுக்கும் வந்திருக்கே! வேடிக்கைதான்!” என்றார் அவர்.

“சரி, ஐயா! என்னை என்ன பண்ணப் போறே? அதைச் சொல்லிவிடு.”

“இரு அப்பேன்! நீதான் அவசரப்பட்டு வந்தேன்னா, எனக்கு என்ன அவசரம் வந்தது? பெட்டியைத் திறந்துட்டியா, பார்ப்பம் மொதல்லே!” என்று பெட்டியின் பக்கம் தமது பார்வையைச் செலுத்தினார்.

"இன்னும் திறக்கவில்லை! அதுக்குள்ளேதான் நீ வந்துட்டியே! திறந்திருந்தா இங்கே ஏன் நிக்கறேன்!”

மாரிமுத்து பேசும் போதே அவன் முகத்தில் பயக் குறிகள் தோன்றின. காரணம் அந்த மனிதர் பின்னால் இப்போது வேறொரு மனிதன் வந்து நின்றதுதான். அவன் பய பக்தியுடன் நுழைந்ததிலிருந்து அவன் குமாஸ்தாவாக இருக்கலாமென்று மாரி ஊகித்தான். அவர் மாரிமுத்துவைப் பார்த்து, "ஏய்! நின்னபடியே நில்! ஏதாவது விஷமம் செய்தாயோ, அதோட செத்தே!” என்று எச்சரித்து விட்டு, உள்ளே வந்தவனைக் கவனித்தார். அவன், “செட்டியார், வெளியிலே இரண்டு பேர் கதவை இடிச்சிண்டு உள்ளே வரக் காத்திருக்காங்க” என்றான்.

“யார் அது?”

“போலீஸ்காரங்க மாதிரி இருக்குது.”

மாரிமுத்துவுக்கு நெஞ்சில் பகீர் என்றது. தலை சுழன்றது. கடைசியில் இந்தச் செட்டியார் போலீஸிடம் தன்னைப் பிடித்துக் கொடுத்து விடுவாரோ என்று பயந்தான். இப்போது அவனுக்குப் போக வழியில்லை. வாசலில் போலீஸ்; அறையை விட்டுப் போக முடியாமல் குண்டாந் தடியுடன் செட்டியார். இன்னும் வேறிடங்களில் எத்தனை பந்தோபஸ்துக்கள் வைத்திருக்கிறாரோ?

செட்டியார் வந்த மனிதனிடம், "சரி நீ போய் அவர்களை ஐந்து நிமிஷத்தில் அனுப்பு!” என்றார். அவன் உடனே அறையிலிருந்து வேகமாக வெளியேறினான்.

மாரிமுத்து கேட்டான்:- “ஐயா, நான் இன்னும் ஒண்ணும் இங்கே களவாடி விடவில்லை, அதுக்காக என்னைப் பிடிச்சுக் கொடுப்பியா?”

“ஏன் பதறுகிறாய்? திருடாவிட்டால் என்ன? திருட முயற்சி செய்ததற்குத் தண்டனை கிடையாதா...? இருக்கட்டும்... முதலில் நீ சொல்வது நிஜமா பார்க்கலாம். எங்கே இரும்புப் பெட்டியைத் திற!" என்று அவர் ஒரு சாவியை அவன் பக்கம் வீசி எறிந்தார்.

மாரிமுத்து சற்றுத் தயங்கி விட்டுப் பெட்டியைத் திறந்தான். மின்சார வெளிச்சம் பெட்டிக்குள் அடித்தது. ஒரு வைர மாலை ஜகஜ் ஜோதியாக அதனுள் மின்னிற்று.

செட்டியார் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. “அதைக் கையில் எடுத்துக் கொள்!” என்றார்.

"என்ன! தெரிஞ்சிக்கிட்டேன் உன் வேலையை! என் கையில் பண்டத்தைக் கொடுத்து, போலீஸாரிடம் கையுங் களவுமாப் பிடிச்சுக் கொடுக்கலாம்னு தானே பார்க்கிறே! அது மட்டும் முடியாது!”

“சே! சே! நான் சொல்றபடி கேளு! உன்னை நான் காட்டிக் கொடுக்கவில்லை. அது நிச்சயம். இதை எடுக்கத் தானே நீ வந்தது? இப்போ நானே சொல்கிறேன்! அதை எடுத்துக் கொண்டு வந்த வழியே போய் விடு! உடனே போய் விடு!”

“என்ன விளையாட்டாயிருக்கே? இதை நம்பலாமா?”

“உம்... பேசாதே; போலீஸ்காரங்க வந்துட்டாங்கன்னா, விஷயம் மிஞ்சிப் போயிடும்... பாரு அவங்க மாடி ஏறுகிற சப்தம் கேட்குது! சட்டுனு பிடி கையிலே.”

மாரிமுத்துவுக்குத் தான் கண்டது கனவா என்று சந்தேகம். ஒரு பண்டத்தைத் திருட வருவதாவது; அதையே அதன் சொந்தக்காரர் கையில் கொடுத்து ஓடச் சொல்வதாவது! இது நடப்பதாக இல்லையே! ஆனால் நின்று யோசிக்க இப்போது அவகாசம் இல்லை. ஒவ்வொரு கணமும் போலீஸ்காரர்கள் நெருங்கிக் கொண்டிருக்கிறார்கள். இனி நின்றால் வந்தது மோசம்!

"போ! உடனே போ!” என்று அவசரப்படுத்தினார் செட்டியார்.

மாரிமுத்து சொன்னபடி கேட்டான். வைர மாலையை அவசரமாகத் தன் மடியில் மறைத்துக் கொண்டு ஜன்னல் வழியாக அறையிலிருந்து ஒரு நொடியில் வெளியேறினான்.

கண் மறைவாகப் போனவுடன் மாரி சற்றுத் தயங்கி, அறையில் நடப்பதைக் கவனித்தான். இரண்டு போலீஸ் அதிகாரிகள் உள்ளே நுழைந்தார்கள்.

"செட்டியார்! உம்ம வீட்டைச் சோதனை போட நாங்கள் 'வாரண்ட்' கொண்டு வந்திருக்கிறோம். நீர் இன்று காலையில் ஒரு வைர மாலையை வாங்கி வைத்திருக்கிறீர். அது திருட்டுப் பண்டம் என்பது உமக்குத் தெரிந்தும்கூட அதை வாங்கி இங்கே வைத்திருப்பதாக உம்பேரில் ஒரு 'கம்ப்ளெயிண்ட்' இருக்கிறது” என்றார் அவர்களில் ஒருவர் கடுமையாக.

“எனக்கு ஆட்சேபமில்லை! தாராளமாகச் சோதனை போடுங்கள். அந்த மாலையை நான் வாங்கவுமில்லை; என் வீட்டிலும் இல்லை! எங்கே வேண்டுமானாலும் பார்த்துக் கொள்ளுங்கள்!” என்றார் செட்டியார் உறுதியாக.

மாரிமுத்து அவ்வளவு வார்த்தைகளையும் ஒன்று விடாமல் கேட்டான், பிறகு கடும் வேகமாக மாடியிலிருந்து இறங்கி வீட்டைப் பார்க்க ஓடினான்.

ஓடும் போது "அப்படியா சேதி!” என்று அவன் உதடுகள் முணமுணத்தன.

*****

# 44. ஏன் வரவில்லை?

வெகு அழகாக நான் ஒரு கதை எழுதினதாக உங்களுக்குச் சொல்லியிருக்கிறேனே, ஞாபகம் வருகிறதா? வராது; உங்களுக்குத்தான் ஞாபக மறதி அதிகமாச்சே! இப்போது சொல்கிறேன், அதை நான் ஏன் அச்சுக்குக் கொடுக்கவில்லை என்று! அதுவே ஒரு பெரிய கதை. நான் எழுதிய கதையைவிட நன்றாயிருக்கும். பராக்குப் பார்க்காமல் கேட்டு வாருங்கள்...

ரிக்ஷாவில் ஏறிக் கொண்டேன். ஒரே வேகமாக எனக்குத் தெரிந்த பிரபல பத்திரிகையாசிரியரிடம் ஓடினேன். "ஸார் ஸார்! சரியானபடி பிடித்து விட்டது" என்றேன். போன வேகத்தில் எனக்கு மூச்சு முட்டிப் போய் மேலே ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை; ஆசிரியர் என்னை உட்கார்த்தி ஆசுவாசப்படுத்தி, "ஒன்றுமில்லை; ஒரு கப் எலுமிச்சம்பழ சர்ப்பத் சாப்பிட்டால் உமக்கு அடங்கி விடும்" என்றார்.

"ஐயையோ! பயித்தியம் பிடிக்கவில்லை, ஆசிரியரே! என் கதைக்குச் சரியான சம்பவங்கள் பிடித்து விட்டன என்றுதான் சொன்னேன்" என்றேன்.

"இப்படி என்னிடம் கொடும் அதை! உடனே போட்டு விடுகிறேன்" என்று வலக்கையை நீட்டிக் கொண்டு இடக் கையால் குப்பைக் கூடையை மேஜைக்கு அடியிலிருந்து இழுத்தார் அவர்.

“நான் இன்னும் அதை எழுதவில்லைங்காணும்... உமக்கு அவகாசம் இருந்தாலும் உம்மிடம் சொல்லுகிறேன் என்றேன். "சொல்லி அழும்; கேட்டுத் தொலைக்கிறேன்" என்றார் அவர். நான் இதற்கு எழுதிய இரண்டொரு கதைகளில் இருந்த சோகரசத்தை ஞாபகம் வைத்துக் கொண்டு “அழும்” என்றாரே, அந்த ஆசிரியரின் புத்திசாலித்தனத்தை நான் என்னவென்று சொல்வேன்! காலதாமதம் செய்யாமல் கதையைத் தொடங்கினேன்.

ஒரு ஊரில் ஒரு இளைஞன் இருக்கிறான். அவனுக்குத் தாயாருமில்லை தகப்பனாரும் இல்லை, கையில் காலணாக் காசும் இல்லை. அவன் மிகச் சிரமப்பட்டுப் பள்ளிக்கூடத்தில் படிக்கிறான்; உபகாரச் சம்பளங்கள் வாங்கிக் கொண்டு காலேஜில் படிக்கிறான். ஆனால் பி.ஏ. பரீட்சைக்குப் பணம் கட்ட அவனிடம் ஒன்றும் இல்லை. ஆகையால் பரீட்சை பாஸ் செய்ய முடியாமல் போய், டிராம் வண்டியில் கண்டக்டர் ஆக வேலைக்கு அமர்கிறான்.

அதே ஊரில் அழகான பெண் இருக்கிறாள். அவளுக்குத் தாயாரும்

இல்லை; தகப்பனாரும் இல்லை; அவள் கையிலும் காலணா இல்லை. அவள் மிகவும் சிரமப்பட்டு, கிராம் போன் பிளேட்டுகளிலிருந்து சங்கீதம் கற்றுக் கொள்கிறாள். அந்தச் சங்கீதத்தைச் சிறு பெண்களுக்குச் சொல்லிக் கொடுத்து, வருவதைக் கொண்டு வயிறு வளர்க்கிறாள். அவள் தினந் தோறும் டிராமில் போகிறாள். ஒரு டிராம் 'பாஸ்' வாங்கி விடுகிறாள்.

நமது இளைஞன் இந்த அழகிய பெண்ணைப் பார்க்கிறான். காதல் கொள்கிறான். அன்று முதல் தினமும் வண்ணாரப்பேட்டை டிவிஷன் டிராமில் வேலை கொடுக்க வேண்டுமென்று ஆபீஸில் மன்றாடுகிறான். ஏனென்றால், அந்தப் பெண்மணி அந்த டிராமில்தான் போகிறாள். இரு வரும் பேசிக் கொள்கிறார்கள். தங்கள் காதலை வெளியிட்டுக் கொள்கிறார்கள். நிறையப் பணம் சேர்ந்தவுடன் கல்யாணம் பண்ணிக் கொள்வதென்று தீர்மானித்தார்கள்.

சில நாட்கள் செல்லுகின்றன. இப்படி டிராம் கண்டக்டராகவும் பாட்டு உபாத்தியாயினியாகவும் இருந்தால் அதிகப் பணம் சேராது என்பதை அந்த இளைஞனும் பெண்மணியும் தெரிந்து கொண்டார்கள். ஆகவே, இளைஞன் கப்பல் ஏறி மோரிசு தீவுக்குச் சம்பாதிக்கப் போகிறான்.

ஒரு வருஷம் ஆயிற்று. இளைஞன் ஏராளமாகச் சம்பாதித்து விட்டான்; ஊருக்குத் திரும்புகிறான். பணத்தை எல்லாம் வைரக் கற்களாக மாற்றி, சட்டைப் பையில் போட்டுக் கொண்டு வருகிறான்.

கிளம்புமுன் தன் காதலிக்குத் தந்தி அடித்து, தான் வரும் ஏரோப்ளேனைக் குறிப்பிடுகிறான்.

ஏரோப்ளேன் கிளம்புகிறது. ஆனால் ஒரு துஷ்டன், இளைஞனுடைய காதலியின் படத்தைக் கண்டு, அவள்மீது மையல் கொண்டு இளைஞனை ஒழித்து விடுவதற்காக, ஏரோப்ளேனில் ஒரு திருகைக் கழற்ற, சுமார் நானூறு மைல் போன பிறகு, ஏரோப்ளேன் தலை குப்புற ஏதோ ஒரு தீவில் விழுகிறது.

தெய்வாதீனமாகக் கதாநாயகன் உயிர் தப்புகிறான். அவன் சட்டைப் பையிலிருந்த வைரங்கள் நாலாபுறமும் சிதறிப் போகின்றன. அந்தத் தீவில் ஒரே ஒரு பெரிய முதலையைத் தவிர வேறு ஜந்து ஒன்றும் கிடையாது. அன்ன ஆகாரமில்லாமல் கதாநாயகன் ஒரு மரத்தின் மீது உட்கார்ந்து கொண்டிருக்கிறான்.

காதலி, ஏரோப்ளேன் வராதது கண்டு வேறொரு ஏரோ ப்ளேனில் தேடி வருகிறாள். தூரதிருஷ்டிக் கண்ணாடியால் பார்க்கும் போது ஒரு தீவில்

பளபள என்று தெரிகிறது. அவ்வளவும் வைரம்! அதை அடையாளமாகக் கொண்டு இறங்குகிறாள். காதலனைச் சந்திக்கிறாள்.

வைரங்களைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு இருவரும் திரும்புகிறார்கள். இவர்கள் வந்த பிறகு அந்தத் துஷ்டன் இவர்களைக் காணாமல் தேடிக் கொண்டு மேற்படித் தீவுக்கு வருகிறான். பல நாள் பட்டினியான அந்த முதலை இவனைப் 'பாரணை' பண்ணி விடுகிறது.

சுபம்.

ஆசிரியர் கதையை கேட்டு விட்டு ஒரு பெருமூச்சு விட்டார். "எல்லாம் நன்றாக இருக்கிறது. ஆனால்...” என்று நிறுத்தினார்.

“என்ன முட்டுக்கட்டை!”

“நடக்காத சமாசாரம் ஒன்று இருக்கிறதேங்காணும்! ஆகாய விமானத்திலிருந்து பார்த்தால் வைரக்கல் தெரியுமா, சொல்லுமேன்!”

“கதைதானே ஐயா?”

“கதையாயிருந்தாலும், கொஞ்சமாவது கால் வேணும்!”

ஆசிரியர் துரிதமாக நகத்தைக் கடித்தார். அவர் யோசனை செய்யும் போது நகத்தைக் கடிப்பது வழக்கம். சுமார் ஒரு நிமிஷத்துக்குப் பிறகு துள்ளி எழுந்தார். யோசனை பிடித்து விட்டது!

“இப்படிப் போடும்!” என்றார்.

“எதை?”

“உம்ம கதையைத்தான் சொல்கிறேன். கதாநாயகன் இறங்கின தீவு ஒரே புல் மயமாக இருந்தது. அதை அவன் செதுக்கி ஒரு பெரிய அடையாளம் செய்கிறான்.”

“அதற்கென்ன அர்த்தம்?”

“வருகிறேன்... அதில்தான் வேடிக்கை. அவன் சொல்கிற செய்தி காதலிக்குத்தான் தெரிய வேண்டும். துஷ்டனுக்குத் தெரியப்படாது. அதற்காக அவளுக்கு மட்டும் புரியும்படி எழுதுகிறான். புரிகிறதா?”

"இல்லை.”

“கேளும். அந்தச் செய்தி இதுதான்: 'கமலம் (காதலியின் பெயர்) - 'வைரங்கள்' - 'ஏழுமலை' (இளைஞன் பெயர்)... கமலாவுக்குத்தான் வைரங்கள் அவனிடமிருப்பது தெரியுமே. அவைகளிடம் தான் அவனும் இருப்பான். கமலம் என்றால் தாமரை; முதலில் தாமரைப் பூ படம்

போடுவது. கடைசியில் ஏழு மலைகள் போட்டு அவன் பெயரைக் காண்பிப்பது. நடுவில் வைரங்கள் போடுவது. இதைக் கண்டவுடன் விமானத்திலிருந்து அவள் கீழே இறங்குவாள்...”

ஆசிரியருக்கு உற்சாகம் கரை காணவில்லை. "போம் ஐயா! உடனே போய் எழுதிக் கொண்டு வாரும்! இது மாதிர் கதையைப் படித்து மக்கள் மயங்கி விடுவார்கள். உடனே போம்!” என்று என்னை வெளியே தள்ளியே விட்டார். நான் திரும்ப வந்து விடுவேனோவென்று கதவைக் கூடப் படீரென்று சார்த்தி விட்டார்.

நான் வீட்டிற்குப் போனேன். மாடியிலிருந்து கீழே விழுந்து உயிர் துறக்கலாமென்றால், என் வீட்டில் மாடியில்லை. ஆற்றில் குதிக்கலாமென்றால் ஆற்றில் தண்ணீர் இல்ல. ஆகவே உயிரைவிட முடியாமல் தவித்தேன்.

அவ்வளவு வருத்தம் ஏன் வந்தது? உண்மை தெரிந்தால் நீங்களும் என் மனநிலையைப் புரிந்து கொள்ளலாம். ஆனால் ஒரு ஒத்தாசையும் செய்ய முடியாது.

நான் யோசித்து வைத்திருந்த கதையின் கதாநாயகன் பெயர் சுப்புரத்னம்; நாயகியின் பெயர் அம்புஜாக்ஷீ அப்படி இருக்கும் போது நான் எப்படி ஐயா, என் கதையை மாற்றுவது!

என் கதை ஏன் வெளியாகவில்லை என்பது இப்போது வெளியாகி விட்டதா?

*****

## 45. சரோஜாவின் சம்மதம்

"ஒரு மனிதன் ஒன்றின் மேல் ஆசை வைத்து விட்டால், அவன் அதை அடைய என்ன தான் செய்ய மாட்டான்!" என்றான் பட்டாபி ராமன். நானும் பட்டாபியும் பாலிய சிநேகிதர்கள். படிப்பு முடிந்ததும் பர்மாவில் உத்தியோகம் தேடிக் கொண்டு போன பட்டாபி இப்போதுதான் தாய் நாட்டுக்குத் திரும்பியிருக்கிறான். நாங்கள் இருவரும் பீச்சில் அமைக்கப்பட்டிருக்கும் சிமிட்டி பெஞ்சி ஒன்றில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம்.

திடீரென்று பட்டாபி இப்படிச் சொன்னதற்கு என்ன காரணம் இருக்குமென்று எனக்கு உடனே தெரியவில்லை. சுற்று முற்றும் கவனித்த போது, நாகரிகமாக உடை தரித்த ஒரு பெண் தன் கையில் ஒரு நாயைப் பிடித்துக் கொண்டு வந்து கொண்டிருந்தாள். அந்த நாய் குதித்துக் குதித்து, அவளை இங்கும் அங்கும் இழுக்கப் பார்த்துக் கொண்டு வந்தது. அவள், "ஏய்! ஏய்! ஜிம்! ஜிம்!" என்று கூவிக் கொண்டு வந்தாள். ஒருகால் இவளைக் கண்டு தான் பட்டாபி அப்படிச் சொல்லியிருப்பானோ என்று நான் எண்ணிய போது அவன் தொடர்ந்து, "எனக்கு இவளைப் பார்க்கும் போது என் அம்மாஞ்சி கோபாலன் ஞாபகம் தான் வருகிறது" என்றான்.

“அவன் என்ன செய்தான்? இவளுக்கும் அவனுக்கும் என்ன சம்பந்தம்? கோபாலனை நான் பார்த்ததே இல்லையே?" என்றேன்.

"இவளுக்கும் அவனுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை... அது ஒரு கதை" என்று பட்டாபி கூறி, அந்தக் கதையை எனக்குச் சொல்லத் தொடங்கினான்:

நான் பர்மாவில் ஒரு பெரிய கம்பெனியின் ஏஜெண்டாக அமர்ந்திருந்தேன் என்பது உனக்குத் தெரியும். அப்போது எனக்கு எத்தனை வரும்படி வந்தது, எப்படிச் செலவழித்துக் கொண்டிருந்தேன் என்பதெல்லாம் உனக்குத் தெரிந்தால் நீ பிரமித்துப் போவாய். நான் ஒரு நாள் தங்கின ஊரில் ஒரு நாள் தங்க மாட்டேன்; செகண்ட் கிளாஸுக்குக் கீழே ரயிலில் ஏறுவதில்லை.

அந்த உத்தியோகத்தில், எவ்வளவோ தனவந்தர்கள், பெரிய வர்த்தகர்கள் ஆகியோருடைய நட்பு எனக்குக் கிடைத்தது. என்னை அவர்கள் தங்கள் சொந்த சகோதரன் போல் கொண்டாடினார்கள். அவர்களில் முக்கியமாக நான் செல்வராஜ் என்பவரைச் சொல்ல வேண்டும். கோடீசுவரரான செல்வராஜ் தமிழ்நாட்டுக்காரர்தான். அவர்

என் மீது வைத்திருந்த அபிமானம் இவ்வளவு அவ்வளவல்ல. அவர் வீட்டுக்குப் போய் விட்டேனானால் எனக்கு ராஜோபசாரம் நடக்கும். நம் சொந்த வீட்டில் கூட அப்படி நடக்குமா என்பது சந்தேகந்தான். என் சொந்த சகோதரன் என்னிடம் அவ்வளவு உள்ளன்பு வைத்திருப்பானா என்றும் நிச்சயமாகச் சொல்ல முடியாது.

மாண்டலேயில் அவருடைய பங்களாவை அரண்மனை என்றே தான் சொல்ல வேண்டும். அதற்குக் கட்டுக்காவல் எத்தனை! ஆனால், நான் போவதென்றால், - அது இரவு பன்னிரண்டு மணியாக இருக்கட்டுமே! - என்னைத் தடுப்பவர் யாரும் இல்லை.

செல்வராஜ் பார்ப்பதற்குக் காட்டாள் மாதிரி வாட்ட சாட்டமாய் வளர்ந்திருப்பார்! முகத்தில் கட்டு மீசை. தன் உருண்ட பெரிய கண்களை ஒரு முறை உருட்டி விழித்தாரானால் யாரும் கதி கலங்கிப் போவார்கள்! அகண்ட உறுதியான மார்புக்குள் தங்கமான இருதயம். இனிமேல் நான் அவ்வளவு உத்தமரான நண்பரை எங்கே பார்க்கப் போகிறேன்?

நான் வியாபார நிமித்தம் மாண்டலேக்குப் போன போது, ஒரு சமயம் என் அம்மாஞ்சி கோபாலனையும் கூட அழைத்துக் கொண்டு போயிருந்தேன். கோபாலன் கண்ணுக்கு லட்சணமாய், எலுமிச்சம் பழம் போன்ற மேனியுடன் இருபத்தைந்து வயது வளர்ந்த காளை. நல்ல உத்தியோகமாகப் பார்த்துத் தரும்படி அவன் தகப்பனார் ஒரு கடிதத்துடன் அவனை என்னிடம் அனுப்பியிருந்தார். கோபாலன் என்னுடன் சுற்றிக் கொண்டிருந்தான். மாண்டலேயில் இரண்டு மூன்று நாள் நான் தங்க வேண்டியிருந்ததை முன்னிட்டு, நண்பர் செல்வ ராஜின் பங்களாவுக்கே போய் 'காம்ப்' போடலாம் என்று தீர்மானித்தேன். அதோடுகூட இந்த கோபாலனும்தான் எனக்கு நடக்கும் மரியாதைகளையும் என் சிநேகிதர்கள் என்னிடம் வைத்திருக்கும் மதிப்பையும் பார்க்கட்டுமே என்ற அசட்டு ஆசையும் எனக்கு இருந்தது.

எல்லாம் நான் விரும்பியபடியேதான் நடந்தது; செல்வராஜ் அவர்களே நேரில் வந்து என்னை அழைத்துக் கொண்டு போனார். அந்தத் தடவை நான் அதுவரை கண்டிராத ஒரு ஆத்மாவை அங்கே கண்டேன்.

நாங்கள் பெரிய ஹாலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த போது, ஓர் இனிய நாதம் தவழ்ந்து வந்தது. அதோடு ‘ஜில்க்' 'ஜில்க்' என்று சலங்கைச் சப்தமும் தொடர்ந்து கேட்டது. ஒரு கணம் இது என்னவாயிருக்கும் என்று நான் திகைத்திருப்பேன்! மறுகணம் ஓர் அற்புதமான நறுமணம் நிரம்பியது. தேவதை போன்ற ஒரு பெண்ணுருவம் உடனே தோன்றியது.

அவ்வளவு மெல்லியலாளை அதுவரை நான் கண்டதில்லை என்று ஒப்புக் கொள்கிறேன். பதினெட்டு வயதிருக்கும்; கண்ணாடி போன்ற தேகம்; அதை ஒரு சில்க் புடவை வெகு நாசூக்காகச் சுற்றியிருந்தது.

வெகு சொற்பமான ஆபரணங்கள். ஐயோ! அந்த முகத்தின் அழகை நான் என்னவென்று சொல்லுவேன்? அவள் கையில் ஒரு மெல்லிய சங்கிலியால் ஒரு சின்ன நாய்க் குட்டியைப் பிடித்திருந்தாள்.

நான் தற்செயலாகக் கோபாலன் பக்கம் திரும்பிப் பார்த்தவன் திடுக்கிட்டுப் போனேன். கோபாலன் வெறிக்க வெறிக்க அந்தப் பெண்மணியை உண்டு விடுவது போல் பார்த்துக் கொண்டிருந்தான்!

"இவள் யார்?" என்று நான் கேட்பதற்குள்ளாக, செல்வராஜ் முந்திக் கொண்டார். "நீங்கள் என்ன கேட்கப் போகிறீர்கள் என்று எனக்குத் தெரியும். இவள் என்னுடைய பெண் சரோஜா. இத்தனை நாளாக இவள் ரங்கூனில் பாட்டி வீட்டில் படித்துக் கொண்டிருந்தாள். இவளுக்குத் தாயார் ஏழு வயதில் போய் விட்டாள். புருஷர்களுக்குப் பெண்களை வளர்க்கத் தெரியுமா, ஸார்? அந்தப் பொறுப்பை இவள் பாட்டிதான் ஏற்றுக் கொண்டிருக்கிறாள். இப்போது பள்ளிக் கூடம் லீவ் விட்டிருப்பதால், ஒரு மாதம் இங்கே இருப்பாள்" என்றார்.

அந்தப் பெண் மெல்லப் பாடிக் கொண்டு அந்த அறையில் சுற்றி வந்து, வாசற்படியண்டை சென்றதும் ஏதோ நினைவு வந்தவள் போல் வெளியே சென்று விட்டாள். நான் அப்போது கோபாலனையே கவனித்துக் கொண்டிருந்தேன். அவள் வெளியே போகும் வரை பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பெருமூச்சுடன் அவன் தலையைக் குனிந்து கொண்டான்.

அதற்குப் பிறகு அன்று மாலை வரையில் நாங்கள் அந்தப் பெண்ணைப் பார்க்கவில்லை. கோபாலனின் கண்கள் சுழன்று அவளைத் தேடுவதை மட்டும் கவனித்தேன். ஒரு மனிதனுக்கு ஆசை விழுந்து விட்டால் - அப்பப்பா! அவன் படுகிற பாடு! எனக்கே சிரிப்பு வந்தது!

அன்று மாலை நாங்கள் பங்களாவின் நந்தவனத்தில் சரோஜாவை மறுபடி கண்டோம். இப்போது அவள் நாய்க் குட்டியுடன் ஒய்யாரமாக உலாவிக் கொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் நெருங்கியதும் ஒதுங்கி வழி விட்டோம். எங்களை அடையாளம் கண்டு கொண்டதற்கு அறிகுறியாக ஒரு புன்னகை செய்து விட்டு, அவள் மேலே சென்றாள். கோபாலனோ தன்னையும் மறந்து ஸ்தம்பித்து நின்று விட்டான்.

நான் இதையெல்லாம் வேடிக்கையாக நினைத்துக் கொண்டிருந்தவன்,

அதே இரவில் வேறு விதமாக முடிவு செய்ய வேண்டி வந்தது. நான் அப்போது கண்ட காட்சி என் திகிலைக் கிளப்பியது.

அப்போது சுமார் எட்டு மணி இருக்கும். நான் பங்களாவின் மேல் மாடி வராந்தாவில் வேகமாகச் சென்ற போது அங்கே ஒரு அறை பாதி திறந்திருந்தது. பிறகுதான் எனக்கு அது சரோஜாவின் அறை என்று தெரிய வந்தது. பால் போன்ற மின்சார வெளிச்சத்தில் அவள் நின்று கொண்டிருந்தாள். அவளுடைய காலடியில் மண்டியிட்ட பாவனையில் ஒரு ஆடவன் இருந்தான். அந்தப் புருஷன் கோபாலன் தான்

இந்த விஷயத்தை அதிகம் முற்ற விட்டால் எனக்கும் என் ஆத்ம நண்பர் செல்வராஜுக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டு விடும் என்ற திகில் உடனே என்னைப் பற்றிக் கொண்டது. செல்வராஜ் ஒரு கையால் ஒரு அடி கொடுத்தால் இந்த கோபாலனைப் பொறுக்கி எடுக்க வேண்டியதுதான்! எவ்வளவு முட்டாள்தனம் இவனை இங்கே அழைத்து வந்தது! இங்கிதம் தெரியாமல் நடந்து கொள்கிறானே!" என்று கலங்கினேன். இப்போது நான் செய்யக்கூடியது ஒன்று தான். மாண்டலேயை விட்டு எவ்வளவு சீக்கிரம் கிளம்ப முடியுமோ அவ்வளவு சீக்கிரம் கிளம்ப வேண்டியதுதான் அது.

அன்றிரவு கோபாலன் தூக்கத்தில் உளறினான். "எப்படியாவது அடைந்தே தீரவேண்டும்! அவள் இஷ்டப்பட்டாலும், படாவிட்டாலும், எப்படியாவது அழைத்துக் கொண்டு போய்விட வேண்டியதுதான்."

காலையில் எழுந்ததும் கோபாலன் தனக்கு உடம்பு அசௌகரியமென்று சாக்குச் சொல்லி, பங்களாவிலேயே தங்கி விட்டான். இது சுத்தப் பொய் என்று எனக்கு ஒருவரும் சொல்லத் தேவையில்லை. அந்தப் பெண்ணிடம் மன்றாடுவதற்குத்தான் அவன் தங்குகிறான் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. அவனுடன் பேச்சை வளர்ப்பதில் உபயோகம் இல்லை என்று எண்ணி, நான் வெளியே கிளம்பிய போது, "கோபாலா! நாம் இன்றே ரங்கூனுக்குப் போக வேண்டும். இன்றிரவு எக்ஸ்பிரஸுக்கு வந்து விடு! நான் நேரே ஸ்டேஷனுக்கு வந்து விடுகிறேன்" என்று கூறினேன்.

செல்வராஜிடம், "ஸார், என்னை மன்னிக்க வேண்டும். ரங்கூனில் ஒரு அவசர வேலையை விட்டு வந்தது இன்று தான் ஞாபகம் வருகிறது. எப்படியாவது இந்த ஊர் அலுவல்களை இன்றைக்கே தீர்த்துக் கொண்டு, இரவு எக்ஸ்பிரஸில் நான் புறப்படப் போகிறேன்" என்றேன்.

செல்வராஜ் இலகுவில் மசியவில்லை. "சாப்பிட்டு விட்டுத்தான் போக

வேண்டும்" என்று பிடிவாதம் பிடித்தார். நானும் விடாப்பிடியாக, “மன்னித்துக் கொள்ளுங்கள்; ரொம்ப அவசர வேலைகள். இங்கே வந்து விட்டுப் போவதற்கு இன்று அவகாசமில்லை. இன்னும் ஒரே மாதத்தில் மறுபடி வருகிறேன். அப்போது ஒரு வாரம் தங்குகிறேன்” என்று உறுதி கூறினேன். அரை மனதுடன் அனுப்பினார். போகும் போது என் கவலையெல்லாம், கோபாலனைப் பற்றித்தான். இவ்வளவு ஆப்த நண்பருடன் மனஸ்தாபத்தை ஏற்படுத்தி வைக்கக் கூடாதே என்பதே என் கவலை.

நான் ரயிலடியில் காத்திருந்தேன். எக்ஸ்பிரஸ் வந்தது; முப்பது நிமிஷம் நின்றது. நான் கோபாலனை எதிர்பார்த்து எதிர்பார்த்து மனம் சோர்ந்து போனேன். ஆளைக் காணவில்லை. “அவன் ஏன் வரவில்லை? அவன் என்ன செய்து விட்டான்? அந்தப் பெண் என்ன சொன்னாளோ? அவள் தகப்பனாருக்குத் தெரிந்து தடை செய்திருப்பாரோ?” என்றெல்லாம் எண்ணி என் நெஞ்சம் 'திக் திக்’கென்று அடித்துக் கொண்டது. ரயில் ஊதிய போது எனக்குப் பகீரென்றது. வண்டி நகரத் தொடங்கியது.

அப்போது தான் அலறியடித்துக் கொண்டு ஸ்டேஷனுக்குள் கோபாலன் ஓடிவந்தான். ஒரு கதவைத் திறந்து வண்டியிலும் ஏறிக் கொண்டான். அவனுடன் மற்றொரு ஆத்மாவும் ரயிலேறியதை நான் கவனித்தேன்.

ஒரு மனிதன் ஒன்றின் மீது ஆசை வைத்து விட்டால் மானம் வெட்கத்தை விட்டு விடுகிறான். அதை அடைவதில் தான் அவன் குறியாயிருக்கிறான். கோபாலன் தான் ஆசை வைத்த பொருளை அவன் வரும் போது கொண்டு வந்து விட்டான்!

பட்டாபி கதையைச் சற்று நிறுத்தினான். என்னால் அதற்கு மேலும் பொறுமையுடன் இருக்க முடியவில்லை.

“என்ன! அவள் சம்மதித்தாளா?” என்று பரபரப்புடன் கேட்டேன்.

“சம்மதிக்காமல் இருந்தால் எப்படி?” என்றான் பட்டாபி.

“அவள் தகப்பனார்...?”

“அதைப் பற்றி அக்கறையில்லை என்று சரோஜா சொல்லி விட்டாளாம்!”

“அப்போது அவருக்கு விஷயமே தெரியாதென்று சொல்லு?”

“ஆமாம்!”

"உம்... ஊருக்கு வந்ததும் அவளைக் கோபாலன் கல்யாணம் செய்து

கொண்டானா?”

"எவளையடா! முட்டாள்...! எதற்காகடா...? அடேடே! என் மேல்தான் பிசகு; நான் முதலிலேயே சொல்ல மறந்தே விட்டேன். கோபாலனுக்கு நாய்கள் என்றால் பிராணன். எத்தனை நாய்களை அவன் வளர்த்திருக்கிறான், தெரியுமோ? அந்தப் பெண்ணுடன் வந்த நாயின் மேல்தான் அவன் மோகம் எல்லாம் விழுந்திருந்தது. பெண்களைவிட நாய்கள் மீதுதான் கோபுவுக்கு ஆசை! என் கவலை, அதை அவள் இஷ்டத்துக்கு மாறாகத் திருடிக் கொண்டு வந்து விடுவானோ என்பதுதான். அன்றுகூட அவள் காலடியில் அவன் மண்டியிட்டுக் கொண்டிருந்தான் என்று சொன்னேனே! அப்போது நாயைத்தான் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தான்!” என்று முடித்தான் பட்டாபி.

*****

## 46. வேலைக்காரி காத்தாயி

காத்தாயி எங்கள் வீட்டில் வேலைக்கு வந்து ஒரு மாதம்தான் ஆகிறது. அதற்குள்ளாக அவள் எத்தனையோ பிசகுகள் செய்து விட்டாள். எதைச் சொன்னாலும் அவள் முணமுணக்காமல் செய்ததில்லை. கடைக்குப் போகச் சொன்னாலும் முணமுணப்பாள்; வீடு கூட்டச் சொன்னாலும் முணமுணப்பாள்; "நீ ஒன்றுமே செய்ய வேண்டாம்; சும்மா குந்திக்கிட்டுக் கிட" என்றாலும் அவள் வாய் ஏதாவது முணமுணத்துக் கொண்டுதான் இருக்கும்.

அன்றைக்கு என் அறையைக் கூட்டவில்லை. என் சிநேகிதர்கள் வந்து விட்டார்கள். எனக்குக் கடுங்கோபம் வந்தது. என் மனைவியைக் கூப்பிட்டு இரைந்து விட்டேன்.

"என்ன வேலைக்காரி வைத்துக் கொண்டிருக்கிறாய்? உதவாக்கரை வேலைக்காரி! தினம் வீட்டை ஒரு தடவை கூட்டக் கூடத் துப்புக் கிடையாது! முதலில் இவளை வேலையை விட்டுத் தள்ளி விட்டு, வேறு ஆள் வை!" என்றேன்.

"ஆஹா!" என்று சொல்லி விட்டுப் போனாள் என் மனைவி. ஆனால் அவளுடைய குரலிலிருந்து அவள் காத்தாயியை ஒன்றுமே சொல்லப் போகிறதில்லை என்று ஊகித்துக் கொண்டேன்.

அன்றிரவு நான் சாப்பிட உட்கார்ந்து ஒரு கவளம் சாதத்தைக் கையில் எடுத்திருப்பேன். அதில் ஒரு நீண்ட கேசம் சுற்றிக் கொண்டிருந்ததைக் கண்டு விட்டேன். என் கோபம் கரை மீறிப் போய் விட்டது. "சீ! ஒரு தரம் சொன்னால் போதாதா? நாளைக்குக் காலையில் இந்தக் காத்தாயி இந்த வீட்டு வாசலை மிதிக்கக் கூடாது! ஆமாம்!" என்று இரைச்சல் போட்டேன். மறுநாள் அவள் காத்தாயியிடம் கண்டிப்பாய் நடந்து கொள்வாள் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை.

அவளும் மறுநாள் காலையில் காத்தாயியிடம் கண்டிப்பாகப் பேசக் காத்திருந்தாள். "அடியே! உன் வேலை கட்டோடு பிடிக்கவில்லை. நீ இன்றோடு நின்று கொள். காசைத் தீர்த்துக் கையில் வாங்கிக் கொள்!" என்பதாகக் காத்தாயியிடம் சொல்ல அவள் உறுதி கொண்டு விட்டாள் என்று அவள் முகம் காண்பித்தது.

காத்தாயி வந்தாள். இன்று ஏனோ அவள் தினம் வருவதைவிட அதிகாலையிலேயே வந்து விட்டாள். அந்தச் சாக்கை வைத்துக் கொண்டு சண்டையை ஆரம்பிக்க முடியாமல் என் மனைவி திண்டாடினாள் என்பதைக் கவனித்தேன்.

என்றாலும், அவள் ஒருவாறு மனதைத் திடம் செய்து கொண்டு, அவளிடம் சொல்லி விடுவதென்று அவள் எடுக்கு முன் துடைப்பதைப் போய் எடுத்தாள். காத்தாயி பரபரப்புடன் அதைப் பிடுங்கிக் கொண்டு,

“என் கண்ணு! நீ எதுக்கு எழுந்திருச்சு வந்தே! நான் இந்த வேலையெல்லாம் செய்யத்தான் ஓடியாந்துக் கிட்டிருக்கேனே! நீ போய்ப் படு, கொளந்தே!” என்றாள்.

அவள் குரலில் தொனித்த அன்பும், அவள் பரிந்து வந்த விதமும் என் மனைவியை மீண்டும் தயங்க வைத்திருக்க வேண்டும். "இதேதடா தர்ம சங்கடமாயிருக்கிறதே!” என்று அவள் உள்ளே வந்தாள். காத்தாயி தன் வேலைகளைச் கவனித்தாள்.

விஷயத்தை இதோடு விடக்கூடாதென்று நான் மறுபடியும் மறுபடியும் என் மனைவியைத் தூண்டினேன். "என்ன நீ வாய் அடைத்துப் போய் நிற்கிறாயே! தைரியமாகச் சொல்லு போ!” என்று விரட்டினேன்.

புழக்கடையில் காத்தாயி அப்போது பத்துப் பாத்திரங்கள் தேய்த்துக் கொண்டிருந்தாள். என் மனைவி ஒருவாறு மனதை மீண்டும் திடம் செய்து கொண்டு போய் நின்றாள்.

காத்தாயி நிமிர்ந்து பார்த்து, “ராசம்மா, இந்தப் புடவையை நீ உடுத்திக்கிட்டா மகாலெட்சுமி மாதிரிதான் இருக்கு!” என்றாள்.

என் மனைவிக்கு இருந்த மனோதிடம் போய் விட்டது. என்னிடம் வந்து, “காத்தாயியை என் வாயால் நான் போகச் சொல்ல மாட்டேன்! அவள் இப்படிப் பிரியமாய்ப் பேசும் போது எப்படிக் கண்டிப்பாய். 'நீ நின்று கொள்' என்று சொல்வது? என்னால் முடியாது. வேலை செய்கிறாளோ இல்லையோ, இருந்து விட்டுப் போகட்டும்” என்று என்னிடம் உறுதியாகச் சொல்லி விட்டாள்.

எனக்கும் அப்போது தோன்றி விட்டது - இந்தக் காத்தாயி மென்னியைப் பிடித்துத் தள்ளினாலும் நம் வீட்டை விட்டுப் போக மாட்டாளென்று. ஆகவே, அந்த எண்ணத்தைக் கைவிட்டேன்.

அன்று மத்தியானம் ஒரு கடிதம் என் தமக்கையிடமிருந்து வந்தது. பிரசவத்துக்கு அவள் வருவதாகவும், அவளுடைய புக்காத்து மனிதர்களும் கூட வந்து ஒரு வாரம், பத்து நாட்கள் தங்குவார்கள் என்றும் அதில் அவள் எழுதியிருந்தாள்.

நான் என் சகதர்மிணியை அழைத்து, "அடியே! நல்ல வேளையாகப் போயிற்று, காத்தாயியை வேலையை வீட்டு தள்ளாமல் இருந்தது. பார்!

என் அக்கா முதலியவர்கள் வந்தால் வீட்டு வேலை செய்ய ஆள் வேண்டியிருக்கும் அல்லவா? இந்த நாளில் நல்ல நம்பிக்கையுள்ள வேலைக்காரி எங்கே லகுவில் கிடைக்கிறாள்! காத்தாயி இருப்பது எவ்வளவோ சௌகரியம்!” என்றேன்.

என் மனைவி புழக்கடைக்கு ஓடி அங்கே கூடை மெழுகிக் கொண்டிருந்த காத்தாயியிடம், “காத்தாயி! என் நாத்தனாரும் மனுஷாளும் வருகிறார்கள். வீட்டிலே ஏகப்பட்ட வேலை இருக்கும். நீதான் எல்லாம் பார்த்துக்கணும்” என்றாள்.

காத்தாயி உடனே, "ஐயோ அம்மா! நானே ஒரு வாரமாக உன்னண்டை சொல்லணும் சொல்லணும்னு இருக்கேன். என் மவன் கடுதாசி போட்டிருக்கான் மரக்காணத்திலேருந்து. 'நீ வேலை செய்யவும் வேண்டாம். சம்பாதிக்கவும் வேண்டாம். வீட்டோடே வந்து குழந்தைகளை வைச்சுக்கிட்டுக் குந்தியிருந்தாப் போதும்'னு கெஞ்சறான். நான் போறேன் அம்மா! எனக்கும் தள்ளல்லை. நீ வேறே ஆளு பார்த்து வைச்சுக்கிட்டு, என் சம்பளத்தைத் தீர்த்து விடு!” என்றாள்.

*****

## 47. நல்ல சிநேகம்

தம்புச் செட்டித் தெருவில் நான் குடியிருந்த வீட்டைக் காலி செய்வதென்று கடைசியில் தீர்மானம் செய்து வீட்டுக்காரரிடம் தெரிவித்தேன். அவர் உடனே என் வாடகைக் கணக்கைப் புரட்டிப் பார்த்து வீட்டு வாசலில் 'டு லெட்' என்று ஒரு போர்டைத் தொங்க விட்டார்.

வீட்டில் என்ன அசௌகரியமென்று கேளுங்கள். மழை பெய்த போதெல்லாம் ஒழுகியது. வெய்யில் காலத்தில் தேள்கள் பொத்துப் பொத்தென்று விழுந்தன; மழை காலத்தில் சமையல் உள் வரையில் நத்தைகள் நடமாடின; வீட்டுக்கார அம்மாள் மகா ஆசாரம்; நாங்கள் நடக்கும் வழியெல்லாம் நீர் தெளித்து விட்டுத்தான் நடப்பாள். வீட்டுக்காரர் வாடகைப் பணம் வாங்க முதல் தேதி ஆபீசுக்கு வந்து விடுவார். இவ்வளவு உபத்திரவங்களையும் எப்படித்தான் ஒன்பது வருஷ காலம் சகித்துக் கொண்டு நான் அந்த வீட்டில் இருந்தேன் என்பது எனக்கே ஆச்சரியமாகத்தான் இருந்தது.

வாசலில் வந்து நின்றேன். அதே சமயம் அடுத்த வீட்டு வாசலில் அந்த வீட்டில் இருப்பவர் வந்து நின்றார். எனக்கு முந்தியே அந்த வீட்டுக்கு அவர் குடிவந்தவர். இது மாதிரி எத்தனையோ ஆயிரம் தடவைகள் நானும் வாசலில் நின்றிருக்கிறேன்; அவரும் அதே மாதிரி வந்து நின்றிருக்கிறார். ஆனால் நாங்கள் பேசிக் கொண்டதில்லை. எங்களுக்குள் சண்டை ஒன்றுமில்லை. என்னமோ பேசவில்லை; பேசக் காரணமும் இல்லை. ஒருவரையொருவர் தெரிந்தாப் போல் கூடக் காட்டிக் கொள்வதில்லை.

நான் சாத்துக்கொடிப் பழ வியாபாரியுடன் தகராறு செய்து வாங்குவேன். எப்படி வாங்கினீர்கள் என்று அவர் கேட்பது கிடையாது. அவர் கத்தரிக்காய்க் கூடைக்காரியுடன் மல்லுக்கு நிற்பார். வீசை எப்படியென்று நானும் கேட்ட தில்லை.

இப்படியாக நாங்கள் ஒன்பது வருஷத்தைக் கழித்து விட்டோம். இன்று நான் அந்த வீட்டைக் காலி செய்ய 'நோட்டீஸ்' கொடுத்து விட்டேன். அடுத்த மாதம் முதல் வேறிடம் போகப் போகிறேன்.

இன்று தான் அவர் முதல் முதலாக வாயைத் திறந்து என்னிடம் பேசிக் கொண்டு வந்தார். “என்ன ஸார்! ஜாகையை காலி செய்யப் போகிறீர்களாமே! நம்மாத்திலே பொம்மனாட்டிகள் பேசிக் கொண்டார்கள்” என்று சொன்னார்.

"ஆமாம்... ரொம்ப சௌகரியக் குறைச்சல் இருக்கிறது. எத்தனை நாள்தான் பொறுத்துக் கொண்டிருப்பது?" என்று பதில் சொன்னேன்.

"வாஸ்தவம் ஸார்! எங்கே ஜாகை பார்க்கிறீர்களோ?"

"நான் சிந்தாதிரிப்பேட்டைப் பக்கமாக ஜாகை பார்க்கலாமென்று இருக்கிறேன். நமக்கு வேண்டிய மனுஷாளும் அங்கே இருக்கிறார்கள்."

"ரொம்ப சரி, ஸார்! இத்தனை நாள் நாம் சேர்ந்திருந்தோம். நீங்கள் போகிறீர்கள் என்று கேட்க மனதுக்கு ரொம்பக் கஷ்டமாக இருக்கிறது" என்றார் அவர்.

"எனக்கும் அப்படியேதான் இருக்கிறது. என்ன செய்கிறது? முக்கியமான வசதிகள் செய்து தரவில்லை என்றால் எப்படி இருப்பது ஸார்? வாடகையை முதல் தேதி 'கரெக்ட்'டாக வாங்கிக் கொள்கிறார் வீட்டுக்காரர். ஒரு சௌகரியம் கூடச் செய்து கொடுப்பதில்லை. நானும் பொறுத்துப் பார்த்தேன்."

"நீங்கள் சொல்வது ரொம்ப சரி... என்ன இருந்தாலும் நீங்கள் போகிறது வருத்தமாகத்தான் இருக்கிறது" என்றார். அவர் முகத்தில் தோன்றிய சோகத்தைக் கண்ட போது என் உள்ளம் உருகி விட்டது.

உள்ளே வந்ததும் ராஜியிடம், "அடியே, இத்தனை நேரம் நான் யாருடன் பேசிக் கொண்டிருந்தேன் தெரியுமா? அடுத்த வீட்டு வக்கீல் ராமபத்திர அய்யரிடம் தான்! நாம் வீடு காலி செய்யப் போகிறோம் என்று அவர் ரொம்ப வருத்தப் படுகிறார். அவர் எவ்வளவு உருக்கமாகப் பேசுகிறார் தெரியுமோ? எனக்குக் கூட ஏன் காலி செய்கிறோம் என்று தோன்றி விட்டது."

"உங்களுக்கென்ன! எல்லாம் தோன்றும்! இந்தப் புகைப் போக்கியில்லாத சமையல் கட்டிலே சமைச்சு, பாதாளத்திலேருந்து தண்ணீரை இழுத்துக் கொட்டி சிசுரூஷை செய்யறத்துக்கு நான் ஒருத்தி அகப்பட்டுண்டிருக்கேன். ஹாய்யா அடுத்தாத்துக்காரரோடு பேசிக் கொண்டு இங்கேயே இருப்பியள்!" என்றாள் அவள்.

"சே! சே! நம்ப போறதுதான் நிச்சயமாயிடுத்தேடி! ஒரு பேச்சுக்குச் சொன்னேன்" என்று அவளைச் சமாதானப் படுத்தினேன்.

இதற்குப் பிறகு ராமபத்திர ஐயரைப் பலமுறைகள் சந்தித்தேன். சந்தித்த இடங்களில் எல்லாம் நாங்கள் பேசிக் கொண்டோம்.

"ஸார்! ஏதாவது இடம் நல்லதாய்க் கிடைத்ததா?" என்று அவர் கவலையுடன் கேட்டார்.

"பார்த்துக் கொண்டு வரேன், ஸார்! ஒன்று இருந்தால் ஒன்று இல்லை!" என்றேன்.

"பார்த்துப் போங்கள், ஸார்! போகிற இடம் இதை விட மோசமாயிருக்கப் போகிறது" என்றார்.

மற்றுமொரு தரம் சந்தித்த போது, "ஐயர்வாள், இன்னும் நாலு நாளில் காலி செய்ய வேண்டும் போலிருக்கிறதே! இடம் 'ஸெட்டில்' பண்ணி விட்டீர்களா?' என்று கேட்டார்.

"ஏதோ பார்த்திருக்கிறேன். எனக்குப் பிடித்தால் அவளுக்குப் பிடிக்கவில்லை; அவளுக்குப் பிடித்தால் அவள் அப்பாவுக்குப் பிடிக்கவில்லை."

"முக்கியமாகப் பெண்டுகளுக்குச் சௌகரியமாக - அவர்கள் மனங்கோணாதபடி - போங்கள். அதில் ரொம்ப நன்மை இருக்கிறது, ஸார்" என்றார் ராமபத்திரய்யர். நானும் அவரும் அன்று காப்பி ஹோட்டலில் சேர்ந்து சாப்பிட்டோம்.

நான் போவதற்குள் ஒரு நாள் இவருக்கு விருந்து வைக்க வேண்டுமென்று கூட நினைத்தேன். நானும் ராஜியும் தினம் தினம் இரண்டு வேளையும் ஜாகை பார்த்துக் கொண்டு அலையாமல் இருந்திருந்தோமானால், அவருக்கும் நம் வீட்டுச் சாப்பாடு கிடைத்திருக்கும். நாளுக்கு நாள் "ஐயோ அவரைப் பிரிய வேண்டிய காலம் நெருங்குகிறதே!" என்று என் நெஞ்சு வாடியது.

மாதம் முப்பதாம் தேதி வந்தது. நாளை காலி செய்ய வேண்டிய தினம். எனக்குச் சரியாக வீடு கிடைக்கவில்லை; வீட்டுக்காரர் போர்டு தொங்க விட்டிருந்தாரேயொழிய, அவருக்கும் குடி ஒன்றும் நிச்சயமாகவில்லை.

வீட்டுக்காரர் என்னை மாடிக்கு அழைத்துக் கொண்டு போனார். "ஒன்பது வருஷமாக இருந்து விட்டு ஏன் வீணாக முறைத்துக் கொண்டு போகிறீர்? பேசாமல் இங்கேயே இரும். நான் வேண்டிய சௌகரியம் செய்து தரேன்" என்றார். "அப்படியானால் இருக்கிறேன்" என்றேன்; "சரி; நாளைக்கு ஆபீசுக்கு வரேன். சம்பளம் வாங்கியதும் வாடகையைக் கொடுத்து விடும்" என்றார்.

சற்று நேரத்துக்கெல்லாம் வீட்டுக்காரர் வாசலில் போய் 'டு லெட்' போர்டைக் கழற்றிக் கொண்டு வந்தார்.

இப்படி அதே வீட்டில் இருப்பதாக நான் முடிவு செய்தவுடனேயே எனக்கும் ராமபத்திரய்யருக்கும் முன்பிருந்த சிநேகமே திரும்பி விட்டது!

அதாவது, நானும் அடிக்கடி வாசலில் போய் நிற்கிறேன்; ராமபத்திரய்யரும் வந்து நிற்கிறார். அவர் என்னுடன் பேசுவதில்லை; நான் அவருடன் பேசுவதில்லை. எங்களுக்குள் சண்டையும் இல்லை, என்னமோ பேசவில்லை; பேசக் காரணமும் இல்லை. அவர் வாழை இலை விலை பேசினால், அணாவுக்கு எத்தனை எங்கு வாங்கினீர்கள் என்று நான் கேட்பதில்லை. நான் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தால், "ஸ்டாலின்கிராட் என்ன ஆச்சு?” என்று அவரும் கேட்பதில்லை.

எங்களை மறுபடி பேச வைக்க எங்கள் வீடுகளில் ஒன்றில் 'டு லெட்' போர்டு தொங்கியாக வேண்டும்.

*****

## 48. அட நாராயணா!

காலையில் நான் பேப்பர் படிக்க உட்காருவதும், "ஸார்!” என்று கூப்பிட்டுக் கொண்டு அடுத்த வீட்டு நாராயணசாமி ஐயர் வருவதும் சரியாக இருக்கும். ஆசாமி வந்து விட்டால் நான் பேப்பர் படித்தாப் போலத்தான்! அவர் கையில் அதைக் கொடுத்து விட்டுச் 'சிவனே' என்று உட்கார்ந்து விட வேண்டியதுதான்! இதுதான் தொலையட்டும். இன்னும் கேளுங்கள்.

சாயந்திரம் ஆபீஸிலிருந்து வருகிறோமா? சற்று விச்ராந்தியாக சம்சாரத்தோடு பேசிக் காலங் கழிக்கலாமென்று ஆவல் இருக்குமா, இராதா? நமக்கு இல்லாவிட்டாலும் சம்சாரத்துக்காவது இருக்கும் அல்லவா? என் அகமுடையாளைப் பேரைச் சொல்லி நான் கூப்பிட வேண்டியதுதான். "ஸார்” என்று இந்த நாராயணசாமி ஐயர் என் அறைக்குள் நுழைந்து விடுவார். “சாயந்திரம் என்ன விசேஷம்?” என்பார்.

எனக்கு வயிற்றைப் பற்றிக் கொண்டு எரியும். “என்ன விசேஷம் வேண்டிக் கிடக்கிறது! நம்ம தலையில் தான் இன்னும் குண்டு விழவில்லை!” என்பேன்.

"ஒரு கொலையாவது நடக்கும்” என்று சொல்லி விட்டு அவர் மென்னியைப் பிடித்து அமுக்குவோமா என்று தோன்றும். நான் ஒன்றும் சொல்லாமல் இருக்கும் போதே, “என்ன நடந்தால் நாம் என்ன பண்ணப் போகிறோம்...? 'இன்றைக்கிருப்பாரை நாளைக்கிருப்பரென்று எண்ணவோ' என்று தாயுமான சுவாமிகள் தெரியாமலா பாடினார்?” என்பார்.

நான் அதற்கும் பதில் சொல்வதில்லை. சற்று நேரம் பேசாமல் இருந்தால் ஆசாமி ஒழிந்து விடுவார் என்று நினைத்துப் பல்லைக் கடித்துக் கொண்டிருப்பேன். அந்த விடாக்கண்டன் "ஏன் ஸார், நீங்க சர்க்கரை எங்கே வாங்குகிறேள்?” என்பார்.

“நான் சர்க்கரையே வாங்குவதில்லை” என்பேன் ஆத்திரத்துடன்.

“நம்மால் அப்படி இருக்க முடிகிறதில்லை, ஸார்! நம்ம பயல் இருக்கானே, கடைசிப் பயல், அவன் பாருங்கோ, காப்பியிலே துளி சர்க்கரை குறைந்தால்கூட துப்பி விடுகிறான் மூஞ்சியிலே!”

“நன்றாய் உம்ம மூஞ்சியிலே துப்பலாமே!” என்று நினைத்துக் கொள்வேன். அதைச் சொல்ல முடிகிறதா? ஆத்திரத்தை அடக்கிக்

கொண்டு பேசாமல் இருப்பேன்.

ராஜி காப்பியை வைத்துக் கொண்டு கதவு மறைவில் நின்று ஜாடை செய்வாள். "அவரைப் போகச் சொல்லுங்கள்" என்று இரகசியமாக அதட்டுவாள். "காப்பி ஆறுகிறதே!" என்று கையை ஆட்டுவாள்; தலையில் அடித்துக் கொள்வாள். நான் என்ன செய்வேன்? நாராயணசாமி ஐயரும் லகுவில் போக மாட்டார்; நானும் ஆறின காப்பியைத் தவிர சூடான காப்பியை சாப்பிட்டதில்லை.

அவர் போனவுடன் ஏதாவது படிக்கலாம் என்று புத்தகத்தை எடுத்துக் கொள்வேன். சொல்லி வைத்தாற் போல் அடுத்த வீட்டில் ஒரு 'காண்டாமிருகம்' கர்ஜிக்கும்; அதைப் பார்த்துக் கிட்டத்தட்ட அதே மாதிரி ஒரு 'பூனை' கத்திப் பார்க்கும். காண்டாமிருகம் என்பது கோபாலசாமி பாகவதர்; பூனை என்பது நாராயணசாமி ஐயருடைய பெண். பாகவதர் இந்தப் பெண்ணுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுக்கிறார்... தினமும் ஒன்றரை மணிநேரம் வனப் பிரதேசங்களில் கேட்கும் சப்தங்கள் தான் கேட்கும். நமக்குப் புத்தகத்தில் கவனம் எப்படிச் செல்லும்?

சாப்பாடாகி, பிறகு விச்ராந்தியாய்ப் பேசிக் கொண்டிருக்கலாம் என்றால், அதுவும் முடிகிறதில்லை. நாராயண சாமி ஐயரின் தாயார் வந்து விடுவாள். ராஜியுடன் அவர்கள் வீட்டுக் கதையை அளப்பாள். "மாட்டுப் பெண் மீனாட்சி எப்படித் தன் பிள்ளையைக் கையில் போட்டுக் கொண்டிருக்கிறாள். அவன் எப்படி அவள் சொல்கிறபடியெல்லாம் ஆடுகிறான்" என்று வர்ணிப்பாள். கடவுள் தன்னை இந்தப் பொல்லாத உலகத்தில் வைத்து, தன் கண்முன்னே தான் வளர்த்த பிள்ளை சொன்னபடி கேட்காமல் நேற்று வந்த ஒருத்தியிடம் இழுத்த படியெல்லாம் இழுபடுவதை அழுகையுடன் விவரிப்பாள். "ஒரு புடலங்காய்ப் பால் கூட்டு வேண்டுமென்றேனடி, ராஜி! ஒரு மாசமாச்சடி! ஓரணா செலவாகுமாடி? நான் ஒரு கிழவி கேட்கிறேன்; பண்ணிப் போட்டால் என்னடி?" என்பாள்.

ராஜி, "அதுக்கென்ன, பாட்டி, நீங்க வருத்தப்படாதங்கோ. நான் பண்ணிப் போடறேன், நீங்க மட்டுமா சாப்பிடப் போறேள்? எங்காத்துக்காரரண்டே சொல்லி..." என்பாள்.

நான் நகத்தைக் கடித்துக் கொள்வேன். மார்க்கெட்டில் புடலங்காய் இல்லாமல் போக வேண்டுமென்று மனதாரச் சபித்துக் கொள்வேன்.

"உனக்குப் பிள்ளைக் குழந்தையாகப் பிறக்க வேண்டு மடி, ராஜி!"

என்பாள் பாட்டி.

“அது வேறயா?” என்று நான் முணமுணப்பேன். பாட்டி வீட்டுக்குப் போவாள்.

ஞாயிற்றுக்கிழமை, அல்லது விடுமுறை தினங்களிலாவது தொந்தரையின்றி இருக்கலாம் என்று நான் மனதைத் தேற்றிக் கொள்வதுண்டு. ஆனால் வெகு சீக்கிரத்தில் அந்த ஆசையையும் கைவிட்டேன். ஞாயிற்றுக்கிழமைகளில் நாராயணசாமி அய்யருடைய அருமந்தப் புதல்வன் நம் வீட்டுக்கு விளையாட வருவான். என் மருமான் விச்சுவுடன் முதலில் விளையாட ஆரம்பித்துக் கடைசியில் குஸ்தியில் நிறுத்திக் கொள்வான்.

அவருடைய பெண் கரண்டி முட்டையையும், ஆழாக் கையும் எடுத்துக் கொண்டு, “நெய் இருக்குமா, மாமி? எங்கம்மா வாங்கிண்டு வரச் சொன்னாள்”, "காப்பிக் கொட்டை இருந்தால் பாட்டி வாங்கிண்டு வரச் சொன்னாள்” என்று நாற்பது தடவையாவது சாரி வைக்கும். பெண் வந்து விட்டுப் போன பிறகு பெண்ணுக்குத் தாயார் வருவாள்.

"வாருங்கோ மாமி; அவர் உள்ளே தான் இருக்கார்” என்பாள் ராஜி.

“நிற்க நேரமில்லை! அடுப்பிலே பருப்பைப் போட்டுட்டு வந்தேன். குழைஞ்சு போயிடும்” என்று அவள் உட்கார்ந்து கொள்வாள்.

“என்ன மாமி, வர போதெல்லாம் அவசரப்படறேளே! உங்கள் பெண் பார்த்துக் கொள்ள மாட்டாளா? மாமியார் தான் கவனிச்சுக்கப்படாதா?” என்பாள் பார்வை.

“அதைச் சொல்லு! ஆயிரம் தரம் சொல்லு! மாமியார் சுருக்கப் பார்த்துண்டுடுவார்...! அம்மா! அவர் ஒரு காரியமும் செய்ய வேண்டாம். என்னைத் தூற்றாமல் இருந்தால் போதும்” என்பாள்.

“உங்களை என்ன தூற்றக் கிடக்கிறது?” என்று கேட்டாள் ராஜி. என் சம்சாரத்தை நான் குற்றமற்றவள் என்று சொல்லவில்லை. இவள் யார் வீட்டிற்கும் பேசப் போவதில்லை; வாஸ்தவம். ஆனால் சகல வம்புகளையும் இங்கே வரவழைத்துப் பேசுகிறாள்.

அவள் சொல்லுவாள்: “என்னமோ போ! உசிரை எதுக்கு வச்சிண்டிருக்கோம்னு தோண்றது ஒரோரு சமயம். மாமியாரைத் தூற்றினேன்னு சொல்லாதே! ஆத்திலே ஆறு ஏழு பேர் இருக்கலாம். திடும்னு ஒரு கூட்டைப் பண்ணு 'கறியைப் பண்ணு'ன்னா முடிகிறதா சொல்லு நீதான்!”

“முடியாது, மாமி!” என்று ராஜி ஒத்துப் பாடுவாள்.

நான் என் மனைவியைக் கூப்பிடுவேன், அப்படிக் கூப்பிட்டாலாவது அவள் போவாளோவென்று. “போய் கேட்டுட்டு வா, ராஜி! நான் இருக்கேன்” என்பாள் அவள்.

இவ்வளவுதான் தொல்லைகள் என்று நினைத்துவிட வேண்டாம். நம் வீட்டில் ஒரு பட்சணம் செய்தால், அது நமக்குக் கிடைப்பது, அடுத்த வீட்டுக்குக் கொடுத்து மிஞ்சினால்தான். நம் வீட்டில் உடையாத இங்கிபாட்டில் கிடையாது. நாராயணசாமி அய்யர் 'கொடுக்கு’கள் கவனித்துக் கொள்ளும். பென்சில்கள், ரப்பர்கள் எல்லாம் மாயமாய் மறையும். நம் வீட்டு விச்சுப் பயல் புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டால், நாராயணசாமி அய்யர் பிள்ளையாண்டான் போட்டியாக இரைச்சல் போட்டுப் படிப்பான்; இல்லாவிட்டால் இவனை 'விசில்' அடித்து விளையாடக் கூப்பிடுவான்.

இப்பேர்ப்பட்ட நிர்ப்பந்தங்களுக்கிடையில், அந்த வீட்டில் இருப்பானேன் என்றால், இவ்வளவு சௌகரியங்களுடன் எனக்கு வேறு வீடு கிடைக்கவில்லை; வேறு பேட்டைக்கே போய் விடலாமென்றால் மருமானைப் பள்ளிக் கூடத்தில் சேர்த்திருந்தேன்; நாராயணசாமி அய்யராவது போவாரோ என்றால், அதுவும் நடப்பதாயில்லை. தவிர என்னிடம் அவர், “நீர் எங்கேயாவது வேறு ஜாகைக்குப் போனால், பக்கத்தில் நமக்கும் ஒரு ஜாகை பாரும்” என்றார்.

“அழகுதான்!” என்று நினைத்துக் கொண்டேன். நான் பதில் சொல்லவில்லை.

இந்த மாதிரியான சமயத்தில்தான் சென்னைப் பட்டணத்தில் அபாயச் சங்கு அலறியது. நான் அதை நாராயணசாமி ஐயருக்காக வரவேற்றேன் என்று ஒப்புக் கொள்கிறேன். அப்போது ஏற்பட்ட நெருக்கடியிலும் கலவரத்திலும் ஓட்டத்திலும் நான் நாராயணசாமி ஐயரைக் கவனிக்கவே இல்லை; நாராயணசாமி ஐயரும் என்னைக் கவனிக்கவில்லை. சென்னை வீட்டை அவசரமாகக் காலி செய்தேன்.

வேலூரில் வீடு பார்த்தேன். மிகுந்த பிரயாசையின் பேரில் ஒரு வீட்டில் ஒரு 'போர்ஷன்' கிடைத்தது. புது வீட்டுக்காரர் ரொம்ப நல்ல மாதிரி. எங்களை அன்புடன் அவர் வரவேற்றார். “உங்களைப் பற்றி 'நல்ல மாதிரி' என்று பட்டணத்திலேயே கேள்விப்பட்டிருக்கிறேன், கிருஷ்ணசாமி சாஸ்திரிகள் விவரமாகச் சொல்லியிருக்கிறார். உங்கள் வீடு போல் இதை நினைத்துக் கொள்ளுங்கள். கவலையை விட்டுத்

தள்ளுங்கள்!” என்றார் அவர்.

வாஸ்தவமாகவே நான் கவலையை விட்டேன். என் மனதில் குதூகலமே நிரம்பியிருந்தது, இந்த ஆனந்தக் கண்ணீருக்கு என்ன காரணம் என்று என் மனதைத் துழாவிப் பார்த்தேன். 'நாராயணசாமி ஐயர் தொல்லை விட்டது!' என்பது தான் அது என்று அறிந்தேன். நல்ல வேளையாக அவரிடம் சொல்லாமலேயே வந்து விட்டேன். சொல்லியிருந்தால், தமக்குப் பக்கத்தில் ஒரு வீடு பார்க்கும்படி வற்புறுத்தியிருப்பார், சந்தேகமில்லை!

வேலூரைப் பற்றி விசாரித்தேன். திவ்யமான ஊர்; வேலூர்க் கத்திரிக்காய் மாகாணப் பிரசித்தி பெற்றதாம். வேலூரில் அரிநெல்லிக்காய் மிக மலிவாம். முல்லைப் பூ இனாமாகக் கூடக் கிடைக்குமாம். "இப்போது, பட்டணத்துக் குடும்பங்கள்தான் இந்த ஊரில் அதிகமாகி விட்டன. அவர்களால் தான் விலைவாசிகள் கூடச் சற்று உயர்வு” என்றார் வீட்டுக்காரர்.

“சரிதான்” என்றேன்.

"இந்தத் தெருவிலேயே சுமார் ஆறு குடும்பங்கள் பட்டணத்திலிருந்து வந்திருக்கின்றன.”!

“அப்படியா?” என்றேன்.

"இந்த அடுத்த வீட்டில் கூட ஒருவர் இன்று காலையில்தான் வந்தார். உங்களுக்கு ஒரு வேளை அவரைத் தெரிந்திருக்கலாம்” என்றார்.

“எனக்குப் பட்டணத்தில் அதிக பேரைத் தெரியாது” என்றேன்.

பேசி முடித்திருப்பேன். தெரு வழியே நாராயணசாமி ஐயர் போனார்! சாட்சாத் நாராயணசாமி ஐயர்தான்! என்னைப் பார்த்ததும் அவர் பிரமித்து நின்று விட்டார்.

“இங்கே எங்கேங்காணும் வந்தீர்?” என்று கேட்டார்.

“இந்த ஊரில் இந்த வீட்டில்தான் ஜாகை!” என்றேன்.

"ரொம்ப பேஷாப் போச்சு!” என்றார். “நானும் இந்தத் தெருவில்தான் இருக்கிறேன். பதிமூணாம் நம்பர்!” என்றார்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. "என் வீடு பன்னிரண்டாம் நம்பர்!”

நான் பதில் சொல்லவில்லை.

*****

## 49. பிழைக்கும் வழி

அரக்கோணம் ஸ்டேஷனை விட்டு ரயில் வண்டி கிளம்புவதற்குச் சற்று முன்னதாகத்தான் அந்தப் பேச்சுக்கார ஆசாமி எழுந்து, படாரென்று கதவைச் சார்த்திக் கொண்டு கீழே இறங்கிப் போனான், அந்தப் பெட்டிக்குள் மிகுதி இருந்தவர்கள் இரண்டு பேர்தான். ஒருவர் ஸ்டேஷனுக்கு வெளியே ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தார். மற்றவர் - ஒரு கச்சல் பேர்வழி - தாராளமாக நகர்ந்து உட்கார்ந்து கொண்டு, “அப்பாடா!” என்று பெருமூச்சு விட்டார்.

ஜன்னலுக்கு வெளியே பார்த்துக் கொண்டிருந்தவர், தாம் கண்ட காட்சியிலேயே லயித்துப் போயிருந்தார். அவருடைய கவனத்தைத் திருப்பும் நோக்கத்துடன் கச்சல் பேர் வழி கனைத்து விட்டு சம்பாஷணையைத் தொடங்கினார்.

“பார்த்தீர்களா! இப்பொழுது எழுந்திருந்து போனானே! என்ன பேச்சு! சாவி கொடுத்தாப் போல், ஓய்ச்சல் ஒழிவில்லாமல் அல்லவா பேசுகிறான்? அவன் பேசும் போது எனக்கு என்ன கோபம் வந்ததென்கிறீர்கள்? அடக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தேன்.”

ஜன்னல் வெளியே பார்த்துக் கொண்டிருந்தவர் திரும்பி உட்கார்ந்து கொண்டு, கவனித்தார். ஆனால் ஒரு வார்த்தை கூட பதில் சொல்லவில்லை! உதடு அசைக்கவில்லை.

கச்சல் பேர்வழி தொடர்ந்து சொல்லிக் கொண்டு போனான். “பாருங்கள்! ஒரு சமயம் இந்த மாதிரி பேச்சுக்காரன் ஒருவனால் நான் போலீஸ் கோர்ட்டு வரையில் போகும்படி நேர்ந்து விட்டது. அதனால் நானூறு ரூபாய் வரை கை நஷ்டமாகி விட்டது. அது ஒரு பெரிய கதை.”

கேட்பவர் கூர்ந்து கவனிப்பதாகத் தோன்றவே கச்சல் பேர்வழி நிற்காமல் சொல்லத் தொடங்கினான்: “காட்பாடியில் ராத்திரி ஒன்றே முக்காலுக்குப் பாசஞ்சர் வருகிறது. பாருங்கள், அதில் தான் நான் ஏறினேன். பகல் பூராவும் ஓய்ச்சல் ஒழிவில்லாமல் வேலை. உடம்பில் அசதி சொல்ல முடியாது. கண்ணை மூடினால் தூங்கி விடுவேன், என்னையும் அறியாமல். அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் ஒரு ஆசாமி வந்து சேர்ந்தான்.

"ரயில் கிளம்பிற்று, ஸார்! அவனும் பேச ஆரம்பித்தான், ஸார்!

"நான் கவனிக்காதது போலே வண்டியிலே சாய்ந்து கொண்டேன்; கண்களையும் மூடிக் கொண்டேன். ஆனால் அவன் தூங்க விட்டால்தானே? போன ஜன்மத்திலே அவன் அலாரம் கெடியாரமாக

இருந்திருக்கணும்; சந்தேகமில்லை! இல்லாவிட்டால், அவன் தொண்டையிலே கிராமபோன் பிளேட்டை வைத்துக் கடவுள் சிருஷ்டி பண்ணியிருக்கணும்.”

“நானும் எவ்வளவோ தந்திரம் செய்து பார்த்தேன். திரும்பிப் படுத்துக் கொண்டேன்; குறட்டை விட்டுக் காண்பித்தேன். காலை நீட்டி, தூக்கக் கலக்கத்தில் உதைக்கிறாப் போல் ஒரு உதையும் விட்டேன். சொப்பனத்தில் வைகிறாப் பலே நாலு வார்த்தை வைதும் பார்த்தேன். ஊஹும்.”

“அவன் பாட்டுக்குப் பேசிக் கொண்டே போனான். கோடைக்கானலுக்கு அவன் சம்சாரத்துடன் போனது, அங்கே மலையேறி இரண்டு பேரும் சறுக்கி விழுந்தது, அவன் சம்சாரம் இடி இடியென்று சிரித்தது, எல்லாம் சொன்னான். அப்புறம் சித்தூரில் முலாம் பழம் மலிவாக வாங்கி அவன் குழந்தைகளுக்குக் கொடுத்ததை வர்ணித்தான். பட்டணத்தில் ஹோட்டல்கள் இல்லாமல் தானே சமைக்க ஆரம்பித்து, சமையற்கட்டில் நெருப்புப் பிடித்துக் கொண்ட விதரணையைச் சொல்லிச் சொல்லிச் சிரித்தான். அவர்கள் வீட்டு நாய்க்குட்டியின் அறிவை இரண்டொரு உதாரணங்களுடன் எடுத்துக் காட்டினான்.”

“அவன் பேசித் தீர வேண்டும், இல்லாவிட்டால் அவன் மண்டை வெடித்து விடும் என்றே தோன்றிற்று.”

"பேச வேற விஷயம் இல்லாத போது, அவன் மனைவி பிறந்தகத்திலிருந்து எழுதியிருந்த ஒரு கடிதத்தைப் பையில் இருந்து உருவி, எனக்குப் படித்துக் காட்ட ஆரம்பித்து விட்டான். அதுவரை பொறுத்துக் கொண்டிருந்த எனக்கு அதற்கு மேல் தாங்க முடியவில்லை. காலைச் சுருட்டிக் கொண்டு எழுந்தேன். அவன் கன்னத்தில் பளார் பளார் என்று அறைந்தேன். 'கும்' 'கும்'மென்று முதுகிலும் கழுத்திலும் ஒரு டஜன் குத்து விட்டேன். இடுப்புக்குக் கீழே இரண்டு உதையும் கொடுத்து, அலக்காக இரண்டு கையாலும் தூக்கி ரயிலுக்கு வெளியே எறிந்து விட்டேன். அவன் அதிர்ஷ்ட காலம் ரயில் அப்போது மின்னல் ஸ்டேஷனில் நின்று கொண்டிருந்தது. இல்லாவிட்டால் விபரீதமாகியிருக்கும்.

“அதற்காகத்தான் நான் போலீஸ் கோர்ட்டுக்குப் போகும் படியாச்சு! கைச்செலவு நானூறு ரூபாய் வரை பிடித்தது...”

கச்சல் பேர்வழி தன் கதையை முடித்து, அதனால் கதை கேட்பவரின் முகபாவங்களில் என்னென்ன மாறுதல்கள் ஏற்பட்டனவென்று

கவனித்துப் பார்த்தான். ஒரு புன்னகையின் சாயை தெரிந்தாற் போல் தோன்றியதே தவிர அந்த உதடுகள் அசையவே இல்லை.

“பார்த்தீர்களா? வெளியில் கிளம்புவதென்றால் எத்தனையோ ஆபத்துக்கள் இருக்கின்றன. நான் இம்மாதிரி பேச்சுக்காரனால் நானூறு ரூபாய் செலவழிக்க வேண்டியிருந்தது. இதைப் போல் நஷ்டப்படாமல் இருப்பதற்கு நாங்கள் ஒரு யுக்தி செய்திருக்கிறோம். இவைகளைப் பாருங்கள்” என்று ஒரு தோல் பெட்டியைத் திறந்து 'கார்க்' போன்ற இரண்டு சிறு மூடிகளை எடுத்தான். “இவைகளைக் காதில் வைத்துக் கொண்டு விட்டால், யார் எவ்வளவு உரக்கப் பேசினாலும் காதில் விழாது. நாம் மாட்டில் பத்திரிகையைப் படித்துக் கொண்டோ, தூங்கிக் கொண்டோ நிம்மதியாக - ஒரு தொந்தரவும் இல்லாமல் இருக்கலாம். யுத்த காலமாதலால், குண்டு விழுந்தால் கூடக் காது செவிடாகாது. நீங்கள் எடுத்துக் கொள்கிறீர்களா?”

இவ்வளவு நேரமாக ஒரு வார்த்தைகூடப் பேசாமல் சமாளித்துக் கொண்டு வந்த மற்றவருக்கு இப்போது ஏதேனும் பேசியேயாக வேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விட்டது. அவர் வாயைத் திறக்காமல், சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து ஏதோ எழுதி அவனிடம் நீட்டினார். அதைப் படித்த கச்சல் பேர்வழிக்குத் தூக்கி வாரிப் போட்டது. மறு விநாடி வண்டியின் மூலையில் போய்த் தலையைக் கவிழ்த்துக் கொண்டு வாய் மூடி மௌனியாக உட்கார்ந்து விட்டான்! அந்த ஜாலத்தைச் செய்த செய்தி என்னவென்றால், இதுதான்:

“நான் துரதிருஷ்ட வசமாகப் பிறவிச் செவிடு. ஊமையுங்கூட. தயவு செய்து மன்னிக்கவும்.”

காட்பாடி ஸ்டேஷன் வந்ததும் கச்சல் பேர்வழி அவசரமாக எழுந்து வெளியேறும் போது வேறொருவர் அதே வண்டிக்குள் ஏறினார். ஜன்னல் ஓரமாக உட்கார்ந்திருந்தவரைக் கண்டவுடனேயே அடையாளம் புரிந்து கொண்டு, “அடே! பங்களூருக்காடா போறே? ஆத்திலே ருக்குமணி, கமலா, பட்டு எல்லாரும் சௌக்யந்தானே?” என்று கேட்டார்.

"எல்லாம் சௌக்யம்!” என்று கணீரென்று பதில் கொடுத்தார் ஜன்னல் பேர்வழி.

கச்சல் ஆசாமி இதைக் கேட்டுக் கொண்டே இன்னும் வேகமாக வெளியேறினான்!

*****

## 50. எல்லாம் தெரிந்தவர்!

சுந்தரேசன் மவுண்ட் ரோடு கம்பெனி ஒன்றில் குமாஸ்தாவாக இருந்தான். மாசம் எழுபத்தைந்து ரூபாய் சம்பளம். கல்யாணம் ஆகவில்லை. சொந்த மாமாவே தன் பெண் கல்பகத்தைக் கட்டிக் கொடுக்க வேண்டுமென்று காத்துக் கொண்டிருந்தார். சுந்தரேசன் ராயப்பேட்டையில் 'ரூம்' வைத்துக் கொண்டு ஞாயிற்றுக் கிழமையன்று மட்டும் சிந்தாரிப் பேட்டையிலிருந்த மாமா வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தான். அப்போதெல்லாம் கல்பகம் காப்பி. கொடுப்பதும், அதை வாங்கி அம்ருதமெனச் சுந்தரேசன் அருந்துவதும், அவள் எழிலைக் கண் இமைக்காது பருகுவதும் வழக்கம். கல்பகத்துடன் கால்மணி நிம்மதியாகப் பேச கல்பகோடீ காலம் தபஸ் பண்ணினாலும் தகாதா? - என்பது அவன் எண்ணம்.

ஒரு நாள் சுந்தரேசன் ஒரு சிறு பேப்பர் கட்டுடன் மாமா வீட்டுக்கு வந்தான். பேப்பர் கட்டைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு, கல்பகத்துடன் பேசும் போதெல்லாம், அதை அருமையாகத் தடவிக் கொடுப்பதும், தானே புன்சிரிப்புச் சிரித்துக் கொள்வதுமாக இருப்பதைக் கல்பகம் கவனித்து விட்டாள். "ஓ! அதென்ன! நான் பார்க்கக் கூடாதோ அத்தான்?” என்று கேட்டாள், முகத்தை ஆட்டிக் கொண்டு.

அழகிய லோலாக்குகள் ஆடி நிற்கும் வரை அதையே கவனித்துக் கொண்டிருந்து விட்டு சுந்தரேசன், "இது ஒரு கதை! நான் எழுதிய கதை” என்றான்.

“என்ன சொன்னேள்? கதையா?” என்றாள் கல்பகம்.

காகித வியாபாரம் செய்யும் கம்பெனியில் குமாஸ்தாவான சுந்தரம், காகிதத்திலும் எழுதுவான் என்று அவளால் நம்ப முடியவில்லை.

“என்னடி அப்படி முழிக்கிறே, நீ...? நான் மூணு மாசமாகக் கதை ஒண்ணு எழுதறேன். உனக்குத் தெரியாது... கடைசியில் சொல்லலாமென்று இருந்தேன்...”

“ஓ! நான் படிக்கலாமோ!”

“பொறு, பெண்ணே பொறு! அச்சானவுடன் முதல் பிரதி உன் கையில் சமர்ப்பணம் செய்யப்படும்” என்றான் புன்னகையுடன்.

மலர்ந்த தன் முகத்தில் பாதியைப் புடவைத் தலைப்பால் மறைத்துக் கொண்டாள் கல்பகம். பூர்ண சந்திரனைக் கந்தல் முகில் ஒன்று மறைக்க முயன்ற உவமை தோன்றியது சுந்தரேசன் மனத்திலே. "எதைப் பார்த்து

இதை எழுதினேள்?” என்றாள் கல்பகம்.

“ஹு! நான் எதற்காக ஒன்றைப் பார்த்து எழுத வேண்டும்? எனக்காக - சுயமாக - எழுத மூளை இல்லை என்று நினைத்து விட்டாயா? பேசத் தெரியாத பயல்கள் எல்லாம் கதை எழுதறான்கள்; எனக்கா எழுத வராது?”

"ஓ!” என்றாள் கல்பகம்.

“இதற்கு மட்டும் ஆயிரத்தைந்நூறு ரூபாய் வருகிறது, பார்த்துக் கொண்டே இரு! அப்போ...”

“அப்போ என்ன?" என்றாள்.

“உன் காதில் வைரக் கம்மல் ஆடும்!” என்று லேசாக அவள் கன்னத்தில் அன்புத் தட்டல் ஒன்று தட்டி விட்டுக் கிளம்பினான்.

சுந்தரேசனுக்கு இத்தனை மனோ திடமும் உற்சாகமும் நம்பிக்கையும் உண்டாக்கினவர் திருவல்லிக்கேணியில் ருத்ரதாஸ் என்பவர். ருத்ரதாஸ் சென்னைப் பட்டணத்தில் பீச்சுக்குப் போகிறவர்கள் அத்தனை பேருக்கும் அறிமுகமானவர்; 'இளம் எழுத்தாளர்களை முன்னுக்குக் கொண்டு வருவது ஒன்றே தான் பணி' என்று அவர் அடிக்கடி ஆவேசமாகச் சொல்லுவார்.

"ருத்ரதாஸ் பிரசுரங்கள்” என்று ஏற்கெனவே பன்னிரண்டு புத்தகங்கள் வெளியாகி, நன்றாகவும் விற்பனை ஆகியிருப்பது யாவருக்கும் தெரிந்த விஷயமேயாகையால், அவர் பேசும் போது உற்சாகம் அடையாத இளைஞர் இல்லை. முக்கியமாக, சுந்தரேசன் அதிக உற்சாகம் அடைந்ததற்குக் காரணம் ராயப்பேட்டையில் அவன் அறைக்குப் பக்கத்து அறையில் இருந்த ஒரு பத்திரிகையின் உதவி ஆசிரியர் தான். அவரைக் கண்டாலே சுந்தரேசனுக்கு அலட்சியம் தான். "இந்த வற்றின உடம்பையும் பித்துக்குளி முழியையும் வைத்துக் கொண்டு இவன் ஊருக்கு, உலகத்துக்கு எழுதுகிறதாமே!” என்று ஏசியிருக்கிறான். ருத்ரதாஸ் பேசும் போது, "அவனே எழுதுகிற போது, நாமும் ஏன் கூடாது!” என்று நினைத்தான். அதன் பிரகாரம் நாலு மாசம் முனைந்தான். அந்த முயற்சியில் ஜனனம் எடுத்த நவீனம்தான் இது!

சுந்தரேசன் கதையை எடுத்துக் கொண்டு ருத்ரதாஸை ஆபீஸில் போய்ப் பார்த்தான். முதல் சில விநாடிகளுக்கு அவனுக்கு ஏமாற்றமே ஏற்பட்டது. ஏனென்றால், கடற்கரையில் சட்டையைக் கழட்டி விட்டு, கலகலப்பாகப் பேசும் ருத்ரதாஸுக்கும், இப்போது மேஜை முன் உட்கார்ந்து வெகு நிதானமாகப் புருவத்தை உயர்த்தும் ஆசாமிக்கும் அதிக வித்தியாசம்

தென்பட்டது அவனுக்கு.

“நீங்கள் யார்? என்ன வேண்டும்?” என்று கேட்டார். அவர்.

விஷயத்தை ரத்ன சுருக்கமாகச் சொன்னான் அவன். “நீங்கள்தான் இந்த நவீனத்தின் காரணம் என்றால் மிகையாகாது. ஆகையால், முதலில் உங்களிடமே இதைக் கொண்டு வந்தேன்!” என்றான்.

"ஓ! அப்படியானால் அதை இப்படி வைத்து விட்டுப் போங்கள்... உங்கள் முழு விலாசம் எழுதி வைத்திருக்கிறீர்கள் அல்லவா?”

சொரேர் என்றது அவனுக்கு. கதையைத் திருப்பி அனுப்பத்தான் இவர் கேட்கிறாரோ என்று சற்றுக் கலங்கி விட்டு, பிறகு விலாசத்தையும் எழுதி வைத்து விட்டுப் போனான் சுந்தரேசன்.

இதற்கு மூன்று நாட்களுக்குப் பிறகு அவனுக்கு ஒரு கார்டு வந்தது. சுந்தரேசன் அதில் இருந்த பின்வரும் இரண்டு வரிகளை இருபதாயிரம் தடவை படித்தான்.

“என்னை வந்து ஆபீஸில் சந்திக்கவும் - ருத்ரதாஸ்.”

சுந்தரேசன் அடிக்கடி அறையில் துள்ளித் துள்ளிக் குதிக்கும் சப்தத்தைக் கேட்டு, வகை புரியாமல் பக்கத்தறை உதவி ஆசிரியர் பலமுறை முகத்தைக் கடுகடுத்துக் கொண்டார். சுந்தரேசன் தன் அறையைப் பூட்டிக் கொண்டு சீட்டி அடித்துக் கொண்டே குஷியாக வெளியே கிளம்பினான்.

“ஹல்லோ! மிஸ்டர் சுந்தரேசன்! வாருங்கள்!” என்று அழைத்தார் ருத்ரதாஸ், ஒரு ஜாலப் புன்னகையுடன். “உங்கள் கதையைப் படித்து விட்டேன்” என்றார்.

சுந்தரேசன் ஆவலுடன், மௌனமாக, மேற்கொண்டு என்ன முத்து உதிருமென்று காத்திருந்தான்.

“நானே போடப் போகிறேன், அதை! ஆமாம்! என் அடுத்த பிரசுரம் உங்களுடையதுதான்! நான் போட்டால் எப்படி இருக்கும் தெரியுமோ இல்லையோ? பெரிசாக இருக்கும்!”

"எனக்குத் தெரியுமே!” என்றான் சுந்தரேசன் பரவசமாக.

“இப்பவே சொல்லி விடுகிறேன். நான் எதிலும் 'பிஸினஸ் - லைக்'காக இருக்கப் பட்டவன். உங்கள் கதையை அப்படியே நான் போட்டால் எடுபடாது. கிணத்திலே போட்ட கல்லு மாதிரி அமுங்கும். இங்கே அங்கே மெருகு கொடுக்கணும்; சில இடங்களைச் சீவி எறியணும். சில

இடங்களை நிமிர்த்தி வளைக்கணும்... ஆக, அதில் எனக்கு ரொம்ப வேலை இருக்கு!”

“ஓ!”

“அதனாலே, கதையை என்கிட்ட ஒப்பிச்சுட்டு, நான் சொல்றபடி நீங்கள் கேட்கணும். அவ்வளவுதான். அதை முன்னுக்குக் கொண்டு வந்து, சரியானபடி பரப்பி, உங்களுக்குப் பேர் வாங்கி வைக்க வேண்டியது இனி என் பொறுப்பு.”

எங்கே 'வேண்டாம்' என்று சொல்லிவிடப் போகிறாரோ என்று திகிலுடன் இருந்த சுந்தரேசனுக்கு இது பெரிய ஆறுதல் அளித்தது. “நன்றாயிருக்கு... உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள். நல்லதைத்தான் நீங்கள் செய்வேள்! அதுக்காகத் தானே உங்கள்கிட்ட நான் கொடுக்கிறேன்?”

“எனக்கு எல்லாம் தெரியும், ஸார்! தெரியாமலா இந்த ஆபீசைத் திறந்து வைச்சுண்டு இவ்வளவு பேரை மானேஜ் செய்யறேன்? நான் மனசு வைச்சால், அடுத்த வருஷம் நீர் நம்ம ஆபீசுக்கு நடந்து வரமாட்டேள்... காரிலே வருவேள்!”

புன்சிரிப்பு பெரும் சிரிப்பாகப் பிறந்தது சுந்தரேசனுக்கு. காரில் வரும் ஜோரில், மாமாவும் கல்பகமும் கூட உடனே மதிப்புக் குறைவாகத் தென்பட்டார்கள்.

“அதுதான் சொல்கிறேன்: பூரா பூராவும் என் கையில் விட்டுவிட வேண்டும். நடுவில் நீர் பேசவே கூடாது!” என்றார் ருத்ரதாஸ்.

"நன்றாயிருக்கிறது! வாயைத் திறப்பேனா?”

"இன்னொன்று பார்! இதோ இருக்கும் புத்தகம் உன் முதல் புத்தகம். இதில் நீ சம்பாதிக்கும் பேரே, பின்னால் வரும் உன் கதைகளுக்குத் தலையெழுத்து - தெரிந்ததா!”

“அதுதான் சரி என்று விட்டேனே, ஸார்!”

“எனக்கு எல்லாம் தெரியும்! நல்ல விமர்சனம் வாங்குகிறதே ஒரு பெரிய காரியம். பெரிய கைகள் எழுதியிருந்தால், அதில் இருக்கும் ஆயிரம் குறைகளை விட்டு நல்லதை மட்டும் எழுதுகிறார்கள்; உன் மாதிரி புது ஆட்கள் என்றால், குறைகளை மட்டும் பார்த்துக் குறிப்பிடுவார்கள். என் ஆதரவில் நீ வந்தாயோ ஒரு பயமில்லை; ஒருத்தர் லட்சியமில்லை...”

“சரி, ஸார்!”

“நீ என்னை வந்து அடிக்கடி பார்க்கணும்... என்ன?”

“ரைட் ஸார்!”

இதற்குப் பிறகு மூன்று மாதங்கள் எப்படிப் போயின என்று சுந்தரேசனுக்குத் தெரியாது. ஆபீஸ் விட்டவுடனே நேரே ருத்ரதாஸிடம் சென்றான்; ஞாயிற்றுக்கிழமை பூராவும் அவருடன் சுற்றினான். அவரும் போகிற இடங்களிலெல்லாம் அவனை அறிமுகம் செய்து வைத்தார்.

இப்போது விடுமுறை நாட்களில் மாமா வீட்டை நிறுத்தினான் சுந்தரேசன். ஒரு முறை மாமாவைக் கண்டு அவரும் ஆனி வருகிறதே என்ற போது, “ஆகட்டும்; என்ன அவசரம்?” என்றான். ஆபீசில் தினம் ஒரு மணி இரண்டு மணி அதிக நேரம் இருந்து வேலை செய்வான்; அதனால் மறு நாள் வேலை சுலபமாக இருப்பதுண்டு. இப்போதெல்லாம் அங்கேயும் நெருக்கடியாயிற்று; சிற்சில பிசகுகள் செய்து, மானேஜர் அதிருப்திக்கு ஆளாகத் தொடங்கினான்.

இடையில் ருத்ரதாஸ் சுந்தரேசனின் 'கலைக் கோவில்' என்ற கதையைத் திருத்தி அமைக்க ஆரம்பித்து விட்டார். முதலில் தலைப்பை மாற்ற வேண்டுமென்று அவர் அபிப் பிராயப்பட்டார். “என்ன கலை! என்ன கோவில்! நன்னாவேயில்லை, எடுபடாது, தம்பி! எனக்கு எல்லாம் தெரியும். 'கோடைப் பந்தல்' என்று போடு, ஜிலு ஜிலுன்னு இருக்கும்!” என்றார்.

சுந்தரேசன் பதில் பேசுமுன்பே, “எனக்கு எல்லாம் தெரியும்” என்று சொல்லிக் கொண்டே, சிவப்பு இங்கியால் பழைய தலைப்பை அடித்துப் புதிதைப் போட்டு விட்டார்! தாம் திருத்தின படியே முதல் மூன்று அத்தியாயங்களையும் படித்துக் காட்டினார். அத்தியாயம் ஒன்றுக்குப் பத்துப் பன்னிரண்டு வாக்கியங்கள் தான் எழுதினதாக இருப்பதை உணர்ந்து ஆச்சரியப்பட்டான் சுந்தரேசன்.

ஏதோ மறுத்துச் சொல்ல வாயெடுத்தான் சுந்தரேசன். “என் சிரமத்தைப் பற்றி நீ யோசிக்காதே. புத்தகம் ஷோக்காக அமையணுமென்றால், அதைப் பார்க்க முடியுமா?” என்றார் ருத்ரதாஸ்.

இப்படியாக நாட்கள் ஓடின. அத்தியாயம் அத்தியாயமாக ருத்ரதாஸ் மாற்றினார், திருத்தினார். “பார், நான் சிரமப்படுகிறேன்; நீ பேரையெல்லாம் அடித்துக் கொண்டு போகப் போகிறாய்... ஆனாலும் பார்! எனக்குச் சந்தோஷம்தான்! உன் மாதிரி ஆசாமிகளை முன்னுக்குக் கொண்டு வருகிறது. தான் என் வேலை” என்றார்.

புத்தகம் கடைசியில் அச்சாயிற்று. அடுத்த ஞாயிற்றுக் கிழமை முதலே

பெரிய பத்திரிகையில் 'கோடைப் பந்தல்' விமர்சனத்தைப் படித்துத் துணுக்குற்றான் சுந்தரேசன்: "ருத்ரதாஸ் பிரசுரம் ஒன்று வரப் பெற்றோம். இத்தனை மோசமான கதையை வெளியிடவும் ஒரு தனித் துணிச்சல் வேண்டும்! நடக்க முடியாத சம்பவங்களைப் படிக்க முடியாத மொழியில் எழுதியிருக்கும் இந்தக் கதையின் ஆசிரியரைப் பற்றி நாம் கேள்விப்பட்டதே இல்லை. எனினும் நிதான புத்தியுடன் இதை அவரால் சிருஷ்டித்திருக்க முடியாது என்று ஊகிக்கிறோம்!”

அடுத்து வந்த தினங்களில் பதினாறு விமர்சனங்களைப் பார்த்த அவன், “பத்திரிகைகாரர்கள் ஒத்துப் பேசிக் கொள்ளுகிறார்களோ?” என்று கூட நினைத்து விட்டான்.

ருத்ரதாஸே சுந்தரேசனைப் பார்க்க வந்தார். “ஒன்றும் யோசனை செய்யாதே! எனக்கு எல்லாம் தெரியும்! இந்த விமர்சனங்களைப் பார்த்து யார் கலங்கப் போகிறார்கள்!” என்றார். ஆனால், மாசம் மூன்று ஆகியும் மூன்றே புத்தகங்கள்தான் விற்றிருப்பதாக ருத்ரதாஸ் இரண்டேகால் ரூபாயை அவனுக்கு அனுப்பினார்! சுந்தரேசனுக்கு இன்னுமிரு பேரிடிகள் காத்துக் கொண்டிருந்தன. அவன் ஆபீஸில் அவனுக்குக் கீழே இருந்தவரை மேலே தூக்கிப் போட ஏற்பாடு நடந்தது; கல்பகத்துக்கு மாமா வேறு வரன் பார்த்துக் கொண்டிருந்தார்!

தலையில் கை வைத்துக் கொண்டிருந்தான் சுந்தரேசன். அவன் மனம் எண்ணாததெல்லாம் எண்ணித் தவித்தது. என்ன ஏமாற்றம்! எல்லாம் தெரிந்த ‘ருத்ரதாஸ்’ எத்தனை பெரிய தோல்வி அடைந்தார்!

“ஸார்!” என்று குரல் கேட்டு நிமிர்ந்தான்.

"யாரது நீங்கள்?”

“உங்களைத்தான் பார்க்க வந்தேன்” என்றார் வந்தவர்.

“என்ன விஷயம்?”

“உங்கள் 'கோடைப் பந்த'லை நான் நேற்று படித்தேன். அதை ஒரு நாடகமாக்கலாமென்று நினைக்கிறேன்.”

“சரி?”

“சம்மதம் தெரிவித்தால், இப்பவே ஒரு 'காண்ட்ராக்ட்' பேசி விடலாம். நாடகம் ஒன்றுக்கு இத்தனை ரூபாய் என்று பேசலாமா? அல்லது, மொத்தமாகவே வாங்கிக் கொள்வீர்களா?”

“மொத்தமாக எத்தனை கொடுப்பீர்கள்?”

"முந்நூறு ரூபாய் தருவேன்!”

“சரி... எனக்குச் சம்மதம்" என்றான் சுந்தரேசன் அவசரமாக.

"ஆனால், ஒன்று; இப்போதே சொல்லுகிறேன். கதையை அப்படியே நாடகமாக்கினால் எடுபடாது; இரண்டு நாள்கூட நடக்காது. நான் அதை மாற்றியாக வேண்டும். சம்மதம் தானே?”

நிமிர்ந்தான் சுந்தரேசன். “எப்படி வேண்டுமானாலும் அதை நீங்கள் மாற்றிக் கொள்ளுங்கள். உடனே மாறக்கூடிய ‘செக்'காகப் பணத்தைக் கொடுங்கள். அந்த ருத்ரதாஸிடம் மட்டும், 'உமக்கு ஒன்றும் தெரியாது' என்று சொன்னால் நான் என் நெஞ்சு ஆறும்” என்றான்.

அன்று மத்தியானமே மாமாவின் வீட்டுப் பக்கம் போய் கல்பகத்தைக் கூப்பிட்டான். மாடியில் 'கோடைப் பந்தல்' வாசித்துக் கொண்டிருந்தாள் அவள். "அத்தான்! இதில் என்ன கிடைத்தது, அத்தான்?” என்று கேட்டாள் கண்களை மலர விழித்து.

"முந்நூறு ரூபாய் கிடைத்தது. நல்ல புத்தியும் கிடைத்தது. நீ கைவிட்டுப் போவதற்குள் ஓடி வந்தேன்” என்றான்.

*****

## 51. அக்னிப் பரீட்சை

"டேய்!" என்று அதிகாரத்துவனி கேட்டுத் திடுக்கிட்டான் பாலசுந்தரம். அங்கே ஒவ்வொருவர் குரலும் அவன் இருதயத்தில் ஒரு பயத்தையே உண்டாக்கியது.

பம்பாயில் அந்தப் பெரிய ஹோட்டலில் 'ஸெர்வர்' வேலை சம்பாதித்துக் கொண்ட அன்று, தனக்கு இனி கவலையே இல்லை என்று கனவு கண்டான் அவன். ஒரு மாசம் வேலை செய்வதற்குள்ளாகவே, அது போதும் போதுமென்றாகி விட்டது அவனுக்கு. "சீ! இதென்ன பிழைப்பு!" என்று நினைக்கும் நிலைக்கு வந்து விட்டான். இதுவரை அவன் ஒன்பது ஹோட்டல்கள் பார்த்து விட்டான். ஒவ்வொன்றும் அவனுக்கு ஒரு நரகமாகவே தோன்றியிருக்கின்றன.

"டேய்! இங்கே வரியா என்ன?" என்றது குரல். மாடியில் அறை வைத்துக் கொண்டிருந்த கிழவர் ஒருவர் அவனைக் கூப்பிட்டுக் கொண்டிருந்தார். மகா சண்டிக் கிழவர் அவர். பாலசுந்தரம் போய் எதிரில் நின்றான் மரியாதையாக.

"இதென்ன; காப்பி என்று கொண்டு வந்து வைத்திருக்கிறாயா? ஹூம்?"

"நீங்கள் அது தானே கேட்டீர்கள்?" என்றான் பாலசுந்தரம்.

"நீயே வைத்துக் கொள்!" என்றார் அவர். என்ன செய்யப் போகிறார் என்று எதிர்பார்க்கும் முன்பு அத்தனை காப்பியையும் எடுத்து அவன் மீது வீசிவிட்டார் அவர்! அத்தனைத் துர்க்குணம் அவருக்கு.

உடம்பெல்லாம் சூடான காப்பி வழிய அதே கோலத்துடன் பாலசுந்தரம் மானேஜரிடம் போய் நின்றான். அவர் பார்த்து விட்டுச் சிரித்தார்; "உன் மேலே பிசகு... நீ நகர்ந்து கொண்டிருக்க வேண்டும்!" என்றார் அவர்.

"ஸார்? அந்தக் கிழவன் செய்தது நியாயமா ஸார்? அவன் வழுக்கை மண்டையை 'டணார்' என்று பிளந்திருப்பேன்... உங்களிடம் வைத்திருக்கும் மரியாதைக்காக சும்மா வந்தேன். ஸார்! காப்பி நன்றாக இல்லை என்றால் வேறே கொண்டுவரச் சொல்லட்டுமே; இல்லாவிட்டால் வேறே ஹோட்டலுக்குப் போகட்டுமே... என் மேலேயா ஸார் வீசுகிறது!" என்றான்.

"பேசாதே! அவர் யார் தெரியுமா? பெரிய ஜமீந்தார். தொண்ணூற்றொன்பது லட்சம் ரொக்கம் வைத்திருக்கிறார். இன்னும் ஒரு லட்சம் சேர்த்து ஒரு கோடியாக ஆக்கிவிடக் கூடாது என்றே சேர்க்காமல் இருக்கிறார்!"

“அவன் யாராக இருந்தால் என்ன! மனுஷத் தன்மை இல்லையென்றால் அப்புறம்...”

"இப்படியெல்லாம் பேசுகிறதாயிருந்தால் வேலையை விட்டு இப்போதே போய்விடு; ஆமாம்...” என்றார் மானேஜர் கடுமையாக. மானேஜர் மேல் பாலசுந்தரத்துக்கு ஆத்திரம் வந்ததுடன், 'ஸெர்வர்’கள் மேலும் கோபம் வந்தது. இவர்கள் ஏன் இம்மாதிரி நடத்தைக்கு இடம் கொடுக்கிறார்கள்! அவ்வப்போது போடு போட்டுக் கொண்டு வந்தால், கிழவர் விரலை அசைப்பாரா? அதே சமயம் அவனுடைய இருதயத்தில் ஒரு பொல்லாத ஆசையும் கிளம்பிற்று. "நம்முடைய கையில் மட்டும் பணம் கிடைக்கட்டும். இதே போல் ஒரு ‘ரூம்' எடுத்துக் கொண்டு இவரைவிட அமுல் பண்ணுகிறேனா இல்லையா பார்க்கலாம்” என்று முணுமுணுத்துக் கொண்டே போனான். அந்த கணத்திலேயே அவனுக்குப் பணம் கிடைக்க ஈசுவரன் ஒரு வழிசெய்து கொண்டிருக்கிறான் என்பதை அவன் அறியவில்லை.

நான்கு மாதங்களுக்கு முன்பு, ஒரு சிநேகிதனின் கெடு பிடி கட்டாயத்தின் மேல் அரை மனசுடன் அவன் செய்த காரியம் அது. ஒரு விநாயகர் கோயில் உத்தாரணத்துக்காக ஆரம்பிக்கப்பட்ட லாட்டரிச் சீட்டில் எட்டணாவுக்கு டிக்கெட் ஒன்றை வாங்கியிருந்தான். அதில் மூன்றாவது பரிசு பால சுந்தரத்துக்கு விழுந்து, அதை அறிவித்து ஒரு தந்தியும் அவன் கையில் கிடைத்தது. தன் டிரங்குப் பெட்டியில் தேடி, அந்த டிக்கெட்டை எடுத்துக் கொண்டு ஓடினான். ஆயிரம் ரூபாய் பணத்துடன் ஹோட்டலுக்குத் திரும்பினவன், தட்சணமே தன் கணக்கைத் தீர்க்கும்படி ஹோட்டல் முதலாளியிடம் கேட்டு கொண்டு, அந்தத் தேதியுடன் தன் தொழிலை முடிவு செய்து கொண்டான். சென்னைப் பட்டணத்துக்குப் போய், சுகமாக இருப்பதாகவும் அங்கேயே ஒரு திட்டம் போட்டுக் கொண்டான்.

விக்டோரியா டெர்மினஸ் ஸ்டேஷனில் நின்ற பால சுந்தரம், ஒரு இனிய குரலைக் கேட்டுத் திரும்பினான். இரண்டு பெண்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். இரண்டு பேரும் சென்னையிலிருந்து வந்திருக்கிறார்கள் என்றும் ஊகித்தான்; அசல் தஞ்சாவூர்த் தமிழ் பேசினார்கள்.

“அடி கனகம்! பாஸ்கர் விலாஸ் ஹோட்டல் தேவலை என்று சொன்னார்களடி! அதற்கே போயேன்!” என்றாள் அவர்களில் சற்று முதிர்ந்தவளாகக் காணப்பட்டவள்.

இளமையும் புன்னகையும் ததும்பும் முகத்தினளாய் அன்றலர்ந்த மலர்

போல் காணப்பட்ட இன்னொருத்தி, "அப்பா சொன்னார். ஆரிய நிவாஸ் தேவலை என்று... அங்கே சௌகரியம் ஜாஸ்தி என்றார். தவிர, ஸ்டூடியோவுக்கு அது கிட்டம் இல்லையாடி?" என்றாள்.

பாலசுந்தரம் கவனித்தான். அசட்டுத் தைரியத்துடன் "நீங்கள் இந்த ஊருக்குப் புதிசு போலிருக்கிறதே!" என்று கேட்டான்.

சின்னவள் இதற்கு தைரியமாகப் பதில் கேட்டாள்: "ஏன்! உங்களுக்கென்ன?"

"இல்லை... ஏதோ ஹோட்டல்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தீர்கள். தற்செயலாகக் காதில் பட்டது. நான் ஊரில் ஒன்பது பெரிய ஹோட்டல்களில் பரிச்சயப்பட்டவன். உங்களுக்கு ரொம்ப சௌகரியமானது ‘க்ரெஸெண்ட் ரோடி’ல் இருக்கிற 'சுந்தர் பவன்'தான். ஸ்டூடியோவுக்குப் போகிறவர்களாகத் தெரிகிறது. அங்கே எத்தனையோ பேர் உங்கள் மாதிரி இருக்கிறார்கள்!"

“ஓஹோ...”

“சாப்பாடு நல்லதாக இருக்கும்... ரூமும் வசதியாக இருக்கும்...”

“சரிதான், சரிதான்... ஏண்டி, அங்கேதான் நான் போகிறேனடி?” என்றாள் கனகம்.

“உன் இஷ்டம், அம்மா?”

பாலசுந்தரம் அங்கே அதற்கு மேல் கேட்டுக் கொண்டு நிற்கவில்லை. தன்மீது சந்தேகப்படுவார்களோ என்ற பயம் ஒன்று. இரண்டாவது, அந்தப் பெண்ணைப் பார்த்த பிறகு அவன் மனம் ஒரு மாதிரியாகக் குழைந்தது. பட்டணத்தில் என்ன இருக்கு? இங்கேயேதான் தங்கிப் பார்ப்போமே என்று நினைத்தான்.

அன்று சாயங்காலமே அவன் க்ரெஸெண்ட் ரோடில் 'சுந்தர் பவ’னைத் தேடிக் கொண்டு போனான். வெளியே மானேஜரை, “இன்று காலையில் கனகம் என்கிறதாக ஒரு பெண் 'ரூம்’ எடுத்துக் கொண்டிருக்கிறாளா?” என்று விசாரித்தான்: புத்தகத்தைப் புரட்டிப் பார்த்து. “உம்... 161-ம் நம்பர் - மூன்றாவது மாடி!” என்றார் அவர்.

"இன்னொரு 'ரூம்' இங்கே கிடைக்குமா ஸார் எனக்கு?"

மறுபடியும் மானேஜர் புத்தகத்தைப் புரட்டி விட்டு, "இப்போது இல்லை...! ஆனால், நாளைக்குக் காலை ஏழு மணிக்கு வந்தீரானால் மூன்றாவது மாடியில் 167-ம் நம்பர் காலியாகிறது. உமக்குக்

கிடைக்கலாம்!” என்றார். பால சுந்தரம் திரும்பிய போது மானேஜர், "யார் இந்த ஆள்? எங்கேயோ பார்த்த மாதிரி தென்படுகிறதே?” என்று தலையைச் சொரிந்து கொண்டார். மூன்று வருஷங்களுக்கு முன்பாக இதே ஹோட்டலில் பாலசுந்தரம் சர்வராக இருந்திருக்கிறான் என்பதை அவர் உடனே ஞாபகம் செய்து கொள்ள முடியவில்லை.

கதையை வளர்த்துவானேன்? மறுநாள் ஆறேகால் மணி முதலாகக் காத்துக் கொண்டிருந்து ஏழாவது மணிக்கு 167-ம் நம்பர் அறையைத் தனக்கு எடுத்துக் கொண்டு விட்டான்.

மாடியில் வராந்தாவில் தன் அறைக்கு எதிரே நின்று வெளியே பார்த்துக் கொண்டிருந்தாள் கனகம். "ஓ! நீங்களா? இங்கேயே 'ரூம்’ எடுத்துக் கொண்டீர்களா?” என்றான் பால சுந்தரம்.

அவள் திரும்பினாள், புருவத்தை நெறித்து, இவரை எங்கே பார்த்தோம் என்ற மாதிரி கவனித்தாள்.

“என்னை ஞாபகம் இல்லையோ...? இன்று காலையில்...”

“ஓ! ஓ...! நீங்களா? அடடா! மறந்து விட்டேன்... நீங்கள் சொன்னதன் பேரில்தானே இங்கேயே வந்தேன்...” என்றாள் அவள்.

“எனக்கும் ஒரு வாரம், பத்து நாட்களுக்கு இந்தப் பக்கத்தில் வேலை இருக்கிறது... நானும் இன்று காலை முதல் ரூம் 167க்கு வந்து விட்டேன்...”

“ரொம்ப சந்தோஷம்.”

“நீங்கள் பம்பாய்க்குப் புதிசு போல் இருக்கிறது?”

“ஆமாம்... இதுதான் நான் வருகிறது முதல் தடவை.”

"இங்கே தெரிந்த பேர் யாருமே இல்லையாக்கும்?”

"இல்லை... நேற்று என்னோடு பார்த்தீர்களே பத்மா, அவள்கூடக் கல்கத்தாவுக்குப் போகிறாள்...”

“என்னால் செய்யக்கூடிய உபகாரம் எதுவானாலும் நான் செய்யத் தயார். எனக்குக்கூட உங்கள் ஊர்ப்பக்கம்தான். என்றாலும், பம்பாயில் ஆறு வருஷப் பழக்கம்!”

இப்படி மெள்ள ஆரம்பித்த சிநேகம் பலமாகப் பிடித்துக் கொண்டது. கனகம் ஒரு ஸ்டூடியோவில் 'எக்ஸ்ட்ரா'வாக வந்திருக்கிறாள். மாசம் நூற்று இருபது ரூபாய் சம்பளம். தகப்பனார் சென்னையில் இருக்கிறார்;

ஆனால் சொற்ப வருமானம். ஏழைக் குடித்தனமாகையால் கூட வர முடியவில்லை. இப்படி அவள் குடும்ப சமாசாரம் அத்தனையையும் தெரிந்து கொண்டான் பாலசுந்தரம்.

தினம் அவளை ஒரு புது இடமாக இட்டுச் சென்றான். பணத்தை வாரிச் செலவு செய்தான். ஹோட்டலில், முக்கியமாக சிப்பந்திகளை அவன் நடத்தின விதம் வெகு கடுமையாக இருந்தது.

ஒரு தட்டு 'ரைஸ்-புட்டிங்' கைவீசி வெளியில் கொட்டி, “வேறே கொண்டு வா!” என்றான். ஒரு கண்ணாடி டம்ளரைக் காப்பியுடன் நடு ஹாலில் போட்டு உடைத்தான். “மூளை இருக்கிறதா?” என்று சொல்லி விட்டு, கனகத்திடம், “மூளை இருந்தால் இங்கே ஏன் 'சர்வ’ராக வருகிறார்கள்?” என்று அவர்கள் காது கேட்கச் சொன்னான்.

கனகம் சற்றுத் தயவாக, "பாவம். போகட்டும்!” என்றாள்.

மற்றொரு சமயம், கனகம் ஸ்டூடியோவுக்கு அவசரமாகக் கிளம்பிக் கொண்டிருந்தாள். காப்பி வேண்டும்... பாலசுந்தரம் கீழே ஓடி, “சீக்கிரமாக ஒரு 'ப்ளேட்' உப்புமா, ஒரு கப் காப்பியும் என்னிடம் கொடும்!” என்றான்.

“சற்று இரும்!” என்றான் ஒரு 'சர்வர்'.

“இருப்பதாக இருந்தால் நான் ஏன் இங்கே வருகிறேன்...?”

“உமக்கு முந்தி வந்து அவசரப்படுகிறவர்களையும் நாங்கள் கவனிக்க வேண்டுமோ, இல்லையோ?”

"அதிகப் பிரசங்கித்தனமாகப் பேசுகிறாயா? 'கம்ப்ளெய்ண்ட்' செய்து உன்னை முதலில் தொலைக்கிறேன், பார்! ஹும்!”

“போ! சொல்லு!”

பாலசுந்தரம் பல்லைக் கடித்துக் கொண்டு போய்ப் புகார் செய்தான். சம்பந்தப்பட்ட 'சர்வ’ரை மானேஜர் வெளுத்துக் கட்டினார். அவன் என்ன சமாதானம் சொல்லியும் அவர் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. “இன்னொரு தரம் இந்த மாதிரி நீ நடந்து கொண்டால், வெளியே போய்விட வேண்டியதுதான்... நீ மரியாதையாகப் பதில் சொல்ல வேண்டியிருக்க ஏன் எதிர்த்துப் பேசுகிறாய்? கேட்டதை எடுத்துக் கொடுப்பதுதானே உன் வேலை?” என்றார். தலை குனிந்து கொண்டு, கண்ணீரை அடக்கிக் கொண்டு அவன் திரும்பினான்.

பெரிய மகா யுத்தத்தில் வெற்றி கண்டவன் போல் பாலசுந்தரம்

கனகத்திடம் வந்து, “ஒரு பயலை விளாசி விட்டேன்... கண்ணில் விரலை விட்டு ஆட்டி விட்டேன்... அத்தனை பேரும் நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள்!”

“ஐயோ பாவம்! எதற்காகக் 'கம்ப்ளெயிண்ட்' செய்தீர்கள். எனக்கு அத்தனை அவசரம் கூட இல்லையே” என்றாள் கனகம்.

“உங்களுக்குத் தெரியாது. இன்று முதல் பாருங்கள், இந்தப் பயல்களுக்கு நம்மைக் கண்டால் சிம்ம சொப்பனம்... ஆமாம்!”

இந்தக் காட்சியை யாருமே அதிகம் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை. அன்றிரவு பன்னிரண்டு மணிக்கு ஒரு பயங்கர சம்பவம் நடந்தது. 'க்ரெஸெண்ட் ரோடு ' தீ விபத்து என்று அதை மறு தினம் பத்திரிகைகள் பத்தி பத்தியாக எழுதின. 'சுந்தர் பவனி’ல் அப்போது 'ஸெர்வர்’கள் தங்கள் உயிரையும் லட்சியம் செய்யாமல், அறை அறையாகப் புகுந்து இருந்தவர்களைக் காப்பாற்றச் செய்த முயற்சியை அவ்வளவு பேரும் பாராட்டினார்கள்.

தீ பக்கத்தில் எங்கேயோ 'ஹைப்போ' காய்ச்சியதால் நேர்ந்ததென்று சொல்லப்பட்டது. ஆறு நெருப்பணைக்கும் இயந்திரங்கள் இடைவிடாது ஒன்பது மணி நேரம் வேலை செய்த பின்னர்தான் நெருப்பு அடங்கத் தொடங்கியது.

திடுக்கிட்டுப் பாலசுந்தரம் படுக்கையை விட்டு எழுந்தான். வராந்தாவுக்கு வந்ததும் அவன் முகத்தில் சுள்ளென்று அக்னிக் காற்று அடித்தது. திடுதிடென்று மக்கள் கீழும் மேலும் ஓடிக் கொண்டிருந்தார்கள். துணிமணிகள் சாம்பலாகும் வாசனை நாசியைத் துளைத்தது. "நெருப்பு! மெள்ள, மெள்ள...! ஓடு கீலே! யார் அங்கே... தள்ளாதே!” இப்படிப் பலர் பலவிதமான உத்தரவுகளைச் சம்பந்தா சம்பந்தமில்லாதபடி போட்டுக் கொண்டிருந்தார்கள்.

பாலசுந்தரத்துக்கு முதல் முதலாக கனகத்தின் ஞாபகம் தான் வந்தது. அவள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமே? அவள் அறைக்கு ஓடினான். கதவு திறந்திருந்தது. அவளைக் காணோம்! தலையில் கையை வைத்துக் கொண்டு ஹாலுக்கு விரைந்தான். மக்கள் கூட்டம், “வழியை மறிக்காதே! நகரு நகரு!” என்ற கோஷங்களைக் கிளப்பிக் கொண்டிருந்தது.

“கனகம்! கனகம்! எங்கே இருக்கிறாய்?” என்று கூவினான் அவன்.

"என்னைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். நான் இதோ போகிறேன். வேறு யாரையேனும் காப்பாற்ற முடிந்தால் பாருங்கள்...” என்றாள்

கனகம். பாலசுந்தரம் ஒரு பெருமூச்சு விட்டான்.

ஹோட்டல் உட்புறத்தில் தீ பரவி விட்டது. 'ஸெர்வர்கள்தான் தைரியமாகப் பாய்ந்து பாய்ந்து சென்றார்கள். எந்தப் பெரிய மனிதர்கள் அவர்களைத் திரணமாக மதித்து நடத்தினார்களோ, அவர்களையெல்லாம் காப்பாற்ற இன்று இவர்கள் உயிரைக்கூட லட்சியம் செய்யவில்லை! பால சுந்தரத்தின் கண்ணில் லேசாக நீர் படர்ந்தது. மறு நிமிஷம் அவர்களோடு அவனும் பாய்ந்தான்...

மறுநாள் காலை 'சுந்தர் பவன்' இருந்த இடத்திலே கரி படர்ந்த வெற்றுத் தூண்களும் இடிந்த சுவர்களுமே இருந்தன.

பாலசுந்தரமும் கனகமும் சமீபத்தில் இருந்த ஒரு பார்க் பெஞ்சில் உட்கார்ந்திருந்தார்கள். அவள் சாமான்கள் எல்லாம் பத்திரமாக அகப்பட்டு விட்டன. பாலசுந்தரத்துக்குத்தான், அவன் செலவழித்தது போக மிகுதியிருந்த நானூறு ரூபாயும் புதிய டிரெஸ்களும் அக்னிக்கு இரையாகி இருந்தன!

“நான் வேறு ஹோட்டலுக்குப் போக வேண்டியது தான்” என்றாள் கனகம்.

“நானும் அப்படித்தான்!” என்றான் பாலசுந்தரம்.

“இரண்டு பேரும் ஒரே ஹோட்டலைப் பார்க்கலாமே?”

“ஆனால், நான் முன் போல் பெரிய மனுஷனாக இருக்க முடியாதே, கனகம்! உங்களிடமிருந்து ஒரு விஷயத்தை இத்தனை நாளாக நான் மறைத்து வந்தேன்...”

“எனக்கு அது தெரியுமே!” என்றாள் அவள் குறும்பாக.

“நான் 'சர்வ'ராக இருந்தவன், இப்போது தனவான் போல் வேஷம் போடுகிறேன்...” என்றான்.

“ஆமாம்... நீங்கள் வந்த மறுநாளைக்கு மறுநாள் மானேஜரே சொன்னார். முதலில் அவருக்கு உங்களை அடையாளம் தெரியவில்லையாம்...”

"அப்படித் தெரிந்தும் நீ-”

“அதனால் என்ன? ஆனால் நீங்கள் சிப்பந்திகளை நடத்தினதுதான் எனக்குப் பிடிக்கவில்லை... ஏன், தெரியுமா? பட்டணத்தில் என் அப்பாவும் ஒரு ஹோட்டலில் தான் இருக்கிறார். அவருடைய சிரமம் எனக்குத் தெரியும்! இப்போது தெரிகிறதா?”

"இதற்கு முந்தியே தெரிந்து கொண்டு விட்டேன். நேற்று ராத்திரி அவர்கள் செய்த தீரமான காரியம் என் மனசை உருக்கி விட்டது. இன்னொரு மனிதனுக்கு உபயோகம் இல்லாத சரீரம் என்னத்துக்கு என்று நினைத்து விட்டேன். இனிமேல் நான் உற்சாகமாக வேலைக்குப் போவேன், வேலையும் செய்வேன். அசட்டு கௌரவம் பார்க்க மாட்டேன். ஆனால் என்னை இனிமேல் யாராவது வைத்துக் கொள்ளுவார்களா?"

"எங்கள் ஸ்டூடியோவில் 'மீல்ஸ் ஸெக்ஷ'னுக்கு ஒருவர் தேவையாக இருக்கிறது. நீங்கள்..."

"கனகம், நீ ஏன் என் மீது இத்தனை அன்பு காட்டுகிறாய்? எதற்காக உன் ஸ்டூடியோவிலேயே எனக்கு வேலை பார்க்கிறாய்?"

"ஏனென்றால், உங்களை எனக்கு ரொம்பப் பிடித்து விட்டது" என்று சொல்லி, சங்கோஜத்துடன் கனகம் தலையைக் குனிந்து கொண்டாள்.

*****

## 52. ஜாலக் கண்ணாடி

அஸ்தமன வேளை. குளு குளுவென்று குளிர் காற்று வீசிக் கொண்டிருந்தது. கோயில் பெரிய பிராகாரத்தை நானும் என் மனைவியுமாகச் சுற்றிக் கொண்டு வந்தோம். மதில் சுவரைத் தாண்டி உயரே தனது கிளைகளை பசுங் குடை போல விரித்துக் கொண்டிருந்த ஒரு மருத மரத்தின் அடியில் ஒருவர் உட்கார்ந்து மெதுவாகப் பாடிக் கொண்டிருந்தார். என்னைக் கண்டதும் “என்ன! இது எத்தனாவது பிரதட்சணம்!” என்று வெகு நாள் பழகியவர் போல் கேட்டார் அவர்.

"முதல் பிரதட்சிணம்தான்” என்றேன் நான்.

“நான் ஆறு செய்து விட்டேன்; இன்னும் ஆறு பாக்கி இருக்கிறது. கால் கடுத்தது, சற்று உட்கார்ந்தேன்... நீங்களும் இப்படிக் கொஞ்சம் உட்காருங்களேன்” என்று என்னை அழைத்தார்.

எனக்கும்தான் காலைக் கடுத்தது. என் மனைவியைப் பார்த்து, “ராஜி, நீ முன்னால் போய் மோகாம்பாள் சந்நிதியில் சற்று உட்கார்ந்திரு. நான் ஐந்தே நிமிஷத்தில் வருகிறேன்!” என்றேன். அவள் என்னை முறைத்துப் பார்த்து விட்டு, முன்னால் போய் விட்டாள்; நான் உட்கார்ந்து கொண்டேன்.

“எந்த ஊரு உங்களுக்கு?” என்று விசாரித்தார் புது நண்பர்.

“எனக்கு மெட்ராஸ். தாங்கள்...?”

“நான் கல்கத்தா. அங்கேயிருந்து 'கல்தா' கொடுத்து இங்கே தள்ளி இருக்கிறார்கள்” என்று சொல்லி விட்டு தமக்குத் தாமே சிரித்து ஏதோ பேசிக் கொண்டார். நான் அவரையே கவனிப்பதை உணர்ந்தவராய், “ஒன்றுமில்லை? உங்களைப் பார்த்த உடனே என் சிநேகிதன் கல்கத்தா ராமன் மாதிரியே இருந்தது. அசைப்பில் அப்படியே இருக்கிறது. அப்புறம் இப்போ ஞாபகம் வருகிறது. அவன் தான் போய் விட்டானே” என்றார்.

“ஓஹோ?”

“அது ஒரு வயிற்றெரிச்சல் கதை ஸார்! அந்தக் கல்கத்தா ராமன் இன்றைக்கு உயிரோட இருந்தால், நான் இங்கே உட்கார்ந்து கொண்டிருக்க மாட்டேன். நீங்களும் என்னை லகுவில் பார்த்துவிட முடியாது. நான் கோடீஸ்வரனாக இருப்பேன். ஆமாம்; ஏரோப்ளேனில் தான் பறப்பேன்!”

“அப்படியா? ஏதாவது வியாபாரம் செய்தீர்களாக்கும்; ராமன் தவறிப் போய் விட்டாராக்கும்!”

"அப்படி இருந்தால் தேவலையே ஸார்! ஒரு மாதிரி மனசை சாந்தி செய்து கொள்ளுவேனே! ஒரேயடியா என்னைப் பயித்தியக்காரனாகப் பண்ணி விட்டான் ஸார், அவன்!” என்று ஓலமிட்டார்.

அவருடைய சொந்தக் கதையை கேட்டுக் கொண்டு இருக்க எனக்கு இஷ்டமில்லை; அவகாசமுமில்லை. ராஜி எவ்வளவு கோபமாக இருப்பாள் என்பதை மனக்கண்ணில் கண்டு, மெள்ள எழுந்திருக்க ஜாடை காண்பித்தேன். ஆனால், அவர் கை என் தொடையை அழுத்தியது. “உட்காருங்கள், ஸார்! என் நெஞ்சில் இருப்பதைக் கொட்டின அப்புறமாவது சாந்தி கிடைக்கிறதோ, பார்க்கிறேன்” என்றார், மடமடவென்று பின்வரும் கதையையும் வீசி விட்டார்.

நாலு வருஷத்துக்கு முந்தி நான் கல்கத்தாவில் ஒரு மோட்டார் கம்பெனியில் இருந்தேன். நான் சொன்ன ராமனும் அங்கே ஒரு பலசரக்குக் கடை வைத்திருந்தான். ராமன் எங்களுடனெல்லாம், தாராளமாகப் பேசிப் பழகுவான். நாங்கள்தான் அவனைக் கண்டால் ஓடி ஒளியுவோம். ஏனென்றால், எப்போதும் அவனுக்கு வறட்சி! "அடே கணபதி! ஒரே ஒரு பதினைந்து ரூபாய் இருந்தால் கொடு... முதல் தேதி திருப்பிக் கொடுத்து விடுகிறேன்” என்பான். ஒரு தரம் கொடுத்தவர்களுக்குக் கூட அனுபவம் உண்டு - அவன் எந்த முதல் தேதியையும் குறிப்பிட்டுச் சொல்லவில்லையென்று! அப்படி முதல் தேதி பார்த்து, விடாக் கண்டனாக நெருக்கினாலும் கூட, ஒரு ரூபாய் இரண்டு ரூபாய்க்கு மேல் அவனிடமிருந்து பெயராது.

இந்த மாதிரியான ஆசாமி ஒரு நாள் ஆபீஸில் வந்து பரக்கப் பரக்கக் கையைப் பற்றி என்னை இழுத்தான். “சித்தே தனியாக வாடா! ஒரு முக்கியமான விஷயம் உன்னிடம் பேச வேண்டும்” என்ற போது நான் சிறிதும் நகர்ந்து கொடுக்காமல், “இப்போ என்னைத் தொந்தரவு செய்யாதே! மணிபர்ஸில் காலணா இல்லை. நானே யாரைக் கடன் கேட்கலாமென்று தெரியாமல் திண்டாடிக் கொண்டிருக்கிறேன்” என்றேன்.

“சை! உன் காசு வேண்டாம்! வேறே விஷயம்... ஒரே நிமிஷம், அப்புறம் இஷ்டம் இல்லை என்றால் நீ போய் விடு” என்றான்.

ராமனின் முகத்தில் வியர்வை துளிர்த்திருந்தது. உதடுகளில் ஒரு நடுக்கம்; கண்களில் ஒரு மருட்சி. என்ன தான் விசாரித்து விடலாமே

என்று கூடவே போனேன்.

"உனக்குத் தெரியுமா, என் மாமா தாத்தா இந்த யூனிவர்ஸிடியில் ஸயன்ஸ் புரொபஸராக இருந்தாரே...” என்றான் ராமன்.

“ஆமாம்... முந்தாநாள் பத்திரிகையில் கூட 'புரொபஸர் வேதபுரி காலமானார்' என்று படித்தேன். அவர் உனக்கு மாமா தாத்தாவோ!”

"ஆமாம், அவர் வீடு சொத்துக்கள் எல்லாம் எனக்குக் கிடைத்து விட்டது. மனுஷன் 'புத்' என்கிற நரகத்தில் விழுந்து கிடக்கிறார்.”

“ரொம்ப சந்தோஷம்... யாருக்கும் கடன் கொடுக்காமல் வாங்கின கடனையும் திருப்பாமல் ஜாக்கிரதையாக அனுபவி சொத்துக்களை...”

"சொத்தாவது மண்ணாங்கட்டியாவது, ஒன்றுமில்லை...! நான் வந்த விஷயம், அவர் ரூமிலிருக்கும் ஒரு கருவியைப் பற்றி!"

“இந்தா, எனக்கு ஆபீஸில் வேலை இருக்கிறது. உன் மாதிரி சோம்பேறியாக இருந்தால், மென்னியைப் பிடித்துத் தள்ளுவார்கள். சமாசாரம் உண்டானால், சீக்கிரம் சொல்லி விட்டு நட!” என்றேன்.

ராமன் என் தோள் பட்டையைப் பிடித்தான். “ஏய், கையை எடு! ஷர்ட் அழுக்காகி விடும்!” என்றேன் வெடுக்கென்று.

“நீ என் கூட வீடு வரைக்கும் இப்போதே வந்தாக வேண்டும். இங்கே நான் அதைச் சொல்ல முடியாது!” என்றான். நான் எவ்வளவோ தடுத்தும் கேட்காமல் வீட்டுக்கே அழைத்துக் கொண்டு போய் விட்டான்.

வீடு பெரிய வீடுதான்; எனவே, அதில் குப்பைகள் அதிகம் சேர்ந்திருந்தன. உயரே ஒட்டடை சீலை சீலையாகத் தொங்கியது. இரண்டு மாடிகள் கடந்து, மூன்றாவது மச்சில் மிகவும் தூசு படிந்த ஒரு அறைக் கதவைத் திறந்தான் அவன். மேஜை மீது, பல கெடியாரங்களை அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்திருப்பது போன்ற இரும்பு ஜகடைகள் கிடந்தன. தூர திருஷ்டிக் கண்ணாடியை ஒத்த ஒரு நூதனக் கருவியும் தென்பட்டது.

ராமன் மறுபடி என் தோள் பட்டையைப் பிடித்தான். நான் மீண்டும் அதை உதறித் தள்ளி, “விஷயத்தைச் சொல்லு!" என்றேன்.

“இதோ இருக்கிறது பார் ஒரு கண்ணாடி, இதைக் காண்பிக்கத்தான் உன்னை நான் கூப்பிட்டேன். இதன் வழியாக நான் எதிர் வீட்டு ஜன்னலைப் பார்த்தேன், கணபதி. அப்போது ஜன்னல் கதவு சார்த்தி இருந்தது. தற்செயலாக என் கை இதோ இந்த 'ஸ்க்ரூ'வைத் திருகியது.

உடனே பார்! எதிர் வீட்டு ஜன்னல் திறந்து கொண்டது. மேலும் 'ஸ்க்ரூ'வைத் திருகினேன். ஜன்னல் மறுபடி சார்த்திக் கொண்டது. இதிலிருந்து என்ன தெரிகிறது உனக்கு?" என்றான்.

"எதிர் வீட்டு அம்மாள் தற்செயலாகக் கதவைத் திறந்திருக்கிறாள். நீ போக்கிரித்தனமாய் ஒரு கண்ணாடி வழியாக அவளையே பார்க்கிறதைக் கண்டதும் கதவைச் சார்த்திக் கொண்டு விட்டாள் என்று தெரிகிறது" என்றேன்.

"அப்படியில்லை என்றால் -"

"உன் மண்டையில் ஒரு 'ஸ்க்ரூ' லூஸ் ஆகிவிட்டது என்று தான் அர்த்தம்?" என்றேன்.

"அடே கணபதி! சும்மா கேலி செய்யாதே! இது விளையாடுகிற விஷயம் இல்லை... என் மாமா தாத்தா பெரிய பெரிய ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருந்தார் என்பது உனக்குத் தெரியுமா?"

"சரி?"

"அவர் செய்த மிக முக்கியமான ஆராய்ச்சிதான் இது! இப்படிப் பக்கத்தில் வந்து பார். இந்த 'ஸ்க்ரூ'வில் தேதிகள் போட்டிருக்கிறது; அடுத்ததில் மணி போட்டிருக்கிறது. இன்று தேதி பதினைந்து; நேற்று பதினாலாம் தேதி. இரவு பன்னிரண்டு மணியில் திருப்புகிறேன். இப்போது கண்ணாடி வழியாகப் பார்!" என்றான்.

நான் பார்த்தேன்.

"என்ன தெரிகிறது? பூர்ண சந்திரன் தலைக்கு மேலே இருக்கிறதா?"

"ஆமாம்!"

"இப்போது பகல் பன்னிரண்டு மணி வைக்கிறேன். சூரியன் தெரிகிறதா?"

"தெரிகிறதுடா!"

"முந்தா நாள் மாலை ஐந்து மணிக்குத் திருப்புகிறேன். முந்தா நாள் கொஞ்சம் மழை பெய்ததே, ஞாபகம் வருகிறதா?"

"ஆமாம் மழை பெய்கிறதடா!" என்றேன் நான். எனக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை.

"அவசரப்படாதே! என் மாமா தாத்தா உலகத்தில் ஒரு மகா அற்புதமான பொருளைச் சிருஷ்டித்து விட்டார். இதனால் கால தேவனை வென்று

விட்டோம். இதற்கு முன்பு எந்தத் தேதியில் என்ன நடந்தது என்றாலும் இதன் மூலம் பார்க்கலாம்... பார்! எதிர் வீட்டில் ஒரு வழுக்கைத் தலைக் கிழவர் நிற்கிறாரே தெரிகிறதா?”

கண்ணாடியில் பார்த்தேன். அவர் ஜன்னலில் நின்றார். ராமன் 'ஸ்க்ரூ'வை வேகமாகச் சுழற்றினான். "பத்து வருஷம் முந்தி இதே கிழவர் எப்படி இருந்தார். தெரிகிறதா?” என்று கேட்டான்.

“தெரிகிறது, தலையெல்லாம் ஒரே நரைத்த மயிர்.”

சுழற்றிக் கொண்டே, “அதற்குப் பத்து வருஷம் முந்தி எப்படி?” என்றான்.

“ஆ! இப்போது அடர்த்தியான கூந்தல், பக்கத்தில் ஒரு அழகிய பெண்கூட நிற்கிறாளே!”

"இன்னும் இருபது வருஷத்துக்கு முந்தி எப்படி?”

“சூட் போட்டுக் கொண்டு தோல் பையை வைத்துக் கொண்டு இளைஞராகத் தோன்றுகிறாரே?” என்று கூவினேன். என் வியப்பு எல்லை மீறிப் போய் விட்டது.

"பொறுத்துக் கொள்ளு. கணபதி! என் மாமா தாத்தா பெரிய பணக்காரராக இருந்தார். ஆனால், அவர் சாகும் போது, கையில் காலணா இல்லாமல் செத்தார். ஏன் தெரியுமா! அவ்வளவு பணத்தையும் இந்த உயர்ந்த இயந்திரம் தயாரிப்பதில் செலவு செய்தார். இதைச் சரியான ஆளாகப் பார்த்து, நாம் நல்ல விலைக்கு இப்போது விற்று விட்டால்...” என்று நிறுத்தினான்.

நான் ராமனை உதாசீனமாகப் பார்த்தேன். "சை! இத்தனை அருமையானதொரு கருவியை விற்கிறதாமே! உன் புத்தி போகிறதே, தரித்திரம்!” என்றேன்.

“பின் என்னடா செய்கிறது? நம் தரித்திரத்திற்கு இதுவாவது உதவுமல்லவா?”

“பணத்துக்குத்தான் தரித்திரம் என்றால், ஏண்டா மூளைக்குக் கூடவா தரித்திரம்! இதை வைத்துக் கொண்டு லட்சம் லட்சமாக நாம் சம்பாதிக்கலாமே?” என்றேன். இந்த மாதிரியான ஒரு சந்தர்ப்பத்திலே, கல்கத்தா ராமனையும் என்னையும் சேர்த்து நாம் என்று சொல்லிக் கொள்வதில் ஒரு பிசகும் இல்லை அல்லவா?

“எங்கே சொல்லு? அதற்குத் தானே உன்னைக் கூப்பிட்டேன்!” என்று என் தோள் பட்டையைப் பிடித்தான் அவன்.

“ஏய்! சட்டையை அழுக்காக்காதே” என்று கையை அகற்றி விட்டு, "இதில் ஒரே ஒரு சோதனை செய்து பார்க்க வேண்டும். அது மட்டும் சரியாக வந்து விட்டால், அப்புறம் நாம் போடுகிற 'பிளான்' எல்லாம் சரியாகி விடும். லட்சம் கோடி என்று பணம் தானாகவே வந்து குவியும்!”

“என்ன அது?”

“இதில் நேற்று நடந்தது முந்தாநாள் நடந்தது எல்லாம் தெரிகிறது. நாளைக்கு நடக்கப் போகிறதும் தெரியுமா என்று பார்க்க வேண்டும்!”

"அதெப்படிப் பார்ப்பது?”

"அசடே, கேளு. முந்தாநாள் பத்திரிகையையும் நேற்றுப் பத்திரிகையையும் கொண்டு வா!” என்றேன். அவைகள் வந்ததும் முந்தாநாள் பத்திரிகையைக் கண்ணாடியின் முன்னால் பிடித்து விட்டு, மறுநாளைத் திருப்பச் சொன்னேன். என்ன ஆச்சரியம்! அதில் தேதி மாறியது. தலைப்பு மாறியது, செய்திகளும் மாறித் தென்பட்டன! குதித்தேன், கூத்தாடினேன். இப்போது கண்ணாடி வழியாக நேற்றையப் பத்திரிகையே தெரிந்தது.

ராமன்தான் என்னைக் கட்டிப் பிடித்து நிறுத்தினான் “அடே! எனக்குக் கொஞ்சம் சொல்லி விட்டு அப்புறம் குதி!” என்றான்.

எனக்கு சந்தோஷம் தாங்கவில்லை.

"முட்டாள்! இதைப் போய் விற்கிறேன் என்கிறாயே! நாளைக்கே வாசலில் 'கணபதி அண்ட் ராமன் - ஜோஸ்ய நிபுணர்கள்' என்று ஒரு போர்டு போடுடா! தினசரி பலன் சொல்லலாம். ஜாதகத்தை வைத்துக் கொண்டு மண்டையை உடைத்துக் கொள்ளாமல், இந்தக் கண்ணாடியில் பிடித்தால், சகலமும் தெரியும், எந்த ஜோஸ்யன் நமக்கு எதிராகச் சொல்லி விட முடியும்?” என்றேன்.

“எனக்கு அது தோணவில்லையடா! இப்பவே ஒரு போர்டு எழுதிக் கொண்டு வரட்டுமா?” என்று துடித்தான் ராமன்.

"அல்பத்தனமாகப் பேசாதேடா! ஜோஸ்யத்தைவிட இருபது பங்கு சம்பாதிக்க வழி இருக்கிறதுடா! பத்திரிகையில் நாளைக்குப் பவுன் என்ன விலை விற்கும் என்று இப்போது சொல்லலாமடா! விலை மிகக் குறைந்த சமயம் வாங்கி, தூக்கி விற்கும் போது விற்றால் எப்படி? அப்புறம் 'ஷேர் மார்க்கெட்’டில் பிரளய மாடலாம்!”

"பலேபா! பேஷ் பேஷ்!”

“அடே! உலகத்தில் நியாயத்தையும் நீதியையும் நடத்த இந்தக் கண்ணாடி இருந்தால் போதும். ஒருத்தன் கொலை செய்யப்பட்டான் என்றால், அவன், போட்டோவை வைத்துப் பின்னால் திருகிக் கொண்டே வந்தால் யார் கொலை செய்தார்கள் என்று தெரிந்து விடாதா?”

"பேசாமெ இரு! அப்புறம் கவர்மெண்டிலே பிடுங்கிக் கொண்டு போய் விடுவார்கள்!”

“ஒரு பேச்சுக்குச் சொன்னேண்டா, முட்டாள்! இந்த உலகமே 'நாளைக்கு நிச்சயமாக என்ன நடக்கப் போகிறது' என்று தெரியாமல் தானே தடுமாறித் தத்தளிக்கிறது!” என்றேன்.

"ஆமாமடா! நேத்து எனக்கு தெரியுமா, இன்னிக்கு இத்தனை பெரிய அதிர்ஷ்டம் இந்த ஜாலக் கண்ணாடி மூலம் வரப்போறது என்று!”

“இது விஷயமாக இனிமேல்தான் நாம் ரொம்ப ரகசியமாயிருக்க வேண்டும். ஏனென்றால், உன்னுடைய - என்னுடைய இரண்டு பேர் அதிர்ஷ்டமும் இந்த ஒரு கண்ணாடியையே பொறுத்திருக்கிறது” என்றேன். இதை நான் சொல்லியிருக்க வேண்டாம். ராமன் குதிக்க ஆரம்பித்தான். “எங்கே! என் அதிர்ஷ்டத்தை இப்போதே நான் பார்க்கப் போகிறேன்!” என்றான்.

ஓடிப் போய் தன் படம் ஒன்றைக் கொண்டு வந்து கண்ணாடியின் முன்னாலே பிடித்தான். நான் 'ஸ்க்ரூ'வைத் திருக்க, அவன் அதனுள்ளே பார்த்தான்.

நாலு நாள் திருகி இருப்பேன்; ராமன் முகத்தை தற்செயலாகக் கவனித்த நான் திடுக்கிட்டுப் போனேன். அடேயப்பா! அதில் என்ன பயங்கரம்! என்ன பீதி!

“அடே கணபதி! கணபதி! கணபதி! நிறுத்துடா! நிறுத்துடா!” என்று அலறினான் அவன்.

"ஏண்டா?” என்றேன்.

"என் முகமே இதில் தெரியல்லேடா!” என்றான்.

“நகரு! நான் பார்க்கிறேன்!” என்று அவனை உதறித் தள்ளி விட்டு நான் ஆரம்ப முதலே பார்த்தேன். இரண்டு தினங்கள் வரை தென்பட்ட அவன் முகம், மூன்றாம் நாள் காணப்படவேயில்லை! வேகமாக அதைத் திருகினேன். பத்து தினங்கள், ஒரு மாசம், ஆறு மாசம், ஒரு வருஷம், நாலு வருஷம், பத்து வருஷம்... அவன் முகம் அப்புறம் அதில்

தென்படவே இல்லை.

“கணபதி! கணபதி!! ஐயோ கணபதி இன்னும் தெரியவில்லையாடா என் மூஞ்சி!” என்று தீனமாகக் கேட்டான் கல்கத்தா ராமன். நான் உண்மையை மறைக்க முயன்றேன். ஆனால், என் முகம் அதைச் செய்ய மறுத்து விட்டது.

"ஐயோ! அப்படியானால் நான் செத்துப் போகப் போகிறேனாடா! மோட்டாரில் அகப்பட்டுச் சாகப் போகிறேனோ என்னமோடா! சில தரித்திர ஜாதகங்களுக்கு யோக தசை வந்தால் அதை அனுபவிக்க முடியாமல் ஆளையே கொண்டு போய் விடும் என்பார்களே, அப்படி இருக்குமோடா?” என்றான். மேலும், “அப்படியானால் பணம் என்னத்துக்கு?” அதிர்ஷ்டம் என்னத்துக்கு? ஜாலக் கண்ணாடி என்னாத்துக்கு?” என்று கோஷ்டம் போட்டான். சுற்றிச் சுற்றிப் பயித்தியம் போல் ஓடினான்.

திடீரென்று என் மண்டையில் ஓங்கி ஒரு அடி விழுந்தது. அடுத்த அடி ஜாலக் கண்ணாடியின் மீது விழுந்தது! “நானே போன பிறகு, நீ ஜாலக் கண்ணாடியை வைத்துக் கொண்டு பிழைக்கிறதாடா? ஹும்! அது மட்டும் நடக்காது!” என்று அவன் கர்ஜனை கேட்டது. நான் கண் விழித்த போது கண்ணாடி சுக்குச் சுக்காக நொறுங்கிக் கிடந்தது. கல்கத்தா ராமன் பித்துப் பிடித்து, மாடியிலிருந்து கீழே குதித்து விட்டதாகவும், படுகாயங்களுடன் ஆஸ்பத்திரியில் இருப்பதாகவும் சொன்னார்கள். நாலாம் நாள் அவன் ஆவி பிரிந்து விட்டது. நான் மண்டையில் பட்ட அடியால், மூன்று மாசம் ஆஸ்பத்திரியிலிருந்து விட்டு வந்தேன். திரும்பிய என்னைக் கம்பெனியில் வைத்துக் கொள்ள மறுத்து விட்டார்கள்...”

தூர நின்றபடி ராஜி எனக்கு ஜாடை செய்தாள். அருகில் போனேன். "நல்ல வேளை! உயிரோடு இருக்கிறீர்களே! அந்த ஆள் படுபயித்தியமாம். கல்கத்தாவில் யாரோடோ சண்டை போட்டு மாடியிலிருந்து கீழே தள்ளி விட்டதாம். பயித்தியம் தெளியத்தான் இங்கே அழைத்துக் கொண்டு வந்து கோயிலைச் சுற்றுகிறார்களாம்...” என்று சொன்னாள் அவள்.

“உனக்கெப்படித் தெரியும்?”

"மோகாம்பாள் சந்நிதியில் ஒரு பாட்டி கதை மாதிரி சொன்னாள். ராமன் என்கிறவனைத்தான் தள்ளி விட்டானாம் இவன். அப்புறம் கேஸ் நடந்து, பயித்திய ஆஸ்பத்திரியிலுமிருந்து விட்டு வந்திருக்கிறவனாம். இங்கே

பிரதட்சணம் பண்ணினதிலே கொஞ்சம் குணமாம். யாரைக் கண்டாலும் 'நீதானே கல்கத்தா ராமன்' என்று கேட்பானாம். நீங்கள் வாருங்கள், போகலாம்! இங்கே உங்களை முழுசாகப் பார்க்கிற வரையில் என் உயிர் என் உடலில் இல்லை" என்றாள் ராஜி.

"மிஸ்டர் ராமன்! அப்புறம் வரேளா?" என்று அழுத்தமாகக் குரல் கொடுத்தார் புது நண்பர்.

"கட்டாயம் வருகிறேன்!" என்று சொல்லி விட்டு வீட்டுக்கு வந்தேன். அன்றிரவே திருவிடைமருதூர் ஸ்டேஷனில் நான் பட்டணத்துக்கு ரயில் ஏறி விட்டேன்.

*****

## 53. நாய்களைப் பற்றிய சில சிந்தனைகள்

நானும் என் ராஜமும் மைத்துனியின் கல்யாணத்திற்குச் சென்று விட்டு உத்தமர் கோவிலிலிருந்து ரயிலில் திரும்பி வந்து கொண்டிருந்தோம். ஏதோ ஒரு ஸ்டேஷனில் (பெரிய மனுஷர்களைப் போல் இந்த இடத்தில் எனக்கும் ஞாபகம் வர மறுக்கிறது!) பிளாட் பாரத்தின் எதிர்ப்புறமாக இரண்டு சின்னப் பயல்கள் வண்டிக்குள் தாவினார்கள். எட்டு, ஒன்பது வயதுக்குள்தான் இருக்கும்; அரையில் மிக அழுக்கான - ஈரத்தில் நனையாத - வஸ்திரம்தான் உடுத்தியிருந்தார்கள். நாங்கள் இருப்பதையே அவர்கள் லட்சியம் செய்யவில்லை. ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டவுடன் அவர்களில் ஒரு பயல் “இன்னாடா நாய்! இங்கே எங்கேடா வந்தே?” என்று கேட்டான்.

அதற்கு இன்னொரு பயல், “இன்னாடா நாய்! நீ எங்கேடா இங்கே வந்தே?” என்று பதிலுக்கு அவனைத் திருப்பிக் கேட்டான்.

இந்த அறிமுகம் ஆன அப்புறம் அவர்கள் ஒருவரை ஒருவர் அணைத்தபடி அளவளாவிக் கொண்டு வந்தார்கள். “நாய்!” என்று பரஸ்பரம் கூப்பிட்டுக் கொண்டதில் ஏற்பட்ட ஆனந்தம் அவர்கள் அடுத்த ஸ்டேஷனில், வந்த வழியாகவே வெளியேறும் வரையில் இருந்தது.

இந்த உலகத்தில் 'நாய்' என்று அழைக்கப் பட்டுக்கூடச் சிறிதும் கோபம் கொள்ளாமல் வாயைத் திறந்து சிரித்து சந்தோஷத்தைக் காண்பிக்கும் இன்னொரு ஆத்மாவின் ஞாபகம் எனக்கு அப்போது வந்தது. ஒருகால் நாய் என்றால் என்ன என்று தெரிந்த பிறகு, அவ்வாறு அழைக்கப்பட்டதற்காக அந்த ஆத்மாவும் காலால் நம் முகத்தில் உதைக்கலாம். நான் சொல்கிறது பாப்பாக்களைப் பற்றி!

முன்னெல்லாம், எங்கள் சின்னக் கண்ணனுக்கு வயது மாசக் கணக்கில் இருந்த போது, அவனை நான் தலைக்கு மேலே தூக்கிப் பிடித்துக் கொண்டு, 'சீ' நாயே... சின்ன நாயே... போக்கிரி நாயே... அச்ச நாயே...! என்று நாய் - அஷ்டோத்தரங்கள் சொல்லுவதுண்டு. நான் சொல்லும் ஒவ்வொரு 'நாய்’க்கும் சின்னக் கண்ணன் தன் பொக்கை வாயைத் திறந்து சிரித்துக் காட்டுவது வழக்கம். அதைக் கண்டு நாங்கள் அலமாந்து போயிருக்கிறோம்.

சின்னக் கண்ணனுக்கு ஒரு வயதாகி, அவனுக்குக் கிண்ணத்தில் சாதம் ஊட்டுவதற்கு ஆரம்பித்த பொழுது, நாய் வந்து நின்றால்தான் அவன்

சாப்பிடுவான். ஒரு கவளம் அவன் வாய்க்குள் போக வேண்டுமென்றால் நாய்க்கும் ஒரு கவளம் விழுந்தாக வேண்டும். இதை அறிந்து கொண்ட ஒரு சிவப்பு நாய் வாலை ஆட்டிக் கொண்டு கழுத்தை உயர்த்திக் கொண்டு, வெகு அக்கறையுடன் வேளை அறிந்து எங்கள் வீட்டு வாசலை வட்டமிடும். பருப்பு ரசமும், பசுவின் நெய்யும் மணக்கும் சாதத்தை உத்தேசித்து, அந்தத் 'தோத்தோ' எங்கள் சின்னக் கண்ணன் சிரஞ்சீவியாகச் சின்னக் குழந்தையாக இருக்க வேண்டுமென்று மனமார விரும்பியிருந்தால் கூட ஆச்சரியமில்லை!

இதைச் சொல்லும் போது நாயின் நுண்ணறிவைத் தெரிந்து கொண்டே நான் சொல்லுகிறேன். நாய்களுக்குத் தான் எத்தனை யோசனை இருக்கிறது! முன்பு நான் டவுனில் குடியிருந்தேன். அங்கே இரவில் சரியாக எட்டு மணிக்கு நாங்கள் சாப்பிட்டான பிறகு புழக்கடைப் பக்கமாக ஒரு நாய் வந்து நிற்கும். அது விருந்தாளிகளைப் போலவே உரிமை கொண்டாடிக் கொண்டு, நேரே விளக்கடியில் வந்து நில்லாது. நிழலோரமாக நின்று வாலை ஆட்டும். சிறு குரைப்பால், 'நான் வந்திருக்கிறேன்' என்று ஜாடை சொல்லும். ஒரொரு நாள், “போ! போ! இன்றைக்கு இல்லை” என்று சொல்லுவோம்; அடுத்த நிமிஷம் - சில பிச்சைக்காரர்களைப் போல் அல்லாமல் - திரும்பி ஓடிப் போய் விடும்! "ஐயோ, பாவம்! இதற்கு அடுத்த ஜன்மம் உண்டானால் பில் - கலெக்டராக மட்டும் பிறந்து விடக்கூடாது. போகுமிடமெல்லாம் 'இன்றைக்கு இல்லை, போ' என்று சொல்லிக் கொண்டிருப்பார்களே!” என்று நான் அங்கலாய்த்துக் கொள்வேன்.

ஒரு ஆசாமியைப் பற்றி மிகவும் துச்சமாகக் குறிப்பிட விரும்பும் போது, "அவன் கிடக்கிறான் நாய்!” என்று நுனி நாக்கினால் சொல்லி விடுகிறோம். ஆனால் நாம் சிறுவர்களாக இருந்த காலத்தில் பாட புத்தகங்கள் கற்பித்தது, நாயின் நன்றியறிவையும் எஜமான் விசுவாசத்தையும் பற்றி அல்லவா? பெரியவர்களான உடனே பழம் பாடங்களை மறந்துவிட வேண்டும் - பொய் சொல்லாதே, வஞ்சகம் செய்யாதே; கோள் சொல்லாதே, பிறனைக் கெடுக்காதே, துரோகம் செய்யாதே, பேராசைப் படாதே, உப்பிட்டவரை மறக்காதே என்றெல்லாம் பெரியவர்கள் சொல்லிக் கொடுத்ததை - மறந்துவிட வேண்டும் என்ற மனித - நியதியின்படி நாயைப் பற்றி நாம் படித்த நல்ல விஷயங்களையும் மறந்து போய்த்தான் அப்படிச் சொல்லுகிறோமா? அல்லது, வேண்டும் போது உயர்த்திப் பேசுவது, வேண்டாத காலத்தில் குதி காலின் கீழ் வைத்துத் தேய்ப்பது என்ற மனித சுபாவப்படி, நாய் வேண்டிய போது அதன் விசுவாசத்தைக் கதை கதையாகச் சொல்லி

விட்டு, அது தேவைப்படாத போது, அதை கரித்துக் கொட்டுகிறோமா?

ஆனால், நாய் எதை லட்சியம் செய்கிறது? எஜமான் ஏழையா பணக்காரனா, யோக்கியனா அயோக்கியனா, திருடனா தர்மிஷ்டனா, பக்திமானா பிளாக் மார்க்கெட்காரனா என்றெல்லாம் பாகுபாடு செய்து விசுவாசம் காட்டுகிறதா? இல்லையே! உயர்ந்த உடை உடுத்தினதற்காக அது அதிகம் வாலாட்டுவதுமில்லை. மோட்டாரில் வந்ததற்காக அதிகம் சுற்றிச் சுற்றி வருவதுமில்லை. அதன் விசுவாசத்திற்கு ஒரு நிதானம் உண்டு; அதற்கு உணவு கொடுத்தவர்கள் யாராக இருந்தாலும் அந்த அளவை மறக்காமல் வைத்துக் கொண்டிருக்கிறது.

“ஏ நாயே! நீ ஒருகாலும் எத்தனை முயன்றாலும் மனிதனைப் போல் ஆக முடியாது” என்று நான் நாயைப் பார்க்கும் போதெல்லாம் நினைத்துக் கொள்கிறேன். நாங்கள் டெலிபோனில் பேசுவதையும் சொன்ன சாமானைக் கடைக்குச் சென்று காசு கொடுத்து வாங்கிக் கொண்டு வருவதையும், மோப்பம் பிடித்துத் திருடனைக் கண்டுபிடிப்பதையும், இன்னும் எத்தனையோ வகைகளில் மனிதனைக் 'காப்பி' அடிப்பதையும் பற்றிப் பத்திரிகையில் அடிக்கடி படிக்கிறோம். சமீபத்தில் நியூயார்க்கிலிருந்து வந்த செய்தி ஒன்று எல்லாவற்றையும் தூக்கி அடிப்பதாக இருந்தது; ஒரு நாய் பாங்கில் கணக்கு வைத்துக் கொண்டிருக்கிறதாம்! அதற்காகப் பாங்கிக்காரர்கள் அதனிடம் ஒரு 'செக்' புத்தகமே கொடுத்திருக்கிறார்களாம். அந்த நாய் அந்தப் புத்தகத்தின் அடியில் கையெழுத்துப் போட வேண்டிய இடத்தில் முன்னங் காலினால் கீறல் ஒன்று போட்டுப் பணம் வாங்கிக் கொள்கிறதாம்.

இந்தச் செய்தியைப் படித்தவுடன் நான் ராஜத்தை அவசரமாகக் கூப்பிட்டு, “இதைப் பார்த்தாயா, ஒரு நாய் செய்து வருகிற காரியத்தை! உன் பெயரில் நான் போஸ்ட் ஆபீஸ் 'சேவிங்ஸ் பாங்கி’யில் கணக்கு வைத்திருந்த போது ஒரு முறை இரண்டு ரூபாய் வாங்க ஆறு முறைகள் நீ கையெழுத்துப் போட வேண்டியிருந்ததே, நினைவு வருகிறதா?” என்று ஞாபகப்படுத்தினேன்.

“ஆமாம்... நான் நாய்க்கும் கேவலம்தான்! உங்களிடம் சந்தன சோப் வேண்டுமென்று இதோடு நூறு தரம் சொல்லி விட்டேன்; கொஞ்சமாவது அன்பிருந்தால் வாங்கி வந்திருக்க மாட்டீர்களா!” என்று படபடத்துக் கொண்டு உள்ளே போனாள்.

இந்த ஹாஸ்யம் செய்ததற்காகவும், அவளைச் சாந்தம்

செய்வதற்காகவும், நான் தண்டனையாக அன்று மாலை மூன்று சோப்புகள் வாங்கிக் கொடுத்து மன்னிப்பும் கேட்டுக் கொண்டேன். இது நிற்க.

பாங்கில் பணம் போட்டு வைப்பது புத்திசாலி மனிதர்கள் செய்யும் காரியம் என்பதை நான் ஒப்புக் கொண்டாலும் கூட, நாய் இதே காரியத்தைச் செய்து மனிதனுக்குச் சமமாகப் புத்திசாலிப் பட்டத்தை என்னிடம் வாங்கிக் கொண்டு விட முடியாது.

நாய்களுக்கு ஆகாரம் போட்டவுடன் வால்களை ஆட்டுகின்றனவே! மனத்தில் விசுவாசம் வைத்திருக்கின்றனவே! ஒரு மனிதனைப் பிடிக்கவில்லை என்றால் கண்ணெதிரே உறுமித் தெரிவிக்கின்றனவே! அப்படியா இருக்கிறான் மனிதன்? அவன் குணமே வேறு ஆயிற்றே; மனிதன் எஜமானனிடம் சாப்பிட்டுக் கொண்டே துரோகம் செய்கிறானே; உண்ட இடத்தை அதி விரைவில் மறந்து போகிறானே; தனக்கு அடுத்தபடி உயரே இருப்பவனைக் காலைப் பறித்துக் கீழே தள்ளி விட்டுத் தான் அவன் இடத்தில் உட்கார்ந்து கொள்ள ஈனமான வழிகளைத் தேடுகிறானே; கேவலமான காரியத்துக்கு எந்த ஆளைப் பிடித்துச் சேர்த்துக் கொண்டால் தன் கட்சி ஜெயிக்கும் என்று சூழ்ச்சி செய்கிறானே! எந்த சுவானத்துக்கு இப்படிச் செய்ய யோசனைதான் தோன்றும்? ஆகையால், ஏ நாயே! உன்னால் ஒரு நாளும் மானிடனை எட்டிப் பிடிக்க முடியாது. நீ முட்டாள், முழு முட்டாள்! சர்வ முட்டாள், போ! வேதாந்தம் பேசவும் உனக்கு வராது; அந்தச் சூட்டோடு சூடாக ஈனமான காரியங்கள் செய்யவும் வராது. ஆகையினால், உனக்கு மோட்டார் சவாரி கிடைத்தாலும், பங்களாக்களினுள்ளே சோபாக்களில் உட்கார அதிர்ஷ்டம் இருந்தாலும், நீ நாய்தான்! சில 'கெட்டிக்கார' மனிதர்களை நீ கிட்டக்கூட நெருங்க முடியாது.

நாயைவிடப் பூனை புத்திசாலி என்று சொல்வார்கள். இதற்கு அர்த்தமே இல்லை. கணவனைவிட மனைவி புத்திசாலி என்று சொல்வதில் எத்தனை பொருள் இருக்கிறதோ அத்தனைதான் இதிலும் இருக்கிறது. கணவனும் மனைவியும் பல இடங்களில் 'நாயும் பூனையுமாக' இருப்பதை இங்கே எடுத்து வைத்துக் கொண்டு விளக்க வேண்டிய அவசியம் இல்லை. ஆகவே ஒரே ஒரு முறை பூனையொன்று வெகு புத்திசாலித்தனமாக நடந்து கொண்டதை மட்டும் இங்கே கூறிவிடுகிறேன்.

நானும் இரண்டு எழுத்தாளர்களுமாக ஒரு பெரிய மனிதரைப் பார்க்கப் போயிருந்தோம். அந்த மனிதர் அதிகம் பேச மாட்டார்; ஆனால் சத்தம்

போடாமல் சுயகாரியத்தை நடத்திக் கொண்டு விடுவார் என்று பெயர் போனவர். நாங்கள் மூன்று நாற்காலிகளில் உட்கார்ந்து கொண்டு அவருக்கு நாலாவது நாற்காலியைக் காலியாக விட்டு, அவர் வருகைக்குக் காத்திருந்தோம். அந்தச் சமயம் ஒரு பூனை உள்ளேயிருந்து வந்தது. எங்களை ஒரு முறை பார்த்து விட்டு, காலி நாற்காலியின் மீது தாவி, மனிதர்கள் உட்காருவது போல் உட்கார்ந்து கொண்டது. மறுநிமிஷம் எங்களைப் பார்த்து 'மியாவ், மியாவ்' என்று சம்பாஷணையைத் தொடங்கியது.

சில காலமாக வீட்டில் நாய் வளர்க்க வேண்டுமென்றதொரு ஆசை எனக்கு ஏற்பட்டிருக்கிறது. எங்கள் சின்னக் கண்ணனுக்கும் அதே ஆசை உண்டு; ஆனால், அது நாய் குட்டியாக இருக்க வேண்டுமென்று அவன் நினைக்கிறான். “நானும் வரேன்!” என்று அவன் என் கூடப் புறப்படும் போது, “வாடா, அப்பா! வா! உன்கூட ஒரு நாய்க்குட்டியையும் அழைத்துக் கொண்டு வா!” என்று அடிக்கடி நான் கேலியாகச் சொல்கிறேன். அதை ஞாபகம் வைத்துக் கொண்டு தான் கேட்கிறானோ என்னவோ! ஆனால் ராஜம் இதற்கு முற்றிலும் எதிரான அபிப்பிராயம் வைத்துக் கொண்டு எங்கள்! இருவர் மெஜாரிட்டியையும் இதுவரை தகர்த்தெறிந்து கொண்டே வருகிறாள்.

"ஐய! நாயா! சமையற்கட்டுக்குள்ளே வந்து விடும்! அப்புறம் பூஜை அலமாரி, அது இது எல்லாம் என்ன கதியாகிறது... வேண்டாம்! இந்த வீட்டில் நாய் வேறு குரைக்க வேண்டாம்” என்று முடிவாகச் சொல்லி விட்டாள்.

சற்று சாந்தமான வேளையில், “எனக்குத் தெரியும்! உங்களுக்கே நாய் வளர்க்கும் யோசனை பக்கத்து வீடுகளைப் பார்த்துத் தானே வந்திருக்கிறது!” என்றாள் அவள். அது வாஸ்தவம்தான்!

என் வலது பக்கத்து வீட்டு நண்பர் இரு சின்ன நாய்களை வைத்து வளர்க்கிறார். கால்களின் நீளம் நான்கே அங்குலம் தான்; ஆனால் வயிற்றின் நீளம் சுமார் இரண்டடி. இந்த இரு நாய்களும் சுற்றுப்புறத்தில் ஒரு மாட்டையும் அண்ட விடாது. 'வாள் வாள்' என்று குரைத்து, மாட்டின் கால்களுக்கடியில் புகுந்து கும்மாளம் அடித்து அவைகளை ஒரு பர்லாங் வரை விரட்டி விட்டே திரும்புகின்றன.

இடது பக்கத்து நண்பர் வீட்டின் நாய் பெரியது. அதனுடன் சிநேகம் பண்ணிக் கொள்ள நான் செய்த முயற்சிகள் எல்லாம் இதுவரை வீணாகி விட்டன. என்னைக் கண்டால் 'உர்ர்ர்ர்...' என்கிறது. என் மோட்டார் சைக்கிளைக் கண்டால் 'லொள்' என்று பாய்கிறது! அதைக் காணும்

போதெல்லாம், "கடவுளே! நீ ஏன் அப்பா நாயைப் படைத்தாய்!" என்று நான் நினைப்பதுண்டு. நாயைப் பற்றிய மதிப்பு அது போன்ற சமயங்களில் எனக்கு அடியோடு விழுந்து விடும்.

எனக்குத் தெரிந்த ஒரு பணக்காரர் இருக்கிறார். (தெரியும் என்றால் எனக்கு அவரைத் தெரியும்; என்னை அவருக்குத் தெரியாது!) அவரிடம் எனக்குத் தெரிந்து ஒன்பது நாய்களும் ஒரு பெரிய மோட்டாரும் இருக்கின்றன. எங்கே வெளியே கிளம்பினாலும் காரின் கதவை டிரைவர் திறந்தவுடன் ஒன்பது நாய்களும் அவருக்கு முன்னால் போய் அதில் ஏறி ஸீட்டுகளை அடைத்துக் கொள்ளும். எங்கே இறங்கினாலும், அவரை முந்திக் கொண்டு அத்தனை நாய்களும் இறங்கி விடும்!

நான் கேள்விப் பட்டவரையில் இவரிடம் ஏதேனும் காரியம் ஆக வேண்டுமானால் முன்னாடி இவருடைய நாய்களையும், அவற்றின் அழகையும் அறிவையும் பற்றி அரை மணியாவது சிலாகித்து ஆக வேண்டுமாம். இந்த 'டிப் லொமஸி' தெரியாமல் நேரே வந்து காரியத்தைச் சொன்னவர் மீது அந்த மனிதர் நாய் மாதிரி விழுவார் என்று அறிகிறேன்!

இந்தச் சந்தர்ப்பத்தில் சொந்த அனுபவம் ஒன்றையும் சொல்லாவிட்டால் எனக்குச் சாப்பாடு செல்லாது. கேட்டு வையுங்கள். நான் ஒரு நாவல் எழுதினேன். அதில் செந்தில் ஆண்டவன் உத்சவத்தைப் பற்றி அத்தியாயம் அத்தியாயமாக எழுதினேன்! அந்தச் சிவகுமாரன் திருமூர்த்திகளின் கோலத்தில் தெருவில் பவனி வரும் சிறப்பையும், பன்னீரையும் சந்தனத்தையும் விபூதியையும் கொண்டு அந்த ஊரில் அபிஷேகம் செய்யும் விதரணையையும், நேரே நின்று பேசுவது போல் அந்த முருகன் அளித்த காட்சியையும் என் திறமைகளையெல்லாம் உபயோகித்து எழுதியிருந்தேன். எழுதும் போது என் கண்கள் நீர்த் திரையிட்டன; நெஞ்சை அடைத்துக் கொண்டது; உடம்பெல்லாம் மயிர்க் கூச்செறிந்தது. படிக்கிற அவ்வளவு பேருக்கும் எனக்கு உண்டான பக்திப் பரவசம் கட்டாயம் ஏற்படப் போகிறதென்று நான் நினைத்து, உடலும் உள்ளமும் பூரித்துப் போனேன்.

நாவல் தீர்ந்தது; நண்பரொருவர் பார்க்க வந்தார். நான் எதிர்பார்த்தது போல் நாவலைப் புகழத் தொடங்கினார். “அது மாதிரி உங்கள் ஒருவரால்தான் ஸார் எழுத முடியும்!” என்றார்.

நான் மார்பைப் பார்த்துக் கொண்டு ஒரு புன்சிரிப்புச் செய்தேன். “மேலே சொல்லுங்கள்; கேட்கிறேன்!” என்கிற பாவனையில் சமிக்ஞை கூடச் செய்து விட்டேன்.

“அதில் எனக்கு ரொம்ப ரொம்பப் பிடித்தது எது தெரியுமா?” என்று நண்பர் கேட்டு விட்டு என் முகத்தைக் கூர்ந்து பார்த்தார். அப்புறம்தான் கல்லைத் தூக்கி என் தலையில் போட்டார்.

“அதில் ஒரு நாய் அடிக்கடி குரைத்துக் கொண்டு வருகிறதாக எழுதி இருக்கிறீர்கள், பாருங்கள்... அதுதான் பிரமாதம், பிரமாதம், பிரமாதம்!” என்றார்.

*****

## 54. தெரிந்தவர்கள்!

இந்த உலகத்தில் வாழ வேண்டுமானால் - நன்றாக வாழ வேண்டுமானால் - பல பேரைத் தெரிந்திருக்க வேண்டியிருக்கிறது. நாலு பேரைத் தெரிந்து கொண்டிருக்கிறவனுக்குக் காரியங்கள் ஆகிற மாதிரி, தன் காரியமே கண்ணாக இருக்கும் சாதுவுக்குக் காரியங்கள் விரைவில் நடப்பதில்லை.

எனக்குத் தெரிந்த நண்பர்கள் இரண்டொருவருக்கு இந்தக் கலையில் இணையற்ற பயிற்சி உண்டு. இவர்களுக்கு நடக்காத காரியம் இல்லை. போலீஸ், ஹைகோர்ட், செக்ரடேரியட், நகரசபை எங்கும் தெரிந்தவர்கள் நிறைய இருக்கிறார்கள். எதை வேண்டுமானாலும் கேளுங்கள், அவர்களால் முடியாத காரியம் என்பதே கிடையாது. ரயிலில் இடம் இல்லையா? இவர்களிடம் சொல்லி விட்டால், இடம் பண்ணிக் கொடுத்து விடுவார்கள். காலேஜில் 'ஸீட்' கிடைக்க வேண்டுமா? ஒரு வார்த்தை சொன்னால் போதும். பார்த்துக் கொள்வார்கள். ஆகையால் நான் எதற்குமே கவலைப்பட்டதில்லை. ஆனால், அவர்களை உபயோகித்துக் கொள்ளும்படி ஏனோ எனக்கு நெருக்கடிகளும், அவசியங்களும் ஏற்பட்டதே இல்லை.

எனக்கு இந்த இரண்டொருவரைத் தவிர வேறு யாரையும் தெரியாது. புதிதாகச் சிநேகம் செய்து கொள்ளவும் அவகாசம் இல்லை.

சமீபத்தில் நான் வட இந்திய நகரம் ஒன்றிற்குச் சென்றிருந்த போது அங்கே அநேக பிரமுகர்களைப் பார்த்தேன்; பேசிக் கொண்டிருந்தேன். அவர்கள் எல்லாரும் அன்பாகப் பேசி, சென்னையைப் பற்றி விசாரித்தார்கள். சென்னையில் சீதோஷ்ண நிலை, கறிகாய்கள் விலை, டிராம்கள் நின்ற சேதி, இப்படிப் பொதுவான பல விஷயங்கள் வரை வெகு நன்றாய்ச் சொல்லிக் கொண்டு வந்தேன். அப்புறம் தான் ஆபத்து ஆரம்பித்தது.

சென்னைப் பிரமுகர்களின் க்ஷேம லாபங்களைப் பற்றி விசாரித்தார்கள். பெரிய அட்வகேட்டுகள், டாக்டர்கள், மந்திரிகள், அரசியல்வாதிகள், சங்கீத வித்வான்கள், வர்த்தகர்கள், நடிக நடிகைகள் பெயர்களைச் சொல்லி, அவர்கள் சௌக்யமா? இவர்கள் திருக்குற்றாலம் போனார்களா...? இன்னாருக்கு இன்னும் ஜுரம் வந்து கொண்டிருக்கிறதா? இன்னார் மாப்பிள்ளை மைசூரில் தான் இருக்கிறாரா?" என்றெல்லாம் கேட்ட போது, (கஷ்டம், கஷ்டம்!) அத்தனை கேள்விகளுக்கும் 'எனக்குத் தெரியாது' என்ற ஒரே பதிலைச் சொல்லி வந்தேன். ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு, 'ஏன் ஸார்! நீங்கள்

சென்னை 'ப்ராபரி'ல்தான் இருக்கிறீர்களோ?" என்று ஒரு அன்பர் நேட்டார்.

"ஆமாம்... உங்களுக்கு ஏன் அந்தச் சந்தேகம் வந்தது" என்றேன்.

"உங்களுக்குச் சென்னைப் பட்டணத்தில் யாரையுமே தெரியாது போல் இருக்கிறதே!" என்றார் அவர்.

வாஸ்தவம்! நான் யார் என்று தெரிந்து கொள்ள, எனக்குத் தெரிந்தபேர்கள் யார் என்பதை அவர்கள் அறிய விரும்பினார்கள்; முயற்சி செய்தார்கள். எனக்கு யாருமே தெரியாமல் போகவே, நான் சுத்த 'சைபர்' என்று அவர்கள் தெரிந்து கொண்டு விட்டார்கள். அப்புறம் அவர்களுக்கு என்னைத் தெரிந்து கொள்ள ஆசை இல்லை; மெள்ள நழுவினார்கள்.

நான் இதற்காகக் கொஞ்சம்கூட வருத்தப்படவில்லை. எனக்கு நண்பர்கள் இல்லை என்றால், என்னைப் போன்று மிக மிகப் பெரிய மனிதர்கள் எல்லாம் இருந்திருக்கிறார்கள். பிரிட்டனின் பிரதம மந்திரி வின்ஸ்டன் சர்ச்சிலுக்கு ஒரு நாடகக் கம்பெனிக்காரன் ஒரு கடிதமும் ஒரு டிக்கெட்டும் அனுப்பினான். டிக்கெட்டில் இருவருக்கு அழைப்பு இருந்தது. கடிதத்தில் "நீரும் உமக்கு நண்பர் யாரேனும் இருந்தால் அவரும் வரவேணும்" என்று எழுதியிருந்தது. சர்ச்சிலுக்கு நண்பரே கிடையாது என்பது அதன் அர்த்தம். சர்ச்சில் லட்சியம் செய்யவில்லை. "உங்கள் நாடகம் அடுத்த ஆட்டத்துக்கு - அது நடப்பதாக இருந்தால் - நான் வருகிறேன்" என்று பதில் எழுதி விட்டார். அப்பேர்ப்பட்ட சர்ச்சில் கோஷ்டியைச் சேர்ந்தவன் நான் என்று பெருமைப்பட்டுக் கொண்டேன். அரிஸ்டாடில் என்ற சிந்தனையாளர் ஒரு பொதுக் கூட்டத்தில், "என் சிநேகிதர்களே...! சிநேகிதர்கள் என்பவர்களே கிடையாது!" என்று தமது பேச்சை ஆரம்பித்தார். இதையும் நான் ஞாபகப்படுத்திக் கொண்டேன்.

ஆனால், என் உற்சாகம் சிறிது நேரம் தான் இருந்தது. சர்ச்சில், அரிஸ்டாட்டில் போன்றவர்களைத் தெரிந்தவர்கள் உலகம் எல்லாம் இருக்கிறார்கள். அவர்களை நேருக்கு நேர் பார்த்திருக்க வேண்டும் என்கிற அவசியம் இல்லவே இல்லை. பெயரே அறிமுகப்படுத்திக் கொண்டு செல்லும்... நான் நாலு பெரிய மனிதர்களைத் தெரியும் என்று சொல்லிக் கொண்டாலே, மதிப்புக்குரியனாகும் போது, உண்மைப் பெரிய மனிதர்களின் சக்தி எத்தனை அதிகமாக இருக்கும்!

ஒரு சமயம் நான் ஒரு பிரமுகருடன் காரில் சென்றேன். வழியில் ஒரு பிரபல ஹாஸ்ய நடிகரைச் சந்தித்தோம். அவரையும் பிரமுகர் காரில்

ஏற்றிக் கொண்டார். நடிகரை எனக்குத் தெரியும்; அதாவது, திரையில் அடிக்கடி பார்த்திருக்கிறேன், பிரமுகர் என்னை அவருக்கு அறிமுகம் செய்து வைக்கும் நோக்கத்துடன், “இவாளைத் தெரிந்திருக்குமே?” என்று கேட்டார்.

“ஆஹா! இவாளைத் தெரியாமல் கூட இருக்க முடியுமா...? நன்றாயிருக்கிறது!” என்றார் ஹாஸ்ய நடிகர். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. “அடே சம்பாதி! உன்னை இவருக்குத் தெரியுமாமேடா!” என்று சொல்லிக் கொண்டேன். பிரமுகர் விடவில்லை. எப்படித் தெரியும்?” என்று கேட்டார்.

“இவரைத் தெரியாமல் இருக்க முடியுமா? என்ன, நீங்கள் அப்படி ஒரு வார்த்தை கேட்டு விட்டீர்களே! நன்னாத் தெரியுமே!” என்று நடிகர் என் முதுகில் பலமாகத் தட்டினார்.

“சரி... அப்படியானால் இவர் பெயரைச் சொல்லி விடுங்கள்!” என்றார் பிரமுகர் விடாக்கண்டனாக.

“சேச்சே! அதெல்லாம் சொல்லிண்டிருந்தா நன்னாயிருக்காது...! இவாளை எத்தனை வருஷமாகத் தெரியும்...! ஒண்ணா, ரெண்டா! பெயர் மறந்து கூடப் போகிற நாளா எங்களுக்குள்ளே சிநேகம்... நீங்கள் மெள்ள நான் 'ராம் கிருஷ்ணன், கோபாலஸ்வாமி' என்று ஏதாவது தப்பா பெயரைச் சொல்லி மாட்டிக் கொள்ள மாட்டேனோ என்று பார்க்கிறீர்கள்...! நானா ஏமாந்து போகிறவன்?” என்றார். என்னை காடாலிங்கனமும் செய்து கொண்டார்.

கடைசிவரை என் பெயரை அவர் சொல்லவும் இல்லை; தனியாக இருக்கும் போது என்னை விசாரிக்கவும் இல்லை. அதற்குப் பிறகு மேற்படி நடிகரை எண்ணற்ற சமயங்கள் பல இடங்களில் பார்த்து விட்டேன். என்னை அறிமுகமானவராகவே அவர் காட்டிக் கொள்ளவில்லை. அன்றொரு நாள் மோட்டாரில் என்னை முதுகைத் தட்டி அவர் ஆலிங் கனம் செய்து கொண்டதற்குக் காரணம் மேற்படி பிரமுகரின் சக்தி என்பதை நான் தெரிந்து கொண்டேன்.

இப்போதெல்லாம் நான் உலகத்தில் அனுபவப்பட்டு விட்டேன். ஆகையால், எதிராளி முன்னால் சலாம் செய்தால் ஒழிய நான் கையைத் தூக்குவது இல்லை! ஜாக்கிரதையாகி விட்டேன்.

நானும், எனக்கு ஆப்தமான ஒரு சர்க்கார் காரியதரிசியும் ஒரு பெரிய ஆபீஸின் தலைவரை ஒரு காரிய நிமித்தமாகப் பேட்டி கண்டோம். மேற்படி காரியதரிசியும் தலைவரும் ஆப்தர்கள்; காரியம் என்னுடையது.

நான் மேலே விவரித்த 'சக்தி'யை உபயோகித்து என் காரியத்தைச் - சிரமமின்றி முடித்துக் கொள்ளலாம் என்றுதான் அவருடன் சென்றேன். எங்கள் இருவருக்கும் எதிரே ஆசனம் கிடைத்தது; சூடான காப்பி தருவிக்கப்பட்டது. "அதற்கென்ன! நீங்கள் வரக் கூடத் தேவை இல்லையே! இவரிடம் ஒரு 'லெட்டர்' கொடுத்திருந்தாலே போதுமே!" என்றார் தலைவர் காரியதரிசியிடம் உபசாரமாக.

"எனக்கும் இன்று ஆபீஸில் முக்கிய வேலை. இவர் அவசரப்படுத்தினதால் வந்தேன்!" என்றார் காரியதரிசி.

"நீங்கள் போங்கள்! உங்கள் வேலையைக் கவனியுங்கள். இவருக்கு வேண்டியது நான் செய்து அனுப்புகிறேன்" என்று தலைவர் இனிமையாகப் பேசி அவரை அனுப்பினார்.

இப்போது நான் தனியே உட்கார்ந்திருந்தேன். எனக்கும் இனிமேல் தெரிந்தவராகி விட்டார் தலைவர் என்று மெல்ல ஒரு புன்னகை செய்தேன். அவர் என்னை அங்கேயே எரித்து விடுகிற மாதிரி ஒரு பார்வை பார்த்து விட்டு, சில பைல்களைப் படபடவென்று புரட்டினார். மூன்று நிமிஷங்களுக்குப் பிறகு பைல்களைத் தொப்பென்று போட்டு, என்னைப் பார்த்து, "மிஸ்டர்! நீர் அதோ அங்கே போட்டிருந்த நாற்காலியில் போய் உட்காரும். உம்முடைய வேலை முடிந்த பிறகு நான் சொல்லி அனுப்புகிறேன்!" என்றார்.

"ஐயா, எனக்கு அந்த நாற்காலியில் உட்கார்ந்திருக்கக் கூட விருப்பம் இல்லை. வெளியே போய் வேண்டுமானாலும் நின்று கொண்டிருக்கிறேன். என் காரியத்தைச் சீக்கிரம் முடித்துக் கொடும்! உம் மூஞ்சி இருக்கிற லட்சணத்துக்கு ஒரு விநாடி கூட இங்கே அனாவசியமாக நான் தங்க மாட்டேனே!" என்று கேட்டுவிட வேண்டும் என்று ஆசைதான். ஆனால், அங்கே எனக்கு அந்த ஆசாமியைத் தெரிந்த அளவு தெரிந்த பேர் கூட வேறு யாரும் இல்லை. பேசாமல் எழுந்து போய்க் காத்திருந்து, காரியம் ஆன பிறகு திரும்பினேன். வரும் போது, "எனக்காக என்ன செய்து விட்டார்? காரியதரிசிக்காக அல்லவா செய்தார்!" என்ற எண்ணமே எனக்கு மேலோங்கியிருந்தபடியால், வந்தனம் சொல்ல மறந்து விட்டேன்.

தெரிந்தவர்களை வைத்துக் கொண்டு காரியங்களை நடத்திக் கொண்டு போக வேண்டியிருக்கிற இந்த உலகத்தில் அதற்கு எத்தனையோ வழிகளைக் கையாள வேண்டி இருக்கிறது.

நான் படிக்கும் சிறு கதைகளில் முக்கால்வாசி கதைகளின் ஆரம்பம்

இப்படித்தான் இருக்கும். “சின்னாளங்குடி கிராமத்தில் மோகனரங்கம் பிள்ளையைத் தெரியாத பேர் இருக்கவே முடியாது!” வெவ்வேறு கதைகளில் ஊரின் பெயரும் ஆளின் பெயரும் மாறி இருக்கலாம். விஷயம் ஒன்றே ஆகத்தான் இருக்கும். இதைப் படித்துப் படித்து அலுத்துப் போன நான், “அட தெரிந்திருக்கட்டுமே, ஐயா! அதனால் என்ன இலாபம்? எவனாவது அந்த ஊரில் இரண்டனாகடன் கொடுப்பானா மோகனரங்கம் பிள்ளைக்கு?” என்று எண்ணிக் கொள்வேன்.

தெரிந்தவன் என்றால், கேட்டவுடனே கடன் கொடுக்க வேண்டும்; அல்லது, ஆபத்து சம்பவத்துக்கு உதவ வேண்டும். இல்லாவிட்டால், தெரிந்தவன் தெரிந்தவனே இல்லை.

நான் பஸ்ஸில் இடம் கிடைக்காமல் மழையில் நிற்பேன். எனக்கு ஆப்தமான பிரமுகர்காரில் தாம் மட்டும் சாய்ந்து கொண்டு ஜம்மென்று போவார். என்னைப் பார்ப்பார்; 'ஸல்யூட்' அடிப்பார்; காரை நிறுத்த மாட்டார். அவரை நான் தெரிந்தவர் என்று எப்படிச் சொல்லுவேன்? 'என் கஷ்டம் தெரியாதவர்' என்று தான் சொல்லுவேன். நானும் மோட்டார் வைத்துக் கொண்டு விட்டால், வலது பக்கத்தில் தமது வாகனத்தை ஓட்டி வருவார். முறுவல் செய்வார். "வண்டி எல்லாம் எப்படி ஓடுகிறது? 'மைலேஜ்' எப்படி இருக்கிறது?” என்று விசாரிப்பார். இப்போது அவர் என்னைத் தெரிந்து கொள்ளவே விரும்புகிறார்!

ரயிலில் நமக்கு எத்தனையோ தெரிந்தவர்கள் ஏற்படுகிறார்கள். அவர்களால் நமக்கு ஒரு காரியம் ஆக வேண்டும்; மெள்ள அந்தப் பெட்டியை ஓரமாகத் தள்ளி, அந்தப் பழக் கூடையை மேலே எடுத்து வைத்துக் கொண்டால் நாம் பாதி ஜமுக்காளத்தை விரித்து, ‘ஒரு மாதிரி’ கீழே ஒண்டிக் கொள்ளலாம். “என்ன பண்றது...? இருக்கிற இடத்தில் 'அட்ஜஸ்ட்’ செய்து கொள்ள வேண்டியதுதான்... நல்ல வேளை! நீங்களும் தெரிந்தவர்களாகப் போய்விட்டீர்கள்... ரைட். எதேஷ்டம்... தாங்க்ஸ்! இந்த இடத்திலே அச்வமேதம் பண்ணி விடலாமே!” என்கிறோம். அல்லது, மற்றவருக்கு நம்மால் காரியம் ஆக வேண்டியிருக்கிறது. "அடடா! ரொம்பத் தெரிஞ்சவாளாப் போயிட்டேளே...! உங்கள் மாமா பிள்ளை காட்டுகுடி சேஷனின் சொந்த மச்சினியின் மாமனாருடைய ஷட்டகர் சேந்தங்குடி கோபாலன்; அவனுக்கு ஒன்று விட்ட தமையன் பிள்ளைக்கு, என் 'ஒய்பி’னுடைய பெரியம்மா பேத்தியின் நாத்தனாரை முடிக்கிறதாக எல்லா ஏற்பாடும் நான் செய்தேன். நானேதான் செய்தேன்... சரி! தாம்பரம் தாண்டின உடனே மேலே ஏறிப் படுத்திக் கொள்ளுங்கள்... நானும், இப்படி

இருக்கிற இடத்திலே உடம்பைப் புரட்டறேன்... தூக்கம் ஏது? ஊம் ஹும்” என்பார்.

ரயில் சிநேகங்கள் அன்றன்று தீர்ந்து விடுகின்றன. இவை காரிய நிமித்தம் ஏற்பட்ட சிநேகங்கள், தெரிந்தவர்கள் ஏற்பட்டு, அவ்வப்போது மறந்து விடுகிறார்கள். இது கடவுள் நமக்குச் செய்த ஒரு கருணை. இப்படித் தெரிந்தவர்கள் உண்மையில் நண்பர்களாகி, ஜாபிதா வளர்ந்து கொண்டே போனால், மனிதன் எங்கே வாழ முடியும்?

காரியம் ஆக வேண்டியிருந்தால் தெரிந்தவன், காரியம் ஆகி விட்டால் தெரியாதவன் என்ற நியதி ஒன்று இருக்க, வீட்டிலே தெரிந்தவன் வெளியிலே தெரியாதவன் என்றதொரு புதிய விதரணையும் இந்தத் “தெரிந்தவர்கள்” விஷயத்தில் உலாவிக் கொண்டுதான் இருக்கிறது.

எனக்கு அறிமுகமான ஒருவர் இருக்கிறார். நல்ல அந்தஸ்தில் இருக்கிறார். “என்ன சம்பாதி, சௌக்கியமா... நம் வீட்டுப் பக்கமே வரமாட்டேன் என்கிறீரே?” என்பார். வீட்டுக்குப் போய் விட்டால் ராஜோபசாரம் நடக்கும். காப்பியும் டிபனும் கொடுப்பார். 'உன் மருமாளுக்கு வரன் குதிர்ந்ததா?' என்று கேட்பார். அவர் வீட்டுப் புத்தக அலமாரியை நான் திறக்கலாம்; எனக்கு உரிமை உண்டு. அவருடைய 'ருமேடிஸம்' பற்றியும் பேசலாம். தோட்டத்தில் இறங்கி என் அபிப்பிராயங்களைச் சொல்லலாம். அவர் பொறுமையாகக் கேட்பார். ஆனால், அவர் வெளியில் புறப்பட்டு விட்டால் என்னை மறந்து விடுவார். எத்தனையோ சங்கீதக் கச்சேரியில், டீ பார்ட்டிகளில், பொது இடங்களில், பெரிய மனிதர் பங்களாக்களில், அவரை நேருக்கு நேர் சந்தித்திருக்கிறேன். அப்போது அவர் கண்கள் என் கண்களைச் சந்தித்ததே இல்லை! என் தலைக்கு மேல் கொம்பு இருக்கிறதா என்று பார்க்கிற மாதிரியே நோக்குவார். எப்போதேனும் என் கண்ணும் அவர் கண்ணும் சந்திக்கும். நான் அசடாகையால் அசட்டுச் சிரிப்புச் சிரிப்பேன், அவர் முகத்தில் எவ்வித மாறுதலும் இராது! எனக்குப் புத்தி வரும்.

“அசட்டு சம்பாதியே! இப்போது அவர் எத்தனை பிரமுகர்களுடன் இருக்கிறார்! உன்னைத் தெரிந்து கொள்கிறது நீ தெரிந்தவன் என்று காட்டிக் கொள்வது - அவருடைய கௌரவத்துக்குப் பங்கம் செய்யாதா? அந்தஸ்தைக் குறைக்காதா?” என்று என் அந்தராத்மா கேட்கும்.

உண்மையில், அத்தனை பெரிய பிரமுகர்கள் முன்னிலையில் அவர் என்னைத் தெரிந்து கொள்ளக் கூடாது தான். அப்படித் தெரிந்து கொள்ள வேண்டுமானால், அதற்கு மிக மிகப் பெரிய அந்தஸ்து - எதனாலும் குறையாத அந்தஸ்து - வேண்டும். என் பிரபு துவாரகா நாதனான

பார்த்தசாரதி அதைச் செய்தே காட்டினான். மன்னாதி மன்னன் அவன்; தேவாதி தேவன்! பிரம்ம விஷ்ணு ருத்ராதிகள் அவன் சேவைக்குக் காத்திருக்கிறார்கள். பட்டு பீதாம்பரங்களும் ரத்னங்களும் அவனை அலங்கரிக்கின்றன; பரிமள கந்தங்கள் அவனைச் சூழ்ந்திருக்கின்றன. அவன் என்ன செய்தான்?

கந்தல் துணியை முட்டுக்கு மேல் சுற்றிக் கொண்டு, கிழிசல் உத்தரீயத்தில் அவல் முடிச்சுடன், வற்றி உலர்ந்து எண்ணெய் காணாத தேகத்துடன் வந்த கிழட்டு அந்தணனைச் சகலரும் அறிய “என் தோழனே குசேலா!” என்று கட்டிக் கொண்டான் என் ஆப்தரான கண்ணன். இந்தப் பிரமுகர் மாதிரி கௌரவம் பங்கமாகி விடும் என்று அவன் பயப்படவில்லை. வற்றாத கௌரவம் அவனுடையது; கௌரவத்தின் பிறப்பிடமே அவன் தான். சர்வலோக சரண்யன் ஒருவனால் தான் அந்தக் காரியம் முடியும்.

எங்கும் தெரிந்து கொள்ளும் பெருமை ஈசுவரனுடையது. அதைப் பழகிக் கொள்கிறவர்களும் சர்வேசுவரனுடைய அம்சத்தைப் பெறுகிறார்கள். உண்மையில் தெரிந்தவர்களாக இருப்பதற்கு முகம் கூடத் தெரிந்திருக்கத் தேவையில்லை; நேரில் சந்தித்திருக்கவும் தேவை இல்லை. இருதயம் தெரிந்திருந்தாலே போதுமானது.

*****

## 55. போனால் வராது

“மக்கள் இருக்கிறார்களே, மொத்தத்தில் எல்லாருமே அசடுகள் சார்!” என்றார் என் பக்கத்திலே நின்றவர்.

"அந்த அசடுகளில் ஒருவனாகிய நான் அதை அப்படியே ஒப்புக் கொள்கிறேன்” என்றேன்.

நாங்கள் இரண்டு பேரும் டிராமில் போய்க் கொண்டிருந்தோம். சாயந்திர வேளை. எல்லோரும் ஆபீஸ் விட்டு வீடு திரும்பும் நேரமாகையால், டிராமில் கூட்டம் அசாத்யமாக இருந்தது. நாங்கள் இருவரும் உயரவிருந்து தொங்கிய தோல் பட்டைகளைப் பிடித்துக் கொண்டு நின்றோம்.

“இருந்தாலும் இந்த அசட்டுத்தனம் இருக்கிறதே, இதுவே அவர்களுடைய சந்தோஷத்துக்கும் காரணமாக இருக்கிறது. அது இல்லாவிட்டால், வாழ்க்கையே குட்டிச் சுவராகப் போகும்” என்றார் அவர்.

"எனக்குச் சைனா பஜாரில் கொஞ்சம் இறங்க வேண்டியிருக்கிறது. அது இல்லாவிட்டால், வாழ்க்கையே குட்டிச் சுவராகப் போகும்” என்றார் அவர்.

“எனக்கும் சைனா பஜாரில் கொஞ்சம் இறங்க வேண்டியிருக்கிறது” என்று மெள்ள நகர்ந்தேன்.

“எனக்கும்தான் கொஞ்சம் இங்கே வேலை” என்று அவரும் என் கூடவே வந்தார்.

“இன்று ராத்திரி வண்டியில் நான் கும்பகோணம் போகிறேன்.”

“ரொம்ப ஒத்துப் போச்சு, போங்கள்! நானும் கும்பகோணம்தான் போகிறேன்” என்று கூறினார் அவர்.

அவருடன் பேசியதில், அவருக்குக் கும்பகோணம் தான் வாசஸ்தலம் என்றும், அவர் பெயர் கிருஷ்ணசாமி நாயுடு என்றும் அறிந்தேன். இருவரும் சேர்ந்து கடைகளைச் சுற்றி வந்தோம். போகும் போதெல்லாம் அவர் ஓயாமல் பழைய பல்லவியையே பாடிக் கொண்டு வந்தார்:

"சுவாமி! மனுஷன் சந்தோஷப்பட்டுக் கொள்ள வேண்டுமென்றால் அசடாக இருந்துதான் ஆகவேண்டும். இல்லா விட்டால் சந்தோஷம், திருப்தி இரண்டும் போய் விடும். அதோ பாருங்கள், 'உயர்ந்த’ பனியன்கள் டஜன் ஒரு ரூபாய்க்கு ஒருவன் வாங்குகிறான். அது உயர்ந்த

பனியனாக இருந்தால், அவ்வளவு சரளமாகக் கிடைக்குமா? அல்லது, இவன்தான் விலை கொடுத்து வாங்கிவிட முடியுமா? இரண்டும் இல்லை. இதில் திருப்திப்பட வேண்டுமென்றால், அசடாக இருக்க வேண்டியிருக்கிறது!”

“ஆட்சேபணை என்ன?” என்றேன்.

“அதோ என்ன கூட்டம்?” என்று கையைக் காண்பித்துக் கொண்டு ஒரு கடையை நோக்கி கிருஷ்ணசாமி நாயுடு நகர்ந்தார். நானும் அவரைப் பின் தொடர்ந்தேன்.

அது ஒரு ஏலக் கடை. தொண்டை வறண்டு போக ஏலக் கம்பெனிக்காரன் கதறிக் கொண்டிருந்தான். அவன் கையில் பளபளவென்று ஒரு கெடியாரம் மின்னிற்று. இதைப் பார்த்தவாறு ஒரு சிறு கூட்டம் நின்று கொண்டிருந்தது.

“சார்! போனால் வராது! உயர்ந்த கெடியாரம்! பதினைந்து வருஷமானாலும் ரிப்பேர் இல்லாமல் போகும்! ஐம்பது வருஷமானாலும் கில்ட் அழியாமல் இருக்கும்... நாலே முக்கால், ரூபாய். ஒரு தரம்... இரண்டு தரம்... இரண்டு தரம்... கடைசி தரம்... கேளுங்கள், சார்! போனால் வராது!”

கிருஷ்ணசாமி நாயுடு, “அதை நான் வாங்கிக் கொள்ளப் போகிறேன்” என்றார் என்னிடம்.

“சார், இத்தனை நேரம் நீங்கள் சொல்லி வந்தது என்ன? இதுவும் அசடுகள் செய்யும் காரியம் அல்லவா? இப்போது நீங்களே இப்படிச் சொன்னால் -”

“பாருங்கள், எப்படிப் பளபளவென்று இருக்கிறது! நல்ல பண்டம் இப்படிப் பகட்டாக இருக்க மாட்டாது, வாஸ்தவம். இருந்தாலும் மக்களுக்குப் பகட்டென்றால் பிரியம், நான் சொல்வது புரிந்ததா?”

"புரிந்தது; ஆனால் -”

“அதில் பளபளப்பு இருக்கிறது. பளபளப்புக்கு விலை உண்டல்லவா? அதைக் கொடுத்து வாங்க ஐயாயிரம் அசடுகள் இருக்கிறார்கள், ஐயா! ஐந்நூறு வருஷத்துக்கு முந்தி இந்தக் கெடியாரம் உம்மிடம் இருந்தால் நீர் பெருமைப்படுவீரா, மாட்டீரா? அந்த மாதிரி மனிதர்கள் இன்றைக்கு 100க்கு 90 பேர் இருக்கிறார்கள். அவர்கள் சந்தோஷம் பெரிசா? மற்றவர்கள் சந்தோஷமா?”

இப்போது ஏலக்காரன், “கடைசித் தரம், நாலே முக்கால்!” என்றான்.

“ஐந்து ரூபாய்!” என்றார் நாயுடு. ஐந்து ரூபாய்க்கு மணியடித்தவுடன் அதை வாங்கிக் கொண்டார்.

நல்ல வேளையாக எங்களுக்கு ரயிலுக்கு ஒரு மணி அவகாசம்தான் இருந்தது; அதற்குள் அவர் பதினைந்து கெடியாரங்கள் ஏலம் எடுத்து விட்டார். அங்கிருந்து போகும் போது அவர் முகத்தில் ஆனந்தம் தாண்டவமாடிற்று.

நாங்கள் அன்று சேர்ந்தே பிரயாணம் செய்தோம்.

"இந்தக் கெடியாரம் அதிக நாள் சரியாக ஓடாது என்று சொல்லலாம்! ஆனால் பளபளப்பாக இருக்கிறதா, இல்லையா, சார்?” என்று கேட்டார் நாயுடு.

"தெரிகிறது!” என்று முடித்தேன்.

கும்பகோணம் ஸ்டேஷனில் இருவரும் பிரிந்தோம். அவர் ஒரு வழி போனார். என் அலுவலைப் பார்த்துக் கொண்டு நான் ஒரு வழி போனேன். போகும் போது, இது கெடியாரப் பித்துப் போலிருக்கிறது என்ற எண்ணத்துடன் சென்றேன்.

ஊரில் என் அலுவல்களை முடித்துக் கொண்டு, கடைத் தெரு வழியாக சாயந்திர வேளையில் வந்தேன். ஒரு கடை வாசலில் கூட்டமாயிருந்ததைக் கண்டு நெருங்கினேன்.

அது ஒரு ஏலக் கடை.

கடை வாசலில் ஒரு பெஞ்சியைப் போட்டுக் கொண்டு அதில் ஒரு ஆசாமி நின்று கொண்டு அலறினான்:

"பதினான்கு ரூபாய்...! பதினான்கே ரூபாய்...! கேளுங்கள், ஸார்! ஆயுள் காலம் பூராவும் உழைக்கும்...! கெடியாரம் போனாலும், பளபளப்பு போகாது, சார்! ஒருதரம் பதினாலு ரூபாய்... இரண்டு தரம் பதினாலு ரூபாய்... பார்த்து நிதானமாய்க் கேளுங்கள், சார்!”

நான் திடுக்கிட்டேன். குரல் பரிச்சயமாயிருந்தது; நெருங்கிப் பார்த்த போது ஏலம் போடுபவர் கிருஷ்ணசாமி நாயுடுவே என்று அறிந்தேன்.

“கடைசி தரம்... கேளுங்கள்... பார்த்துக் கொள்ளுங்கள்... பதினாலே ரூபாய். இருபத்தைந்து ரூபாய் பொறுமான இந்தத் தங்கக் கெடியாரம் பதினாலு ரூபாய். ஒரு தரம் பதினாலு ரூபாய்! இரண்டு தரம் பதினாலு ரூபாய்.”

“பதினைந்து!” என்றது ஒரு குரல்.

மணியடித்து, கெடியாரத்தை விற்று விட்டு, இன்னொரு கெடியாரத்தை எடுத்தார் நாயுடு.

முதல் நாள் மனித வர்க்கத்தைப் பற்றி நாயுடுகாரு சொன்னது அவ்வளவும் உண்மை என்று அறிந்து கொண்டு அங்கிருந்து நான் வெளியேறினேன்.

*****

## 56. நிறுத்து ஐயா, போதும்!

வர வர முழு மோசமாகி விட்டது, சார், புத்தகங்களில் புட்நோட் (Footnote) போடுகிற தொல்லை! சகிக்க முடியவில்லைன்னா,
கட்டோடு சகிக்க முடியவில்லை! பாருங்கள், அன்று குஞ்சு கபேயில் ராமஸ்வாமியும் ராமகிருஷ்ணனுமாகச் சேர்ந்து பேசிக் கொண்டிருக்கையில் –

***

'கபே' என்பது நூதன காப்பி ஹோட்டல். 'கபே'க்களிலும் சாதாரண காப்பி ஹோட்டல்களில் போலவே காப்பி கொடுக்கிறார்கள்; அதையும் எல்லோரும் சாப்பிடுகிறார்கள். காப்பி என்பது ஒரு பங்கு பாலும் ஒரு பங்கு டிகாக்ஷனும் சேர்த்துச் செய்யப்படுவது - அதாவது உத்சவரதிகள் இல்லாத நாட்களில். உத்சவங்கள் திருவிழாக் காலங்களில் பன்னிரண்டு பங்கு டிகாக்ஷனும் பன்னிரண்டு பங்கு பாலும் பன்னீராயிரம் பங்கு சுத்த பச்சைத் தண்ணீரும் சேர்க்கப்பட்டுச் செய்யப்படுகிறது, பாலும் டிகாக்ஷனும் சம பாகமாகச் சேர்க்கப்பட்ட போதிலும் எந்தப் பாதியில் எது இருக்கிறதென்று சொல்ல முடியாது. ஒரு சமயம் ஒரு 'கபே'யின் காப்பியை ஹெல்த் ஆபீஸர் சோதனை செய்த போது அதில் எந்தப் பாதியிலும் பாலாவது டிகாக்ஷனாவது இல்லை என்று கண்டு பிடிக்கப்பட்டது. இதற்குப் பதிலாக டீ என்னும் –

***

டீ (தமிழ் வார்த்தை. ஆனால் அகராதியில் இல்லை. புருஷர்கள் பெண்களைச் செல்லமாய்க் கூப்பிடும் போதும் சேர்த்து உபயோகப்படுத்தப்படுகிறது.) இந்த 'டீ' என்னும் வார்த்தைதான் என்று தவறுதலாக அர்த்தம் கொள்ள வேண்டாம். சினிமாக் காட்சியில் ஹாஸ்யமான இடங்கள் வரும் போதெல்லாம் ஆண் நடிகர் பெண் நடிகரைச் சொல்வாயடி!” “நிற்பாயடி!” “சொன்னேனடி!” “மு... தருவாயடி!” என்று சொல்வார்கள். பத்திரிகைகளில் விமர்சனம் எழுதும் போதும் இந்தச் சந்தர்ப்பத்தை ஒட்டிய படங்களைத்தான் பிரசுரிப்பார்கள். காதலன் காதலியின் கையைப் பிடித்துக் கொண்டு, "ஒரு தரம்” என்று சொல்லுவதைப் போல் முகத்தைச் சுளித்துக் கொண்டிருப்பதும், காதலி தப்பித்துக் கொள்ள வழி ஏதாவது இருக்கிறதா என்று நாலாபுறமும் சுற்றிப் பார்ப்பதும்தான் அடிக்கடி வெளியாகும் படங்கள். காதலன் காரியத்தைச் சாதித்துக் கொண்டானா, அல்லது பெண்மணி தப்பியோடு விட்டாளா என்பது நமக்குத் தெரிவதில்லை. நன்றாய் நடிக்கவில்லை என்று மட்டும் புகார் செய்து

விடுகிறோம் லகுவாய். நல்ல கதையாய் மூளையை உபயோகப்படுத்தி எழுதும் ஆசிரியர்கள் நம் நாட்டில் ஜனனமாகி –

***

உயர்தர கதைகள் ஆசிரியர் - "வேதன்" என்பவர் - 1933-ம் வருஷத்திலிருந்து 1939-ம் வருஷத்திற்குள் உலகப் பிரசித்தியடைந்து ரூ. 2730 சிறுகதைகளினாலேயே சம்பாதித்தார். அடாபுடிச் செலவினால் ரூ. 2729-15-11 செலவழித்தார். மணிபாக்ஸ் அடியிலிருந்த இடுக்கில் ஒரு தம்படி பதுங்கிக் கொண்டதனால் அதையும் செலவழிக்காமல் இருந்து விட்டார். இன்னும் மிகவும் ரசமான கதைகள் கட்டுரைகள் இவற்றுக்கும் –

***

ரசங்களிலொன்று மைசூர் ரசமெனப்படும். எந்த ரசத்துக்காவது பேர் தெரியாமல் இருந்தால், அது இதுதான் என்று நிச்சயமாய்ச் சொல்லி விடலாம். மைசூருக்கு வாசனை கிடையாதல்லவா? ஆகையால் இதற்கும் வாசனைத் தேவையில்லை போலும்! எப்படி நமது ஹோட்டல்களின் காப்பியில் காப்பியே இல்லையோ அதே போல் வரவர மைசூர் ரசத்தில் ரசமே இருப்பதில்லை. நல்ல ரசமாக இருப்பதற்கு பாக சாஸ்திரம் ஒன்றை –

***

பாக சாஸ்திரத்தில் கண்டபடி தராசு படிக்கல்லுடன் அடுப்பங்கரையில் உட்கார்ந்து கொண்டு, சாமான்களை அடுப்பில் நிறுத்துப் போடவும், கடைசியில் கையில் கிடைக்கும் பதார்த்தம் எப்படியிருந்தாலும், பாக சாஸ்திரத்தில், "இப்போது எவ்வளவு நன்றாயிருக்கிறது, நீங்கள் செய்திருப்பது!" என்று போட்டிருப்பதைப் பார்த்துத் திருப்தி அடைய வேண்டியதுதான். இல்லாவிட்டால், பாக சாஸ்திரத்தில் ஒவ்வொரு பட்சணத்துக்கும் அடியில் போட்டிருக்கும் 'புட் நோட்' (v) foot noteஐக் கவனித்து –

***

(v) 'புட்நோட்' - அப்பாடா! இது ஒரு தொல்லைதான் ஸார்! எனக்குத் தெரிந்து ஓர் ஆசாமி இருந்தான். அவன் ஒரு விஷயத்தை நன்றாய்க் கற்றறிந்து கொள்ள வேண்டுமென்று, அதன் அடியில் இருக்கும் 'புட் நோட்'டைக் கவனித்தான். அதற்காக இன்னொரு 'புட் நோட்'டையும், இன்னொன்றுக்காக இன்னொன்றையுமாக இப்படி அவன் மேலும் மேலும் பார்த்துக் கொண்டே போய்த் திக்கு முக்காடி நிலை தெரியாமல்

தவித்ததை கண்ட அவன் உற்றார் உறவினர், இனி உயிருடன் அவன் மீண்டுவரப் போகிறதில்லையென்று தீர்மானித்து விட்டனர். இந்தப் 'புட் நோட்'டுகளினால் ஏற்படும் தொல்லை என்னவென்றால், ஒரு வாக்கியமாவது பூராவும் வாசிக்க முடிவதில்லை. இந்தப் பக்கத்திலிருந்து அடுத்த பக்கம், அதிலிருந்து அதற்கடுத்தது, இப்படியாகக் கடைசிப் பக்கம், அதிலிருந்து இன்னொரு புத்தகம், அதிலிருந்து ஒவ்வொன்றாக வாசக சாலையிலுள்ள அவ்வளவு புத்தகங்கள் - இவ்வளவையும் படிக்கிறோம். கடைசியில் நாம் எங்கு ஆரம்பித்தோம், பைத்தியமே பிடித்து விட்டதா என்றுகூடத் தெரியாமல் இருக்கிறது. ஒருகால் நாம் பைத்தியம் தானோ என்னவோ? இதை நிறுத்த ஒரு வழி உடனே செய்தாலொழிய, "குஞ்சு கபே"யில் ஆரம்பத்தில் ராமஸ்வாமியும் ராமகிருஷ்ணனும் அன்று என்ன தான் பேசிக் கொண்டார்கள் என்று நமக்குத் தெரியவே போகிறதில்லை!

நிறைந்தது